இந்திய இலக்கியச் சிற்பிகள்

# ஹரிநாராயண ஆப்தே

ஆங்கில மூலம்:

ஆர். பி. ஜோஷி

தமிழாக்கம்:

சரோஜினி பாக்கியமுத்து



சாகித்திய அக்காதெமி

*Hari Narayana Apte*—Tamil translation by Sarojini Packiamuthu of R. B. Joshi's monograph in English, Sahitya Akademi, New Delhi (1985) Rs. 4.


First Published : 1985

சாகித்திய அக்காதெமி

*தலைமை அலுவலகம்:*

*ரவீந்திரபவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001*

*கிளை அலுவலகங்கள்:*

*29, எல்டாம்ஸ் சாலை, தேனாம்பேட்டை, சென்னை 600 018*

*பிளாக் V–B, ரவீந்திர சரோபர் ஸ்டேடியம், கல்கத்தா 700 029*

*172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,*
*தாதர், பம்பாய் 400 014*

ரூ. 4.

*அச்சிட்டோர்: டயோசிசன் அச்சகம், சென்னை 600 007*

# உள்ளடக்கம்



உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்தகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து இந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச் சிற்பம்—கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி: நேஷனல் மியூஸியம், புது டில்லி.)

## அத்தியாயம் 1

# பின்னணி

ஹரிநாராயண ஆப்தே மராத்தி நாவலாசிரியர்களிலே முதன்மையானவர் என்பது இன்று ஒருமுகமாக ஒப்புக்கொள்ளப் பட்டுள்ளது. மகாராட்டிரத்திலே இவரை ஹரிபாவ ஆப்தே என்றே பொதுவாக அழைக்கின்றனர். இவரது முதல் நாவலான 'மத்லி ஸ்திதி' 1885-ல் வெளிவந்தவுடன் அது பலரைப் பிரமிப்பில் ஆழ்த்தியது. 'பூனே வைபவ்' என்ற பூனே வார இதழ் ஒன்றில் அது 1883ஆம் ஆண்டில் தொடர்கதையாக வரத்தொடங்கியது. நாவலாசிரியரின் பெயர் பிரசுரிக்கப்படவில்லையாதலால், எழுது வது யாரெனக் கேட்டுப் பத்திரிகாலயத்துக்குக் கடிதங்கள் வந்து குவிந்துவிட்டன. நாவலைப் புகழ்ந்து எழுதியவர்களில் பலர் மகாராட்டிரத்தின் பொது வாழ்க்கையிலும் இலக்கியவுலகிலும் முன்னணியில் நின்றவராவார். ஹரிபாவருக்கு அப்போது வயது பத்தொன்பதுதான். பூனே தக்காண கல்லூரியில் முதல் வகுப் பில் படித்துக்கொண்டிருந்தார்.

அவரது நாவல்கள்பற்றியும் நாவலாசிரியர் வரிசையில் அவரது இடம்பற்றியும் தெரிந்துகொள்வதற்குமுன், அவரது குடும்பம், அவர் பிறந்து வளர்ந்த வட்டாரம், கல்வி, இலக்கியப்பணிக்கு அவர் தம்மை ஆயத்தப்படுத்திக்கொண்ட சூழல் முதலியனபற்றி அறிந்துகொள்ளுவது அவசியமாகும்.

ஹரிபாவ ஆப்தே 1864ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 8ஆம் தேதி மத்தியதரக் குடும்பமொன்றில் பிறந்தார். குடும்பம் கௌரவ மானதாயினும் பணவசதி மிகுந்ததல்ல. ஹரிபாவரின் தந்தை நாராயணராவ் குடும்பத்தில் மூத்தவர். அவருக்கு மூன்று தம்பியரும் இரண்டு தங்கையரும் இருந்தனர். நாராயணராவ் தமது பதினாறும் வயதில் தந்தையை இழந்தார். அப்போது அவருக்குத் திருமணம் ஆகியிருந்தது. தந்தை இறந்ததால் குடும் பம் ஏழ்மையுற்றது. எனவே நாராயணராவ் படிப்பை நிறுத்தி விட்டு பம்பாயில் தபால் வாரியத்தில் ஒரு சின்ன வேலையில் சேரவேண்டியதாயிற்று. அவரது குறைந்த ஊதியத்தைக்கொண்டு தான் பத்துப் பன்னிரண்டு பேரடங்கிய அந்தக் குடும்பம் காலந் தள்ளியது. ஹரிபாவரின் சிறிய தந்தைக்குப் பதினாலு வயதில்

திருமணமாயிற்று. அவர் சிறப்பாகப் படித்துத் தேறி பம்பாயில் வழக்குரைஞராகப் பணியாற்றி நல்ல வருவாய் ஈட்டினார். ஹரி பாவரின் தொடக்கக் கல்வி பம்பாயில் நடந்தது. தாகுர்துவாரத் தில் ஒரு பள்ளியிலும் மிஷன் பள்ளியொன்றிலுமாக அதை முடித்த பின்னர் உயர்நிலைக் கல்விக்குப் பூனே வந்தார். பூனேயில்தான் அவர் கல்வியின் உண்மைப் பயனைப் பெற்றதாகச் சொல்ல வேண்டும். பூனேயில் அவர் இரண்டு பள்ளிகளில் கல்வி கற்றார். 1878—80 வரை பூனா உயர்நிலைப் பள்ளியிலும் 1880—82 வரை புது ஆங்கிலப் பள்ளியிலும் கற்றார். மகாராட்டிரத்தின் தலை சிறந்த சிந்தனையாளர்களின் தாக்கம் அவருக்கு இந்த ஆண்டுகளில் தான் நிகழ்ந்தது. அதன் பயனாக அவரது அறிவும் குணமும் வளர்ந்து உருவாகிற்று. புது ஆங்கிலப் பள்ளியில் விஷ்ணுசாஸ்திரி சிப்லங்கர், கோபால கணேச அகார்கர், பால கங்காதர திலகர் ஆகிய மேதைகள் அப்போது ஆசிரியர்களாகப் பணியாற்றினர். பள்ளிமட்டிலுமில்லாமல் மகாராட்டிரம் முழுமையிலும் அவர் களது சக்திவாய்ந்த எழுத்துக்கள் பெரும்பாதிப்பை நிகழ்த்தி வந் தன. அந்த பாதிப்பின் எச்சமிச்சங்கள் இப்போதும் அந்த மாநிலத் தில் நிலவிவருவதாகவே கூறலாம்.

பள்ளிப் பருவத்தில் ஹரிபாவர் அறிவுப்பசி மிகுந்தவராய் ஏராளமான புத்தகங்களை வாசித்தார். பாடதிட்ட எல்லைக்கப்பா லும் படித்துவந்தார். அப்பருவத்திலேயே அவர் முக்கியமான சமஸ்கிருத நாடகங்களையும் காவியங்களையும் பலமுறை வாசித்திருந் தார். அவர் காளிதாசரின் சாகுந்தலத்தைப் பதினொரு முறைகள் படித்திருந்தார், பாணரின் காதம்பரி, தண்டியின் தசகுமார சரித்திரம் முதலியவற்றையும் வாசித்திருந்தார். ஐரோப்பிய எழுத்தாளர்களையும் படித்தார். ஷேக்ஸ்பியர், மில்டன், ஸ்காட்டு, ஷெல்லி, கீட்ஸ், மோலியர், தாக்கரே, டிக்கன்ஸ், ஜேன் ஆஸ்டின் என்று பலபேர்களுடைய எழுத்துக்களை வாசித்தார். பதினெட்டு வயதில்—மெட்ரிகுலேஷன் படிப்பு முடிக்கு முன்னதாகவே— அவரது திறனாய்வுத்திறன் புலனாகத்தொடங்கிற்று. அவரது ஆசிரி யர்களிலொருவரான அகார்கர் அப்போது ஷேக்ஸ்பியரின் ஹாம் லெட் நாடகத்தை 'விகார விலாசிதம்' என்ற தலைப்பில் மொழி பெயர்த்திருந்தார். ஹரிபாவர் எழுபத்திரண்டு பக்கங்களிலே அதற்கொரு மதிப்புரை எழுதினார். அது ஒன்றும் மொழிபெயர்ப் பாளருக்குச் சாதகமானதல்ல. இருப்பினும் அகார்கர் தாராள மனதுடன் தமது மாணவனின் திறமையைப் பாராட்டினார். அது போலவே சமஸ்கிருத ஆங்கில வகுப்புக்களில் ஆசிரியர்கள் தரும் விளக்கங்களை ஒப்புக்கொள்ளாமல் ஹரிபாவர் வேறு விளக்கங்கள் சொல்லுவார். ஆசிரியர்களும் அவற்றை ஏற்றுக்கொள்ளுவார்கள்.

பள்ளிப் பருவத்தின் தொடக்க காலத்தில் விஷ்ணுசாஸ்திரி சிப்லங்கரின் தாக்கம் ஹரிபாவர்மீது அதிகமாக இருந்தது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் கடைசிப் பகுதியிலே மகாராட்டிரத்து மக்களின் அறிவும் உணர்வும் ஒரு கிளர்ச்சி பெற்றுப் பொங்கின. அக்காலப் பகுதியில்தான் மேனுட்டுக் கல்வியின் விளைவுகள் வெளிப்படையாகப் புலனுகி வந்தன. விளைவு களில் சில சிறப்பாக இல்லை. புதுப் படிப்புக்காரர் பலர் குடி போன்ற வேண்டாத பழக்கங்களை மேற்கொண்டனர். பொருந்தாத வேறு சில மேனுட்டு வழக்கங்களையும் தழுவினர். சுயவிருத்தி என்பது அவர்கள் வாழ்க்கையின் பெரிய அம்சமாகவிருந்தது. சமுதாயக் கடமைகளை மறந்து பொறுப்பற்றவராய் வாழ்ந்தனர். சிந்தனைத் திறமின்றி மேற்குலகைக் குருட்டாம் போக்காகப் பின்பற்றியவர் களின் போக்கு அப்படி இருந்தது. ஆயினும் மேனுட்டுக் கல்வி பெற்ற அறிவு ஜீவிகள் சிலர் மாறிவருகின்ற சூழ்நிலையில் அதை ஆக்கபூர்வமாய் எடைபோட்டு வந்தனர். அப்படிப்பட்டவர்கள் இரண்டு பிரிவாக இருந்தனர். ஒரு பிரிவினர் மேனுட்டுக் கல்வியின் நன்மைகளை வரவேற்றனர். ஆயினும் அவற்றின் தாக்கத்தால் இந்திய சமுதாய அமைப்பு மாறவேண்டியதில்லை; அதன் சமய நம்பிக்கைகளும் மாறவேண்டியதில்லை; எனவே, நமது சமுதாயம் சமயம்பற்றிய மறு பரிசீலனை தேவையில்லை என நம்பினர். இப் பிரிவினரின் தலைவர் விஷ்ணுசாஸ்திரி சிப்லங்கர் ஆவார். இவர் எழுத்து வன்மை மிக்கவர். குத்தலும் நையாண்டியுமாய் எழுது வதில் திறன் பெற்றிருந்தார். சீர்திருத்தக்காரரைப்பற்றி வன்மை யான கண்டனங்கள் எழுதிவந்தார். சீர்திருத்தக்காரர் அனை வரும் முட்டாள்கள் போலவும், நாட்டுப்பற்று சிறிதுமில்லாமல் அந்நிய சர்க்காருக்கு ஜாலர்தட்டிப் பிழைக்கின்ற மாய்மாலக்காரர் போலவும் நம்பும்படியாக செய்துவந்தன அவரது எழுத்துக்கள். சர்க்கார் பள்ளியான பூனு உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றி வந்தமையால் அவரும் ஓர் அரசு ஊழியரே. ஹரிபாவர் அப் பள்ளியில் படித்த காலத்தில்தான் விஷ்ணுசாஸ்திரி அவருக்கு அறிமுகமானுர். பின்னர் 1880–ல் விஷ்ணுசாஸ்திரி அரசு உத்தி யோகத்தை இராஜிநாமாச் செய்துவிட்டு தனியார் பள்ளியொன்று தொடங்கி நடத்தினுர். அதுதான் புது ஆங்கிலப் பள்ளியாகும். வேறு பல நிறுவனங்களையும் தொடங்கிவைத்த சிறப்பு அவருக்கு உண்டு. மராத்தியில் கேசரியும், ஆங்கிலத்தில் மராத்தாவும் அவர் ஆரம்பித்த வார ஏடுகளே. அவ்விரண்டு பத்திரிகைகளின் நோக்கம், இந்தியர்களிடையே நாட்டுப்பற்றை வளர்ப்பதுவும், பொதுப் பிரச்னைகள் குறித்து சுதந்திரத்துடன் அவர்கள் கருத்துக்களை வெளியிடும் வாய்ப்புக்களை அளிப்பதுவும் ஆகும்.

படித்த இளைஞர்கள் பலரை அப்போது விஷ்ணுசாஸ்திரி ஈர்த்துவந்தார். அவர்கள் அவரால் எழுச்சி பெற்றனர். தாக்கங்களை எளிதில் ஏற்கக்கூடிய இயல்பும் கூரிய அறிவும் கொண்டிருந்த ஹரிபாவர் தமது இளம் பருவத்தில் அவரால் ஆகர்ஷிக்கப்பட்டதில் வியப்பு எதுவுமில்லை.

இனி அறிவு ஜீவிகளின் அடுத்த பிரிவினரான சீர்திருத்தக்காரரைப்பற்றிக் கவனிப்போம். அவர்களும் தங்கள் கருத்துக்களை வெளியிடத் தொடங்கியிருந்தனர். அவர்களது கொள்கையாவது: நமது பண்பாட்டு மரபுகளும், வாழ்க்கை முறைகளும் ஒருசில குறைபாடுகளையும் தீங்குகளையும் கொண்டுள்ளன. முதற்கண் நாடு அடிமைப்பட நேர்ந்ததன் காரணமே அவைதான். எனவே முதலில் அக்குறைபாடுகளும் தீங்குகளும் களையப்படுதல்வேண்டும். அப்போதுதான் நமது மக்கள் ஆரோக்கியம் பெறுவார்கள்; அவர்களது வாழ்க்கை வன்மையுடையதாகும்; முற்போக்கு வளரவேண்டும்; பகுத்தறிவும் அதன் துணையான ஆராய்வுப் பான்மையும் நமது மக்களுக்குத் தேவை. இவையே சீர்திருத்தக்காரரின் கருத்துக்களாகும். அவர்களின் தலைவர் கோபால கணேச அகார்கர் ஆவார். வெகு உறுதியுடன் தமது கட்சிக்குத் தலைமை தாங்கினார் அவர்.

இவ்விரு சாராருக்கும் இடைப்பட்ட ஒரு கருத்துப்போங்கும் இயங்கிவந்தது. ஜஸ்டிஸ் மகாதேவ கோவிந்த ரானடேயின் தலைமையில் அது இயங்கியது. பிரித்தானிய ஆட்சியும் அது கொண்டுவந்திருக்கும் புதிய கல்விமுறையும் தீமையானவையல்ல; மாறாக அவற்றை ஒரு வரப்பிரசாதமாகக் கருதவேண்டும்; ஆட்சி ஒருபெரும்போக்கிலேயே நடந்துவருகின்றது. அறஞ்சார்ந்ததாகவும் மக்கள் உரிமையைக் கவனத்தில் கொண்டதாகவும் இருக்கின்றது. எனவே மொத்தத்தில் அது நன்மைகள் விளைவிக்கக்கூடியதே என அவர்கள் கூறிவந்தனர். இவ்வகுப்பினர் அந்நிய ஆட்சியின் அவலங்களை உணராதவர்கள் என்று கூறிவிட முடியாது. அரசு பல சந்தர்ப்பங்களில் மக்களின் துயரத்தைக் கண்டுகொள்ளுவதில்லை; அவர்களது தேவைகளையும் கோரிக்கைகளையும் அலட்சியம் செய்துவருகிறது என்பதையெல்லாம் அவர்களும் உணர்ந்தவர்களே. இருப்பினும் எதிலும் அவசரம் கூடாது; நிதானமாக இயங்கவேண்டும் என்பது இவர்கள் கொள்கையாக இருந்தது. சமுதாயம், சமயம் குறித்த முற்போக்கு மாற்றங்களை நிதானமாகவே செயல்படுத்தவேண்டும் எனக் கூறிவந்தனர்.

விஷ்ணுசாஸ்திரி சிப்லங்கர் 1882-ல் தமது முப்பத்திரண்டாம் வயதில் காலமாகிவிட்டார். ஹரிபாவரின் இளம் உள்ளத்தையும் கருத்தையும் இவர் வெகுவாகக் கவர்ந்திருந்தார். துக்கமிகுதி

யால் ஹரிபாவர் அவர்மீது 'சிஷ்யஜன—விலாபம்' என்ற தலைப்பில் ஒரு புலம்பற்பாடல் எழுதினார். அதன் ஓராயிரம் பிரதிகளும் இரண்டே நாளில் விற்றுப்போயின.

அகார்கரும் புது ஆங்கிலப் பள்ளியில் ஹரிபாவரின் ஆசிரியர். ஆனால் அவரது இலக்கியக் கொள்கைகளும் சீர்திருத்தக் கருத்துக் களும் அப்போது ஹரிபாவருக்கு உடன்பாடாக இல்லை. அவரது மொழிபெயர்ப்பான விகார விலாசிதத்துக்கு அவர் பாதகமான மதிப்புரை எழுதியிருந்தார். அந்நிகழ்ச்சிக்கு ஓராண்டு முன்னதாக வும் அவர்களிடையே இலக்கிய சர்ச்சை ஒன்று நடந்தது. காளி தாசர், பவபூதி ஆகிய இருவரில் யார் சிறந்தவர் என்பது சர்ச்சை. காளிதாசர்தான் சிறந்தவர் என்பது அகார்கரின் கருத்து. ஹரி பாவரோ பவபூதி அவரைப் பார்க்கிலும் மேம்பட்டவர் என்று வாதிட்டார். சமஸ்கிருத இலக்கியங்களை ஹரிபாவர் நன்கு படித் திருந்தார்.

ஆனால் நாளடைவில் ஹரிபாவர் அகார்கரின் கருத்துக்களை மதிக்கத் தொடங்கினார். 1882-ல் கோவிந்த வாசுதேவ காந்திகர் ஹரிபாவருக்கு அறிமுகமானார். பின்னர் அவரது மனைவியான திருமதி காசிபாய் காந்திகரையும் சந்தித்தார். அப்போது காந்திகர் நீதித் துறையில் பணியாற்றி வந்தார். அவர் ஒரு நல்ல சிந்தனையாளர். ஏராளமாக வாசித்திருந்தார். முற்போக்குக் கருத்துக்களும், எதையும் நிதானமாகச் சீர் தூக்கும் சமநிலைப் போக் கும் கொண்டிருந்தார். அவர் தம் மனைவிக்குக் கல்வி அளித்தார். எழுதப் படிக்கவும்கூடப் பெண்களுக்குப் பல இடைஞ்சல்கள் இருந்த அந்த நாளில், இது ஒரு பெரிய முயற்சியே. அந்த அம்மை யாரும் நன்கு கற்று பல்வகைச் சிறப்புக்களுடன் மிளிர்ந்தார். ஹரி பாவருக்கு அந்த அம்மையார்மீது பெருமதிப்பு உண்டாயிற்று. அவரது கருத்துக்களையும் மதித்தார். அவ்வப்போது அவரோடு கருத்து பேதம் ஏற்பட்டாலும் அதையும் தயக்கமின்றி நேரடி யாகவே சொல்லிவிடுவார். காந்திகர் ஹரிபாவருக்கு ஜே. எஸ். மில் (J. S. Mill) எழுதிய நூல்களை—குறிப்பாக 'பெண்ணடிமை' (Subjection of Women)யை அறிமுகம் செய்வித்தார். ஹரிபாவர் அந்த நூலை பல முறைகள் படித்தார். அதன் பயனாக அவர் கருத்துக்கள் பெரிதும் மாறலாயின. பின்னர் ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் (Herbert Spencer), மார்லி (Morley) ஆகியோருடைய எழுத்துக்களையும் படித்தார். அவற்றின் விளைவாகவே அவர் அகார்கரது கொள்கைகளுடன் உடன்பாடு கொள்ளலானார். அகார்கரை வியந்து பாராட்டவும் தொடங்கினார். 1888-ல் அகார்கர் சொந்தமாகப் பத்திரிகை தொடங்கிய வேளையில் ஹரி பாவர் முற்றிலும் மாறியிருந்தார். அப்பணியில் அகார்கரோடு

சேர்ந்து உழைத்தார். பிற்போக்குவாதிகளை அம்பலப்படுத்துவதில் பெரும்பங்கு கொண்டார். அகார்கர் ஒரு சிறந்த பேராசிரியர், மகான் என்று கருதினார்.

இக்காலத்தில் ஹரிபாவரை ஈர்த்தவர்களில் கோபால கிருஷ்ண கோகலேயும் ஒருவராவார். கோகலே அப்போது தக்காணக் கல்விச் சங்கத்தில் சேர்ந்து பெர்குஸன் கல்லூரி (Fergusson) யில் பணியாற்றி வந்தார். எனவே அரசியலைப் பொறுத்தவரையில் ஹரிபாவர் மிதவாதிகளுடன் இருந்துவந்தார். சமுதாயம் பொறுத்தவரையிலோ அவர் மனம் சீர்திருத்தவாதிகளுடன் இணைந்திருந்தது. பின்னர் அவர் கோகலேயின் நெருங்கிய நண்பரானார். அவர் மூலமாக ரானடேயுடனும் அவருக்கு நெருங்கிய தொடர்பு உண்டாயிற்று. ரானடே அப்போது தக்காண சபையை நிறுவியிருந்தார். பொதுமக்கள் ஆர்வங்காட்டும் எல்லாப் பிரச்னைகளையும் ஆராய்வதுவும், அவர்களது மனக் குறைகளை வெளியிடுவதுவும் இச்சபையின் நோக்கங்களாகும். கோகலே வெளிநாடு சென்றிருந்த காலங்களில் ஹரிபாவர் சபையின் துணைச் செயலாளராகப் பொறுப்பேற்று பணி செய்தார்.

புத்தகங்கள் வாசிப்பதில் ஹரிபாவர் பெரும் வேட்கைகொண்டிருந்தார். அப்பழக்கம் அவரது ஆயுட்காலம் முழுவதும் நீடித்தது. மில் எழுதிய 'பெண்ணடிமை'யை அவர் மீண்டும் மீண்டும் பல முறைகள் படித்தார் என்பது முன்பே சொல்லப்பட்டது. அதுபோலவே மார்லி எழுதியவற்றை அவர் ஒரு வரியும் விடாது படித்ததாக அவரே ஒரு முறை கூறினார். தாய்மொழி மராத்தியும், பாரத மொழி சமஸ்கிருதமும் தவிர அவர் நன்கறிந்த இன்னொரு இந்திய மொழி வங்காளம் ஆகும். ஒரு வங்காளியுடன் அவர் அம்மொழியிலே வாதிட்டு வெற்றியடைந்தார். ஐரோப்பிய மொழிகளில் ஆங்கிலம் தவிர, பிரெஞ்சும் ஜெர்மானியமும் அவர் நன்கறிந்திருந்தார். ஜெர்மானியத்தில் ஒரு புத்தகம் வரவழைத்து அதை வாசித்ததாக அவர் கடிதங்களினின்று தெரியவருகின்றது. மொத்தத்தில் பலதரப்பட்ட நூல்களையும் ஏராளமாக வாசித்திருந்தார். முக்கியமான நூல்களை ஆழ்ந்து படித்திருந்தார். பல்கலைக் கழகப் பட்டம் பெறமுடியாமல் போனாலும் அவரிடம் புலமை அதிகமிருந்தது. பல்கலைக் கழகப் பட்டம் இல்லாதது அவருக்கு நீண்டகாலம் மனக் குறையாகவே இருந்து வந்தது. ஆனால் பம்பாய்ப் பல்கலைக் கழகம் மராத்தி எம்.ஏ. பரீட்சைக்கு அவரைத் தேர்வாளராக நியமித்தபோது அந்தக் குறையும் தீர்ந்துவிட்டது.

ஆனால் ஹரிபாவர் ஒருபோதும் புத்தகப் புழுவாகவோ தந்தக் கோபுரவாசியாகவோ இருந்ததில்லை. பொது வாழ்க்கையில் நல்ல

ஈடுபாடு கொண்டிருந்தார். பூனேயில் பிளேக்கு நோய் பரவிய காலங்களில் அவர் தொண்டராக உழைத்தார். அபாயகரமான இடங்களிலும்கூட அவர் அடிக்கடி தொண்டு புரிந்தார். பூனே முனிஸிபாலிடிச் சங்கத்தின் உறுப்பினராகப் பல ஆண்டுகள் இருந்தார். ஒரு தடவை சங்கத்தின் தலைவராகவும் பொறுப்பு வகித்தார். 1890-ல் காரமானுக் என்ற சொந்தப் பத்திரிகையைத் தொடங்கி நடத்திவந்தார். அதன் பின்னர் அவர் எழுதியவை அனைத்தும் காரமானுக்கில் மாத்திரமே பிரசுரமாயின. அகார்கர் காலமாகிவிட்டபின் அவரது பத்திரிகையான சுதாரக்கின் பதிப்பு வேலையில் உதவிகள் புரிந்தார். தயானப் பிரகாசம் என்ற முற்போக்கு நாளேட்டு வேலைகளையும் கவனித்து வந்தார். எனவே அவரது வாழ்க்கை முழுமையானது. அவரது நண்பர் குழாமும் விரிவானது. அவர்களோடு அளவளாவுதலையும் ரசித்து மகிழ்ந்தார்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் கடைசிப் பகுதியிலே மகாராட்டிரத்தில் சமுதாய உணர்வும் புதிய அறிவும் பொங்கிப் பிரவகித்தது. அந்த இருபத்தைந்து ஆண்டுகளிலே 1885-க்கும் 1895-க்கும் இடைப்பட்ட பத்தாண்டுகள் கொந்தளிப்பு மிகுந்தவையாகும். இந்த ஆண்டுகளில் உருவான சில பிரச்னைகளால் நண்பர்கள் விரோதிகளாயினர். ஒத்துழைக்கச் சபதம் செய்து கொண்டவர்கள் மனம் வேறுபட்டுப் பிரிந்தனர். பிரச்னை பொதுக்கூட்டங்களிலும் பத்திரிகைகளிலும் அலசப்பட்டு, சர்ச்சைகளாகத் தொடங்கி சண்டைகளாக முடிந்தன. மகாராட்டிரத்தின் படித்த சமுதாயம் மொத்தமும் இரு கூறுகளாகப் பிரிந்து நின்றது. சமுதாய சீர்திருத்தங்கள் தான் முக்கிய பிரச்னையாகும். அவற்றை ஆதரித்தவர் ஒரு கட்சி, எதிர்த்தவர் அடுத்த கட்சி. குழந்தை மணம், கட்டாயக் கைம்மை, பெண் கல்வி என்ற சில விஷயங்களை மையமாகக் கொண்டிருந்தது அப்பிரச்னை. இந்து சமுதாயத்தில் பெண்களின் உரிமைகளும் அந்தஸ்தும் என்ற தலைப்பில் அவையனைத்தையும் ஒரே பொருளாகச் சுருக்கிவிடலாம்.

குழந்தை மணம், கட்டாயக் கைம்மை இவை குறித்து பைராம்ஜி மலபாரி சில பிரசுரங்கள் எழுதி 1884–85-ல் வெளியிட்டார். அவற்றைப் படித்துப் பொதுமக்கள் கிளர்ச்சியடைந்தனர். பிரச்னைகள் குறித்துத் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென மலபாரி இந்தியத் தலைவர்களுக்கு விண்ணப்பம் விடுத்தார். அதோடு நில்லாமல் அப்பிரசுரங்களை இங்கிலாந்தின் தலைவர்கள் சிலருக்கும் அனுப்பி விண்ணப்பித்துக்கொண்டார். அதன் விளைவாக மகாராட்டிரத்தின் வைதிகர்கள் மத்தியிலே புயல்

உருவாயிற்று. இந்துக்களின் பழக்கவழக்கங்களிலே தலையிடுவதற்கு மலபாரியின் தகுதிகளும் உரிமைகளும் என்ன என்று கேட்கப் பட்டது. ஆயினும் மொத்தத்தில் திருமண வயது ஏற்றம் பற்றித் தீவிரமாக விவாதிக்கப்பட்டதன் பயனாக, அந்த தசாப்தத்தின் முடிவில் அதைச் சட்டமாகக் கொணரும் நிலை உருவாயிற்று. அப் பிரச்னையை ஆதரித்தும் எதிர்த்தும் பல கூட்டங்கள் நடந்தன. கையெழுத்துக்கள் சேகரிக்கப்பட்டன. விண்ணப்பங்கள் அனுப்பப் பட்டன. அது குறித்த கருத்துக்கள் மக்களிடையே மிகக் கடுமை யாக முரண்பட்டிருந்தமையால், சர்ச்சைகளின்போது பலர் மரியாதையையும் பண்பையும்கூட மறந்துவிட்டனர். ஆயினும் முடிவில் திருமண வயதேற்றம் என்ற மசோதா நிறைவேற்றப் பட்டு 1891-ல் அது சட்டமாகியது. இந்தியன் பீனல் கோடின்படி (Indian Penal Code) 1886 வரை திருமண வயது பத்து என்றிருந் தது. இப்போது பன்னிரண்டாயிற்று.

இது குறித்த சர்ச்சைகள் இரு முனையில் அலசப்பட்டன. ஒன்று இந்தச் சீர்திருத்தம் தேவைதானா என்பது. அடுத்தது தேவை அல்லது உகந்தது என்று வைத்துக்கொண்டாலும் அதை ஒரு அந்நிய சர்க்கார் சட்டம் போட்டு அமல்படுத்தலாமா என்பது. ஆயினும் சட்டம் நிறைவேறியதும் சர்ச்சைகள் அடங்கிப்போயின.

இச்சமயத்தில் இன்னொரு பிரச்னையும் விவாதிக்கப்பட்டது. அது ஒரு தனி மனிதரின் வாழ்க்கை குறித்ததாக இருந்தபோதிலும் பொதுநலன்களையும் உள்ளடக்கியதாகும். 1884-ல் தாதாஜி என்ற ஒருவர் தமது மனைவியான ராக்கமாபாய் தம்மோடு வந்து வாழ உத்தரவாக வேண்டுமென கோர்ட்டில் வழக்குப் போட்டார். பல காரணங்களை எடுத்துக்கூறி ராக்கமா அவரோடு வாழ்வதற்கு மறுத்தாள்.

கீழ்க் கோர்ட்டு வழக்கை விசாரணைபண்ணி தாதாஜிக்குப் பாதகமாய்த் தீர்ப்பளித்தது. அவர் மேல் கோர்ட்டுக்கு மனுச் செய்தார். மேல் கோர்ட்டில், தீர்ப்பு அவருக்குச் சாதகமாய் முடிந் தது. ராக்கமா கணவனோடு போய் வாழவேண்டும் அல்லது சிறைத் தண்டனை அனுபவிக்கவேண்டும் என அது தீர்ப்புச் செய் தது. கணவனிடம் செல்வதை விடுத்து, சிறைக்குச் செல்வதை ராக்கமாபாய் தெரிந்துகொண்டாள். பொது மக்களிடையே சர்ச்சைகள் நடந்தன. சட்டம் எது என்பதோ, கோர்ட்டின் தீர்ப்பு சட்டத்தை முறைப்படி அனுசரித்திருந்ததா என்பதோ அல்ல இங்கே கேள்வி. ஒரு மனைவியை அவள் விருப்பத்துக்கு விரோதமாக கணவனோடு வாழக் கட்டாயப்படுத்துதல் முறையா என்பதே கேள்வியாயிற்று. இந்தச் சர்ச்சைகளின்போதும் கசப் பான சொற்பரிமாற்றமும், சேறு எறிதலும் நடந்தன. பிரபலமாக

இருந்த தலைவர்களுங்கூட இவற்றைச் செய்துகொண்ட னர். முடிவிலே, கோர்ட்டுத் தீர்ப்பை அமல்படுத்தவேண்டா மென தாதாஜி தீர்மானித்துவிட்டார். ராக்கமாபாயைப் பல வந்தப்படுத்துவதினால் அவளுக்கோ, அவள் கணவனுக்கோ சுகம் விளையப்போவதில்லையென அவரது அனுதாபிகளும் உணர்ந்தனர். விஷயம் அத்துடன் முடிந்துபோயிற்று.

மூன்றுவது சர்ச்சை சாரதா சதனத்தைக் குறித்து எழுந்தது. 1889ஆம் ஆண்டு பண்டித இராமாபாய் இந்த சதனத்தை பம்பா யில் நிறுவியிருந்தார். இளம் இந்து விதவைகளுக்குக் கல்வி அளிக்கும் இல்லமாகத் தொடங்கப்பட்ட அந்த நிலையத்தில் கலியாணமாகாத பிற பெண்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். பண்டித இராமாபாய் மிகுந்த அறிவும் திறமையும் வாய்க்கப் பெற்றவர். சிறந்த கல்வியும் சாஸ்திரப் புலமையும் கொண்டிருந் தார். பிரம்மசமாஜி ஒருவருக்குத் திருமணஞ் செய்விக்கப் பட்டு, இளம் வயதிலேயே விதவையானவர். இளம் இந்து விதவை களின் பரிதாப நிலையை நன்கறிந்தவர். சதனத்தை நிறுவவும் நிர்வகிக்கவும் அம்மையாருக்கு சமுதாய சீர்திருத்தவாதிகள் உதவினர். ஆயினும் அதன் பொருளாதாரத்தின் பெரும்பகுதி அயல் நாட்டு கிறிஸ்தவ மிஷன்களிடமிருந்தே வந்தது. ஏனெனில் இராமாபாய் வெளிநாடு சென்றிருந்தபோது கிறிஸ்தவ மதத்தைத் தழுவியிருந்தார். ஆனால் சதனத்தின் பெண்கள் அம் மதத்தைத் தழுவுமாறு அவர் தூண்டுவது கூடாது என்று ஒரு பொதுவான சம்மதம் இருந்து வந்தது. 1890-ல் சில காரணங் களினால் சதனம் பூனாவுக்கு மாற்றப்பட்டது. அதன் பின்னர் சில பெண்கள் கிறிஸ்தவராயினர் என்ற செய்திகள் பரவ லாயின. எந்தப் பெண்ணையும் கிறிஸ்தவளாகும்படி தான் வற்புறுத்துவதில்லையென்றும், ஆனால் கிறிஸ்தவராக விரும்பும் யாரையும் தான் தடுப்பதில்லையென்றும் இராமாபாய் சொன்னார். முடிவிலே அதன் இந்து ஆதரவாளர்கள் தங்கள் ஆதரவை நிறுத்திக்கொண்டனர். சதனம் முற்றிலும் ஒரு கிறிஸ்தவ நிறுவன மாக ஆயிற்று. முக்தி சதனம் என்ற பெயருடன் அது கெதகானுக்கு மாற்றப்பட்டது. அத்துடன் அது குறித்த சர்ச்சையும் ஓய்ந்தது.

இந்த விவாதங்கள் அனைத்திலும் ஹரிபாவரின் அனுதாபம் சீர்திருத்தவாதிகளையே சார்ந்திருந்தது, ஆனால் அவர் அவற்றில் நேரடியாகக் கலந்துகொள்ளவில்லை. காரணம் அப்போது அவரது குடும்ப வாழ்க்கை அவருக்கு நிம்மதியளிப்பதாய் அமைந்திருக்க வில்லை. மாறாக அது அவருக்கு மிகுந்த மனச் சோர்வை உண்டாக்கி யது. ஹரிபாவர் நான்கு வயதிலே தாயாரை இழந்திருந்தார்—அவ ரது தந்தை மறுமணம் செய்துகொண்டிருந்தார். அவரது சிற்றப்பா

வின் மனைவி அவரைப் பரிவுடன் கவனித்து வந்தாள். ஆனால் 1872-ல் ஹரிபாவருக்கு எட்டு வயது நடக்கையில் அவளும் இறந்து விட்டாள். அதன் பின்னர் வீட்டிலுள்ள பெரியவர்கள் அவருக்குச் செல்லம் கொடுத்து வந்தனர். ஹரிபாவரின் தகப்பனுரை நம்பியே அந்தக் குடும்பம் பெரும்பாலும் நடந்து வந்தது. பம்பாயில் வழக்குரைஞராகப் பொருள் ஈட்டி வந்த சிற்றப்பாவும் சிறிது உதவி கள் செய்து வந்தார். வீட்டில் வசித்துவந்த அடுத்த சிற்றப்பாவால் உபத்திரவம் உண்டாயிற்று. மனைவியை இழந்த அவர் குடிக்கத் தொடங்கியதுமல்லாமல் ஒரு பெண்ணையும் வீட்டுக்குக் கூட்டி வந்து அவளுடன் வாழ்ந்தார். இதனால் வீட்டின் மற்ற உறுப்பின ருக்கு அவர்மேல் மனத்தாங்கல் உண்டாகி அவர்கள் பூனாவில் சென்று குடித்தனம் வைத்தார்கள். 1878-ல் ஹரிபாவரும் அவர் களோடு பூனா சென்றார். அடுத்த ஆண்டில் அவருக்குப் பதினைந்து வயது நடக்கையில் திருமணமாயிற்று.

1883-ல் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறினார். ஆனால் அதற்கடுத்த வகுப்பின் தேர்வில் வெற்றிபெற ஐந்தாண்டு களாக முயன்றும் முடியாமல் போயிற்று. காரணம் கணக்கின் மேல் அவருக்கிருந்த வெறுப்பாகும். 1888-ல் அவர் படிப்பை நிறுத்திவிட்டார். அப்போது அவருக்கு வயது இருபத்து நான்கு. இரண்டு நாவல்கள் பிரசுரித்துவிட்டார். எழுத்தாளர் என்ற பேரும் திடமாகிவிட்டிருந்தது. ஆயினும் அதன்மூலம் அவருக்குப் பண வருவாய் கிடையாது. பரீட்சை தேறாததால் வேலையும் கிடைப்பதாயில்லை. தன் காலில் நின்று பிழைக்கும் நிலை இல்லை. அதுவுந் தவிர அவருக்குத் திருமணமாகியிருந்தது: சீர்திருத்த வாதியாதலால் மனைவிக்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொடுக்க முயன்றார். படித்த, திருமணமான பெண்ணான காசிபாய் காந்திகர் அவருக்கு ஒரு லட்சியப் பெண்மணியாகத் தோன்றினார். அவரை முன்மாதிரியாகக் கொண்டு தாமும் செயல்பட விரும் பினார். ஆனால் அவர் குடும்பத்தில் இம்முயற்சிக்குப் பலத்த எதிர்ப்பு எழுந்தது. அவர் மனைவிக்கும் படிக்கப் பிரியமில்லை. அது அவருக்குப் பெருத்த ஏமாற்றமாக இருந்தது. குடும்பத்தில் அவர் எல்லோருக்கும் இளையவராக இருந்தபடியால் தம் எண்ணத்தை அடித்துச் சொல்லி நிறைவேற்றிக் கொண்டுபோகவும் இயல வில்லை. ஆகவே மனம் சோர்ந்துபோயிருந்தார். சட்டப் படிப்பு படித்துத் தனக்குத் துணையாக வழக்குரைஞர் தொழிலுக்கு வருவா னென்று எதிர்பார்த்திருந்த சிற்றப்பாவும் ஹரிபாவர் குறித்து நம்பிக்கையிழந்தார்.

இந்தச் சிற்றப்பா இதுவரை சீர்திருத்தவாதியாக இருந்து வந் தார். 1880-ல் திடீரென ஒரு குட்டிக்கரணம் போட்டாற்போல்

வைதிகர் குழாத்தில் சேர்ந்தார். பூனுவில் ஆனந்தாசிரமம் என்ெறொரு நிறுவனம் அமைத்து அதற்கு அறக்காப்பாளர் குழுவொன்று நியமித்தார். பழைய சமஸ்கிருத நூல்களைச் சேகரித்துப் பாது காப்பதும், அவற்றைத் திருத்தி வெளியிடுவதும் புலமை பெற்ற அந்தணர்களையும் மற்றும் சாது சந்நியாசிகளையும் விருந்தோம்பு வதும் நிறுவனத்தின் நோக்கங்களாகும். அங்கிருந்த சிவன் கோயி லொன்றில் கிரமப்படி பூசைகள் நடத்திவரவும் ஏற்பாடாயிற்று. அவர் இந்த நிறுவனத்தை ஹரிபாவரின் பொறுப்பில் விட்டு குடும்பச் செலவுக்காக ஒரு தொகையை எடுத்துக்கொள்ளும்படியா கவும் சொன்னுர். இந்த ஏற்பாட்டினுல் ஹரிபாவருக்கு ஒழுங்கான பண வருவாய்க்கு வழி உண்டாயிற்று என்றுலும் அது அவரை ஒரு தர்மசங்கடமான நிலையில் வைத்தது. ஏனெனில் சீர்திருத்தக் கொள்கைகளை வலியுறுத்திவந்த அவர் இப்போது அறக்காப் பாளர் பொறுப்பை ஏற்றுக்கொண்டதால் வைதிக வாழ்க்கை முறை களை மேற்கொள்ளவேண்டியவரானுர். இது அவருக்கு மனச் சங்கடத்தை உண்டுபண்ணிற்று. ஆனுல் வேறு வழி இல்லை. ஆசிர மத்தில் அவர் தனியாகவே வசித்தார். அவர் மனைவி எப் போதும்போல் வீட்டில் மற்றவர்களோடு இருந்து வந்தாள்.

1891-ல் மனைவி இறந்துவிட்டாள். அப்பொழுது அவருக்கு வயது இருபத்தேழு. மீண்டும் மணம் முடிக்கும் வயது. சீர்திருத்த வாதியாதலால் கொள்கைக்கேற்றவாறு ஒரு விதவையை மணந்து கொள்ளுவது தகுந்ததாக இருக்கும்; அது சாத்தியப்படவில்லை யானுல் மணமுடிக்காமலே இருந்துகொள்வது நல்லது. சில ஆண்டு களுக்கு முன்னுல் (1873) ஜஸ்டிஸ் எம். ஜி. ரானடேயின் மனைவி இறந்துவிட்டதும், அவர் தமது நாற்பத்தோராவது வயதில் தந்தையின் வற்புறுத்தலுக்கு அடங்கி ஒரு பதினேரு வயதுப் பெண்ணை மணந்தார். அதன் விளைவாக பலத்த கண்டனத்துக்கு ஆளானுர். சீர்திருத்தக்காரர்கள், வைதிகர்கள் இரு கட்சியினரும் அவரைத் தாக்கினுர்கள். ஹரிபாவரும் அப்போது ரானடேயின் செயலைக் கண்டனம் செய்திருந்தார். இப்போது அவருக்கு அந்த சோதனை வந்தது. குடும்பத்தில் அவர் இருந்த நிலையில் விதவையை மணப்பது நினைத்தும் பார்க்க இயலாதது. எனவே மறுமணம் செய்யாமலே இருப்பது என்று தீர்மானித்து, தமது முடிவைக் குடும்பத்தினருக்குத் தெரியப்படுத்தினுர். ஆனுல் அதற்கு முன்னரே அவரது மறுமணம் குறித்த பேச்சு குடும்பத்தில் எழுந்து பெண்தேடும் முயற்சியும் தொடங்கியிருந்தது. இவர் கலியாணத்துக்குச் சம்மதிக்கவில்லையெனத் தெரிந்ததும் குடும்பத் தினர் அவரிடம் கடுமை பாராட்டிப் பேசாமலிருந்தனர். ஹரிபாவர் மனம் மிகவும் புண்பட்டது. வயதான பாட்டிக்கு அவர் மீது எப்போதும் தனியான வாஞ்சை உண்டு. அவள் அவரிடம்

பேசத் தொடங்கினாள். அவர் கலியாணம் செய்துகொள்ளவில்லை யெனில் தன் மரணம் அமைதியானதாக இருக்காது என்றாள். அவள் சொல்லைத் தட்டமுடியாமல் ஹரிபாவர் மறுமணம் செய்து கொள்ளுவதாக அவளிடம் வாக்குக் கொடுத்துவிட்டார்.

1892-ல் மறுமணம் நடந்தது. அவருக்கு அப்போது வயது இரு பத்தியெட்டு. மணமகளுக்குப் பதினொன்று. இருவருக்கும் பதினேழு வயது வித்தியாசம். எதைச் செய்ததற்காக ரானடேயைக் குற்றஞ் சாட்டினாரோ அதையே அவர் இப்போது செய்திருந்தார். விவாகம் தம் மீது திணிக்கப்பட்டுவிட்டது என நினைக்கத் தொடங்கினார். எனவே திருமணமே நடக்காததுபோல் பாவித்துக் கொண்டு எப்போதும்போல் தனியாக ஆசிரமத்தில் இருந்து வந் தார். மனைவி ஏனைய குடும்பத்தினரோடு வீட்டில் இருந்தாள். உணவு வேளைகளில் மாத்திரமே அவர் வீட்டுக்கு வந்தார். இது அவர் தம் மனைவிக்குச் செய்த அநியாயம் ஆகும்.

ஆனால் நாளடைவில் அவர் மனைவி அவரது தாம்பத்திய கடமைகளை அவருக்கு உணர்த்திவிட்டாள். அவளை ஆசிரமத்துக்கு அழைத்துச் சென்று அங்கு வாழ்க்கை நடத்துமாறு அவள் அவரை மாற்றிவிட்டாள். ஆனால் திருமணமாகி பதினொரு ஆண்டுகள் கடந்த பின்னர் 1903-ல் தான் இது நடந்தது. ஹரிபாவர் இந்த வருடங் களில் மனைவியிடம் கடுமையாக நடந்துகொள்ளவில்லை, கொடுமைப்படுத்தவில்லை. ஆனால் இருவருக்குமே அவை மனவேதனை மிகுந்த ஆண்டுகளாகவே கழிந்திருந்தன. இருவரும் ஆனந்தா சிரமத்துக்குச் சென்று வாழத்தொடங்கிய பின்னர், நாட்கள் ஆனந்தமாகவே ஓடின. ஹரிபாவர் மென்மையான இயல்புடைய வர். பெண்களிடம் அவருக்கு எப்போதும் அனுதாபம் உண்டு. அவர் மனைவிக்கு ஓரளவு கல்வியறிவு இருந்தது. அதை மேலும் வளர்த்துக்கொள்ளும்படி அவர் அவளை ஊக்குவித்தார்.

இதற்கிடையில் 1894-ல் அவரது சிற்றப்பா இறந்துவிட்டார். 1896-ல் தகப்பனார் உத்தியோக ஓய்வு பெற்று குடும்பத்தினருடன் வசிக்க பூனா வந்தார் (1915-ல் அவர் காலமானார்). ஹரிபாவரின் தந்தை—அவர் காலத்துப் பெரும்பாலோரைப்போலக் கடுமை யான வைதிகம். ஹரிபாவரின் கருத்துக்களோடு அவருக்கு உடன் பாடு கிடையாது. ஆனால் அவர் மகனுடன் மோதவில்லை. அது சாத்தியமாகவும் இருந்திருக்காது. ஏனெனில் ஹரிபாவருக்கு இப்போது எழுத்தாளர் என்ற புகழும் அந்தஸ்தும் மிகுந்திருந்தது. பொது வாழ்க்கையில் அவர் முன்னணியில் நின்றார்.

1906-ல் ஹரிபாவர் தம்பதிகளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந் தது. ஹரிபாவர் குழந்தைமீது அபரிமிதமான வாஞ்சை வைத்தார்.

ஆனால் துர்ப்பாக்கியவசமாக அவள் 1913-ல் இறந்துவிட்டாள். அவர் வாழ்க்கையில் இச்சம்பவம் ஒரு வெறுமையை ஏற்படுத்தியது.

ஒரு நாவலாசிரியராக அவரை நன்கு புரிந்து கொள்ளுவதற்கு முன், இப்படி அவரது சொந்த வாழ்க்கையின் விவரங்களைத் தெரிந்துகொள்ளுவது அவசியமே. அவரது சீர்திருத்தக் கொள்கைகளும், அவர் பிற சீர்திருத்தவாதிகளுடன் கொண்டிருந்த தொடர்புகளும் நிஜமாக இருந்தாலும், அவரது குடும்ப வாஞ்சை, குடும்பத்தில் அவரது நிலைமை, சிற்றப்பாவின்மீதான பொருளாதாரச் சார்பு முதலியன முன்னவையோடு முரண்பட்டு அவரை எதிர்த் திசையில் இழுத்துச் சென்றன. இந்த நிலைமை அவருக்குச் சங்கடமும் சோர்வும் அளிப்பதாய் இருந்தது. காந்திகர் தம்பதிகளுக்கு அவர் எழுதிய கடிதங்களினின்று இது தெரிய வருகின்றது. தனக்கென்று ஒரு வீடு இல்லாதது குறித்து அவருக்கு விசனம் இருந்தது. ஆயினும் அவர் முற்றிலும் மனஞ் சோர்ந்துபோய்விடவில்லை. யார்மீதும் குரோதமும் கசப்பும் கொள்ளவில்லை. மனம் சுத்தமாகவும் சமநிலையிலுமே இருந்து வந்தது.

கிளர்ச்சிப் போக்கும் பிரசார புத்தியும் அவருக்கு இயல்பிலேயே இல்லை. படிப்பு அவருக்குப் பிடித்த தொழில். எழுத்து அவருக்கு உயிர். 1890-ல் 'காரமானுக்கு' என்ற பத்திரிகை தொடங்கிய பின்னர், தமது எழுத்துக்கள் யாவற்றையும் அதிலேதான் பிரசுரித்தார். வாசகர்களின் அறிவை விசாலமாக்குவதும், அவர்களை மகிழ்விப்பதும் பத்திரிகையின் நோக்கங்களாகும், சர்ச்சைகளைத் தவிர்த்தார். மானுட மனங்களின் போக்குகளைத் தீர்க்கமாகப் பார்க்கவும், சமுதாயத்தில் குறுக்கும் மறுக்கும் பாய்கின்ற கருத்தோட்டங்களை ஆராயவும், அவரது காலச் சூழல் பல வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தந்தது. அவர் அக்காலப் பொது வாழ்க்கையில் கலந்துகொண்டாராதலால், அவரது சிந்தனைக்கு உரமாகப் பல அநுபவங்கள் அவருக்குக் கிடைத்தன. அவரது எழுத்துக்களுக்கு அவை மிகுதியும் பயன்பட்டன. 1919-ல் மார்ச்சு மூன்றும் தேதி ஹரிபாவர் காலமானார்.

அத்தியாயம் 2

# ஹரிபாவருக்கு முந்திய மராத்திய நாவல்கள்

புனைகதைகள் மராத்தி மொழிக்குப் புதியவை அல்ல. பல வகைப்பட்ட கதைகள் இந்த மாநிலத்தில் தொன்றுதொட்டே புழங்கிவந்திருக்கின்றன. பதின்மூன்றும் நூற்றுண்டைச் சேர்ந்த மகானுபவ இலக்கியத்தில் பல புராணக் கதைகளும் திருஷ்டாந்தம் மற்றும் நீதிக்கதைகளும் காணப்படுகின்றன. மதானுட்டானங்களை யும் ஆசாரங்களையும் கடைப்பிடித்தொழுகுவதால் விளையக்கூடிய நன்மைகளை எடுத்துச் சொல்லுகின்ற கதைகள் பல பெண் களிடையே புழக்கத்திலிருந்தன. தெய்வங்களின் மகாத்மியங்களை விவரிக்கின்ற கதைகளை மதப்பிரசாரகர்கள் மக்களிடையே சொல்லிப் பரப்பி வந்தனர். பாட்டிகள் குழந்தைகளுக்குச் சொல்லிய பேய் பிசாசுக் கதைகளும் தேவதைகளைப்பற்றிய குட்டிக் கதைகளும் இருந்தன. மகாபாரதம், இராமாயணம், பாகவதம் ஆகியவற்றில் சொல்லப்பட்டுள்ள கதைகளும் உலவி வந்தன. ஆயினும் இந்தக் கதைகள் யாவும் வாய்மொழியாகவே சொல்லப் பட்டுக் காப்பாற்றப்பட்டு வந்தன. அச்சும் புத்தகங்களும் இன்னும் வரவில்லை.

பிரித்தானிய ஆட்சி இங்குவந்து வேரூன்றிய காலத்தில் கிறிஸ்தவ மிஷன்களும் அரசும் அச்சுக்கூடங்களையும் பள்ளிக்கூடங் களையும் நிறுவின. நாம் புனைகதை என்று இப்போது சொல்லு கின்ற வகை அதன்பின்னர் உருவானதுதான். முதலில் பள்ளிச் சிறுவர்களுக்குத் தேவையான பாடபுத்தகங்களும் பிற நூல்களும் அச்சாகத் தொடங்கின. அவர்களுக்கேற்ற போதனைக் கதைகளும், நல்லறிவு புகட்டும் கதைகளும், புராணக் கதைகளும் அச்சேறலாயின. இந்தக் கதைகளில் பொழுதுபோக்கு அம்சம் அதிகமாகக் கிடையாது. மராத்தி மொழியில் பிரசுரமான முதல் நாவல் யாத்ரிக் கிராமண் என்ற தலைப்புடைய மொழிபெயர்ப் பாகும். 1841-ல் அது வெளியாயிற்று. அது ஆங்கிலத்தில் பன்யன் (Bunyan) எழுதிய மோட்சப்பிரயாணம் (Pilgrim's Progress) என்ற நூலின் மராத்தியாக்கம். ஹரிகேசவஜி பதாரே மொழிபெயர்த் திருந்தார். அந்த ஆங்கில நூலில் நாவலின் கூறுகள் முழுவதுமாக

இல்லையென்பது தெரிந்ததே. விவிலிய போதனைகளை அடிப்படையாகக்கொண்டெழுந்த ஒரு உருவகமேயாகும் அது.

புதிய பள்ளிகளிலே கல்வி கற்றவர் தொகை நாளடைவிலே அதிகரிக்கலாயிற்று. விளைவாக படிப்பவர்கள் உருவாயினர். அவர்கள் வாசிப்பதற்கு நூல்கள் தேவைப்படலாயின. வாசிப்பின் நோக்கங்களும் வெவ்வேறாக இருந்தன. தங்களை முன்னேற்றிக்கொள்ள, விஷயஞானம்பெற, பொழுதுபோக்க என்று அவை பலவாறாக இருந்தன. இந்த நிலைமையைக் கண்டதும் எழுத்தாளர்களுக்கு ஆர்வம் உண்டாயிற்று. அத்தேவைகளைப் பூர்த்திசெய்ய முன் வந்தனர். 1856-ல் பம்பாயில் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டு பட்டதாரிகள் வெளிவரத் தொடங்கினர். எழுதுந்தொழில் ஊக்கம் பெற்றது. பல்வேறு துறைகளில் பல்வேறு நோக்கங்களுடன் எழுத்துக்கள் தோன்றலாயின. ஓரளவு கல்வியும் ஓரளவு ஓய்வு வேளையும் கொண்ட வாசகர் குழாம் ஒன்று இக்காலத்தில் உருவாகி வந்தது. அவர்கள் பலவகைப்பட்டவர். வீட்டிலே ஆசான் வைத்துப் படித்த அரசகுமாரர்கள், வசதிபடைத்த நிலச்சுவான் தார்கள், அரசு ஊழியர்கள், திருமணமான இளம் பெண்கள் என்று பல வகைகள். பெண்களில் சிலர் பள்ளிசென்று கல்வி கற்றவர்கள். சிலர் வீட்டில் கணவனிடம் அல்லது அதற்கென்று ஏற்படுத்தப்பட்ட ஆசானிடம் கற்றுக்கொண்டவர்கள்.

கல்வி கற்றவர்கள் பல விஷயங்களைத் தெரிந்துகொள்ளத் தொடங்கினார்கள். ஐரோப்பா, மற்றும் இதர நாடுகளின் அரசியல் சமுதாய வரலாறுகளை அவர்கள் தெரிந்துகொண்டதோடு, இந்தியாவின் பழைய வரலாற்றையும் அறிந்துகொண்டார்கள். விளைவாக இந்தியா அடிமை நாடாக இருப்பதன் காரணமும், இந்திய சமுதாயம் தேங்கிப் பின்தங்கி நிற்பதன் காரணங்களும் அவர்களுக்குப் புலப்படலாயின. இந்தியாவின் சமயத்தையும் சமுதாயத்தையும் சீர்திருத்தவேண்டும் என்ற ஓர் உந்துதல் அவர்களுக்கு உண்டாயிற்று. அவர்களில் சிலர் வேறுவிதமாக எண்ணினார்கள். இந்தியாவுக்குத் தேவையான புத்துயிரை அதன் பழம் பண்பாட்டிலும் பாரம்பரிய மரபுகளினின்றும் பெற்றுவிட முடியும் என நம்பினார்கள். இப்படியாக ஒன்றுக்கொன்று முரணான இரு கருத்துப்போங்குகள் தோன்றி வளரலாயின. மாவு புளித்துப் பொங்குகிறதுபோல மக்களுடைய மனங்கள் இந்தக் கருத்துக்களினாலே பொங்கிக்கொண்டு வந்தன. அவர்களது வாழ்க்கையிலே அங்கங்கே மாற்றங்கள் தெரிந்தன. காலத்தின் போக்குகளைக் கூர்ந்து கவனித்த சிலர் மக்களின் தேவைகளைக் கண்ணோட்டத்தில் கொண்டு நாளேடுகளும் வாரப் பத்திரிகைகளும் பிரசுரிக்கத் தொடங்கினர். புதிய எண்ணப் போக்குகளைப் பிரதிபலித்த நாவல்

களும், நாடகங்களும், கட்டுரைகளும் அவற்றில் வெளியாயின. வாசகப் பொதுமக்களின் கோரிக்கைகளை ஈடுசெய்ய வகை வகை யான இலக்கியங்களும் தோன்றலாயின. இவ்வதிகாரத்தில் ஆராய் வதற்கு எடுத்துக்கொண்ட காலப்பகுதி 1830-லிருந்து 1885 வரை ஆகும். இக்காலகட்டத்தில் வெளிவந்த நாவல்களிலே மேற் சொன்ன புதிய கருத்துப்போங்குகள் தெரியக்கிடக்கின்றன. ஆப்தேயின் முதல் நாவலும் அப்போதுதான் பிரசுரமாயிற்று.

1857-க்கும் 1879-க்கும் இடைப்பட்ட காலத்தில் மராத்தி நாவல் வளர்ந்து வந்தது. வாசகப் பொதுமக்கள் அதை விரும்பத் தொடங்கிவிட்டனர். நாவல் ஒரு இலக்கியவகை என்பதாக ஏற்றுக்கொள்ளப்பட்டு முக்கியமும் பெற்றுவந்தது. ஆயினும் இக்கால நாவல்கள் மிகையான கற்பனுவிசித்திரங்களாகவே அமைந்திருந்தன. ஒன்று அவற்றில் காதம்பரி, தசகுமாரசரிதம் போன்ற சமஸ்கிருத காவியங்களின் தாக்கம் படிந்திருந்தது அல்லது அராபிய, பாரசீகக் கதைகளில் உள்ள கற்பனை விசித்திரங் களின் பாதிப்பைக் கொண்டிருந்தன. 1864-க்கும் 1873-க்கு மிடையே பொழுதுபோக்குக் கதைகளான அராபிய இரவுக் கதை களின் ஆங்கில மொழிபெயர்ப்பும் வெளியாகியிருந்தது. அவற்றின் சாயையும் மிகுதியாக இந்தப் புதிய மராத்தி நாவல்களில் தெரிந் தது. நாவல்களின் நாயக நாயகியர் அரசவம்சம். அவர் களின் நண்பர்களும் பரிவாரங்களும் பிரபுவம்சம். நாயகன் காமக் கடவுள் மதனனின் மறு சொருபம். வீரத்தின் அவதாரம். நாயகி ரதி மாதிரி. முக்கிய பாத்திரங்கள், பின்னணிகள், சம்பவங்கள், இயற்கை வருணனைகள், பருவகாலங்களின் விவரங்கள் அனைத்தும் ஒரே அச்சின் வார்ப்பு. பாத்திரங்களுக்கு நேரிட்ட இன்னல்களுங் கூட ஒன்றுபோலவே இருந்தன. அவர்கள் அந்த இன்னல் களினின்று விடுபடுகின்ற அற்புதங்களை நம்புவது கஷ்டமாக இருந் தது. ஏனெனில் அவை இயல்பாகப் புனையப்படவில்லை. மொழியின் நடையில் செயற்கையும் அலங்காரமும் மிகைபட இருந்தது. வாசகர்களின் பொழுதைப் போக்குவதற்கு உதவியாக சிறிது பரபரப்புத் தருவதே இந்த நாவல்களின் நோக்கம். இக்கால வாசகர்கள் பெரும்பாலும் பொழுதுபோகாமல் தவித்த வகுப் பினரும், எழுத்தறிந்த பெண்களுமாவார்கள். அதே சமயத்திலே தீயொழுக்கத்தின் கேடான விளைவுகளையும் நல்லொழுக்கத்தின் நற்பயன்களையும் வாசகர்கள் மனங்களிலே பதியச்செய்யவும் நாவலாசிரியர்கள் விரும்பினர். எனவே இந்த நாவல்கள் எப்போ தும் இன்ப முடிவுகளைக் கொண்டிருந்தன. நாவல் முடிகிறபோது நல்ல பாத்திரங்களுக்கு வெகுமானங்களும் கெட்ட பாத்திரங் களுக்குத் தண்டனைகளும் கிடைத்து வந்தன.

இத்தகைய வார்ப்புகளில் ஒன்றான முக்தமாலாவின் (1861) கதைக் கட்டுமானத்தைப்பற்றி மேலோட்டமாகப் பார்ப்போம். எழுதியவர் லக்ஷ்மண சாஸ்திரி ஹால்பே. இந்நாவல் ஒரு திருப்பு முனையாகக் கருதப்படுகின்றது. ஐராவதி ஜாகிர்தார் சாந்தவர்மாவின் மகள் முக்தமாலா. கதாநாயகி அவள்தான். அவள் பெயரே நாவலின் தலைப்பாகவும் இருக்கின்றது. ஜெயபுரி அரசன் பயநாகனின் உதவி மந்திரி தனசங்கரனுக்கு அவளை மணமுடித்துக் கொடுத்திருக்கிறது. அரசன் மிகப் பொல்லாதவன். தயை தாட்சணியம் காட்டாமல் அரசாளுபவன். அவனைச் சார்ந்திருந்த ஆலோசகப் பரிவாரங்களும் அவனைப்போலவே மிகப் பொல்லாதவர்கள். அவர்களில் ஒருவன் சுகலக்ஷன். சாந்தவர்மனின் உடன் பிறப்பின் மகன். முக்தமாலாவின் புருஷனான தனசங்கரனின் சிபார்சினாலேதான் அவனுக்குப் பதவி கிடைத்திருக்கிறது.

சுகலக்ஷனைப் பேராசை பிடிக்கிறது. முக்தமாலாவையும் தனசங்கரனையும் கொன்றுவிட்டால், சாந்தவர்மனுக்கு வேறு வாரிசுகள் இல்லாதபடியினாலே, அந்த ஜாகிர் தனக்கு வந்துவிடும் என்று எண்ணுகிறான். அவனது இந்தக் கெட்ட எண்ணத்தை மையமாகக்கொண்டு கதையின் மற்ற நிகழ்ச்சிகள் செல்லுகின்றன. முதலாவது அவன் தனசங்கரனைச் சிறையில் போட்டுப் பின் அவனைச் சாக்கில் கட்டி ஆற்றில் எறிவிக்கிறான். நல்ல வேளையாக சில மீனவர்கள் அவனைக் காப்பாற்றி, அடையாளம் கண்டு பராமரிக்கிறார்கள். பின் அவன் பைராகி வேடத்தில் தலயாத்திரை போகிறான்.

கணவன் சிறையிலிருக்கின்றான் என்றெண்ணிய முக்தமாலா அவனை அங்கு சந்திப்பதற்காக ஒரு மாந்தரீகனின் உதவியை நாடுகிறாள். அந்த மாந்தரீகனுக்கு சுகலக்ஷனும் ஒரு வேலையிட்டிருந்தான். முக்தமாலாவைக் கொன்று அவள் தலையைக் கொணர்ந்து காண்பிக்குமாறு மாந்தரீகனை ரகசியமாக அவன் பணித்திருந்தான். முக்தமாலாவின் அழகில் மயங்கிய மாந்தரீகன் அவளைக் கொல்லாமல் ஒரு குகையில் போட்டு அடைத்துவிட்டு, அவளது பணிப்பெண் ஒருத்தியைக் கொன்று அவளது கைகால்களை சுகலக்ஷனிடம் காண்பிக்கிறான். உறுப்புகள் முக்தமாலாவுடையன அல்ல என்பதைக் கண்ட சுகலக்ஷன், மாந்தரீகனைத் தண்டித்த பின்னர், முக்தமாலாவைத் தேடிக்கொண்டு தானே கிளம்புகிறான்.

இதற்கிடையில் முக்தமாலா குகையில் ஒரு சுரங்கப் பாதையைத் தற்செயலாகப் பார்க்கிறாள். அவளது விசுவாச வேலையாளான குலாலசிங்கைத் துணைக்கு அழைத்துக்கொண்டு அந்தப் பாதை வழியே உஜ்ஜயினுக்குப் புறப்படுகிறாள். சுகலக்ஷன் அவளை விரட்டிப் பிடிக்கிறான். உஜ்ஜயினியின் அருகே ஓடும் நதியில் ஒரு

தீவு. அந்தத் தீவில் ஒரு பாழ் மாளிகை. முக்தமாலாவை அதில் அடைத்து வைக்கிறான். அங்கே அவளது இளவயதுத் தோழன் சோமதத்தன்—வாழ்க்கை வெறுத்து வீட்டை விட்டுக் கிளம்பிய வன்—தற்செயலாக வந்து அவளைக் காப்பாற்றுகிறான். அவனையும் உஜ்ஜயினி சிறையில் போட்டிருந்தது. ஆனால் அவன், காவலாள னுக்கு இலஞ்சம் கொடுத்துத் தப்பித்து வந்திருந்தான்.

முக்தமாலாவும் தனசங்கரனும் இறந்துவிட்டனர் என் றெண்ணிய சாந்தவர்மன் மனைவியோடும் பரிவாரத்தோடும் நீண்ட தலயாத்திரை கிளம்பியிருந்தான்.

இப்படி அலைந்துகொண்டிருந்த பாத்திரங்கள் அனைவரும் தற்செயலாக மீண்டும் ஒன்றுகூடி சந்தோஷம் பெறுகின்றனர். ஜெயபுரி போகின்றனர். அங்கே மக்கள் பயநாகனை எதிர்த்துக் கிளர்ச்சி செய்து, அவனைத் தண்டித்துவிட்டு அவன் தம்பியும் நல்ல வனுமான விசாலக்ஷனை சிம்மாசனம் ஏற்றியிருந்தனர். விசுவாச முள்ள பழைய மூத்த மந்திரி ஒருவரையும் தனசங்கரனையும் மீண்டும் பதவியில் வைத்தனர். ஆக எல்லோருக்கும் இரட்டிப்புச் சந்தோஷம் கிட்டிற்று.

இந்தக் கதையின் கட்டுமானத்தைப் படித்த பிறகு, அக்காலத் தில் வெளிவந்துகொண்டிருந்த கற்பனை விசித்திர நாவல்களைப் பற்றி ஓரளவு தெரிந்துகொள்ளமுடியும். என். எஸ். ரிஸ்படு எழுதிய மஞ்சுகோஷா (1867) விசித்திரங்களிலே முக்தமாலாவையும் மிஞ்சியது. அந்நாவலின் பாத்திரங்களுக்கு வருகின்ற துன்பங் களும், துன்பங்களினின்று அவர்கள் மீளுகின்ற அதிசயங்களும் நம்பவியலாதவை. நாவலின் நாயகனிடம் ஒரு ஆகாய விமானம் இருக்கின்றது. ரூபாய் நோட்டாகவே கொடுத்து வாங்கியது. விமானத்தை மடித்துப் பெட்டிக்குள் போட்டு அதை ஒரு ஆள் தூக்கிக்கொள்ளலாம். நாயகி வசிக்கும் மாளிகையின் ஜன்னலி னூடே அது புகுந்து பறக்கும். ஆனால் விமானத்தினுள் நாலு பேர் வசதியாக உட்காரலாம். இந்தியாவின் வடகிழக்கு எல்லைக்கப்பால் நாலாயிரம் மைல் வரை அது பறக்கும். எந்த தேசம் அது என்பதுபற்றி ஆசிரியர் எதுவும் சொல்லுவதில்லை.

முக்தமாலாவைவிட தரத்தில் மஞ்சுகோஷா மிகக் குறைந்தது. ஆனால், மொத்தத்தில் இவைபோன்ற நாவல்களை அக்கால வாசகப் பொதுமக்கள் விரும்பி வாசித்தனர். 1861-க்கும் 1876-க் கும் இடைப்பட்ட காலத்தில் இத்தகைய நாவல்கள் மொத்தம் பதினாறு பிரசுரமாகியிருக்கின்றன.

அந்நாளிலே படித்தவர் மனங்களிலே பல புதுமைக் கருத்துக் கள் தோன்றி வளர்ந்து வேரூன்றி வந்தன. பெண் கல்வி, இள

விதவை மணம், விதவை முடி களைதலை நிறுத்தல் முதலியவற்றை சிலர் ஆதரிக்கத் தொடங்கியிருந்தனர். இவை கற்பனை விசித்திர நாவல்களிலும் இடம் பெறுகின்றன. உதாரணமாக முக்தமாலா விலே, முக்தமாலாவின் கணவன் இறந்துவிட்டதாக எண்ணி அவள் முடியைக் களையும் கட்டம் வருகின்றது (அவன் உயிருடன் இருப்பது தெரிய வந்து சடங்கு நின்றுபோனது வேறு விஷயம்). அந்நாளில் இந்தப் பிரச்னை மிக உக்கிரமாக விவாதிக்கப்பட்டது. விவாதங்கள் கசப்புடன் நடந்தன. ஹரிபாவரின் படைப்புக் களில் சிறந்ததெனக் கருதப்படுகின்ற பான் லட்சியாந்த கோன் கெதோ? என்ற நாவலில் இதுதான் மையப் பிரச்னையாகும். இலட்சுமண சாஸ்திரி ஹால்பேயின் இன்னொரு நாவலான இரத்தினப் பிரபையில் (1866) விதவை மணப் பிரச்னை இருக் கின்றது. விசித்திரபுரி (1870)யிலும் பெண் கல்விப் பிரச்னை உண்டு. அந்நாவலில் முரண்கள் அதிகம். அருவருப்பான மூட நம்பிக்கைகளும், ஊழல் ஆட்சி விவரங்களும் கலந்த அந்தக் கதம்ப நாவலில் பெண் கல்விப் பிரச்னையும் அழுத்தமாக ஒலிக்கின்றது.

இந்த நாவல்களில் சில இப்பொழுதும் ரஞ்சகமானவையா யிருந்து அவ்வப்போது மறுபதிப்பாகி வருகின்றன என்றாலும் மராத்தி நாவல் என்ற இலக்கியப் பெரும் பாதையில் சேரக் கூடியன அல்ல.

மராத்தியில் வெளியான முதல் யதார்த்த நாவல் யமுனா பாரியாதன் (1857) ஆகும். எழுதியவர் பாபா பத்மண்ஜி. பத்மண்ஜி 1854-ல் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவினார். நாவலின் துணைத் தலைப்பு ஹிந்து விதவையின் நிலைமையை விவரித்தல் என்பதாகும். ஹிந்து விதவைகளின்—குறிப்பாக மகாராட்டிரத்தின் அந்தண விதவைகளின்—கஷ்டங்களை விவரிப்பதும் அவர்களை முன்னேற்றுவிக்கும் பணிகளை ஆதரிப்பதும் இந்நாவலின் நோக்கம். 1882-ல் இதன் இரண்டாம் பதிப்பு வெளியாயிற்று. அந்தப் பதிப் புக்கு ஆசிரியர் எழுதிய முன்னுரையில் இந்த நோக்கத்தைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

விநாயக் யமுனா என்ற இளந்தம்பதியரைப் பற்றியது கதை. இருவரும் படித்தவர்கள்; ஹிந்துக்கள்; மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவர்கள். இருவரும் நீண்ட பயணம் செய்கின்றனர். வழி யிலே பல ஹிந்து விதவைகளைச் சந்தித்துப் பேசுகின்றனர். அவர் கள் அனைவரும் ஏமாற்றப்பட்டவர்கள். இப்போது பிச்சை யெடுத்தோ விபசாரம் செய்தோ பிழைப்பு நடத்த நேரிட்டிருக் கிறது. அவர்களது அவலக் கதைகளைக் கேட்டு தம்பதிகள் கவலை கொள்கின்றனர். திரும்பும் வழியிலே விநாயக் ஒரு விபத்தில் அகப்பட்டு, நிலைமை மோசமாகி இறந்து விடுகின்றான். கணவனும்

மனைவியும் அந்தரங்கமாக கிறிஸ்து பக்தி கொண்டிருந்தனர். மரணம் நெருங்கிவிட்டதை உணர்ந்த விநாயக் தான் ஞானஸ் நானம் பெறவிரும்புவதை யமுனுவிடம் சொல்ல அவள் அவனது விருப்பத்தை நிறைவேற்றுகின்றுள். அவன் இறந்த பிறகு அவளும் கிறிஸ்தவ மதத்தைத் தழுவி, விநாயக் அவளுக்குத் தந்திருந்த ஆலோசனைப்படியே மறுமணம் செய்துகொள்ளுகிறுள்.

ஹிந்து விதவையின் பரிதாப நிலையைத் தெளிவாக விவரிக் கின்ற பல கிளைக்கதைகள் நாவலிலே வரிசையாகச் சொல்லப்படு கின்றன. அவை அக்காலத்து வாசகர்களின் கவனத்தை ஈர்த்து, விதவைப் பிரச்னையின் பயங்கரத்தை உணர்த்தியிருக்கும் என்ப தில் சந்தேகமில்லை. ஆனுல் கிளைக்கதைகள் ஒன்றன்பின் ஒன்ருய் துண்டு துண்டாய் வருகின்றனவேயன்றி மொத்தக் கதைக் கட்டு மானத்துள் இணைந்து பொருந்தவில்லை. பாத்திரங்களிடையே நிகழ்கின்ற கருத்து மோதல்கள் அவர்களது உணர்வுகளோடும் இழையும்படியாக கதை பின்னப்படவில்லை. கதையில் வருகின்ற கிறிஸ்தவ அம்சங்கள் இரு முக்கிய பாத்திரங்களின் மனதுக்கு மிக அருமையானவையாக இருந்தபோதிலும் அவை கதையோடு தொடர்பின்றி நிற்கின்றன. கதைக் கரு சிறந்ததென்பதில் சந்தேகமில்லை. இரத்தமும் சதையும் நரம்புமாய் அதை வளர்த்து கின்ற திறம்தான் பாபா பத்மண்ஜிக்கு இல்லை. கதை சொல்லும் வரம் அவருக்கு இல்லாததினுலே நாவல் ஒரு துண்டுப் பிரசுரம் போலத் தொனிக்கிறது.

ஆனுல் பின் வரவிருந்த யதார்த்த நாவலின் முன்னேடி இந்த நாவல்தான் என்பதை சொல்லித்தானுகவேண்டும். யமுனுவின் பாத்திரம் நுண்ணிதாய் இழைக்கப்பட்டதொன்று, மெல்லிய உணர்வுகளும், சிறந்த அறிவும், பிறர்பால் பரிவும், ஆழ்ந்த சமயப் பற்றும், சமுதாயப் பொறுப்பும் கொண்டவளாகத் தீட்டப்பட்டிருக் கின்ருள். விநாயக் ஒரு நல்ல கணவன். தாராள மனமும், பரிவும், முற்போக்குக் கருத்துக்களும் கொண்டவன். நாவலில் இரு பாத்திரங்களும் உயிரோடு நடைபோடுகிருர்கள். ஆனுல் பாபா பத்மண்ஜி துண்டுப் பிரசுரம் எழுதுகிறவர், நாவலாசிரியர் அல்ல. எனவே நாவல் மராத்தி நாவல் வரலாற்றின் தொடக்கச் சுழி என்று சொல்லலாமே தவிர அதுவே முதல் நாவல் என்று சொல்லி விட முடியவில்லை.

அடுத்து வந்த யதார்த்த நாவல் விநாயக் கொண்டதேவ் எழுதியது. சிரெஸ்ததார் என்று தலைப்பு. 1872-ல் எழுதப்பட்ட இது 1881-ல் தான் பிரசுரமாயிற்று. நாவல் போதிய கவனம் பெருமல் உளது. யமுனு பாரியாதனைப் போன்று இதுவும் ஒரு திட்ட வட்டமான சமுதாய நோக்கத்துடன் எழுதப்பெற்றது. அலுவலகங்

களில் ஐரோப்பியருக்கடியில் சிரெஸ்ததார்கள், கார்க்குணர்கள் என்று பல ஊழியர்கள் வேலைபார்த்து வந்தனர். அவர்களுடைய இலஞ்ச ஊழல்களையும், பொய்ம்மைகளையும் அம்பலமாக்குவது நாவலின் நோக்கம் என்று நாவலாசிரியர் கூறுகின்ருர். ஊழியர்கள் தங்களுக்கிருக்கின்ற கொஞ்ச அதிகாரத்தை வைத்துக்கொண்டு ஏழை எளியவர்களை வாட்டி ஒடுக்கி அடியோடு அழித்துவிடுவதையும், அத்தகைய ஒடுக்குதலை முற்றிலுமாக நிறுத்தமுடியாவிடினும் ஓரளவாவது குறைக்கக்கூடிய வழிவகைகளை அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்லுவதும் நாவலின் நோக்கங்கள் என அவர் எழுதுகின்ருர்.

சிரெஸ்ததார் தன்னிலையில் சொல்லுகின்ற குற்ற அறிக்கையாக கதை அமைந்துள்ளது. அவர் ரெவின்யூ அலுவலகத்தில் ஒரு மூத்த குமாஸ்தா. மாதம் பத்து ரூபாய் என்ற எளிய சம்பளத்தில் தாம் வேலையைத் தொடங்கியதாகச் சொல்லுகிருர். பின்னர் தவருன வழிகளில் பணம் பண்ணுகின்ற முறைகளை அறிந்துகொண்டு இலஞ்சங்கள் வாங்கத் தொடங்குகிருர். முடிவிலே அவரது ஊழியர் ஒருவர் அவர்மீது பொருமை கொண்டு அவர் இலஞ்சம் வாங்கியதை நிரூபிக்கிருர். வழக்குப் பதிவாகி விசாரணையில் அவருக்குக் கடுஞ்சிறைத் தண்டனை கிடைக்கிறது.

நாட்களை எண்ணியவாறு சிறையில் கிடக்கின்ற சிரெஸ்ததார் தமது கடந்தகால வாழ்க்கையை எண்ணிப்பார்க்கிருர். தமது தீச்செயல்களைக் குறித்து வருந்தி கடவுளிடம் மன்னிப்பு வேண்டுகிருர். அந்த அறிக்கைதான் சிரெஸ்ததார் நாவல்.

யமுனு பாரியாதனைப் பார்க்கிலும் செய்திறனில் இந்நாவல் சற்று மேம்பட்டது. கதை படிப்படியாக வளர்ந்து முக்கிய பாத்திரமான சிரெஸ்ததார் ஜெயிலுக்குச் செல்லும்போது உச்சத்தை அடைகிறது. அவரது குணசித்திரமும் பையப் பைய விரிவடைந்து செறிவு சேர்ந்து பன் முகங்களுடன் தீட்டப்பட்டிருக்கிறது. கதையின் பல்வேறு பாத்திரங்களிடையே உள்ள முரண்களும் மோதல்களும் நன்கு கொணரப்பட்டு மனித இயல்பை வெளிப்படுத்துவதாக உளது. இலக்கிய அலங்காரங்களும் மிகைகளும் இல்லாமல் கதை எளிமையாகச் சொல்லப்படுகிறது. குற்ற அறிக்கையிலே இருக்கக்கூடிய சுயகண்டனம் அடிநாதமாக ஒலித்துக்கொண்டிருக்கிறது. சர்க்கார் அலுவலக நடவடிக்கைகள் தெளிவாக விவரிக்கப்படுகின்றன. எனவே மராத்தி யதார்த்த நாவலின் வளர்ச்சி வரலாற்றிலே இந்த நாவல் இன்னெரு படியாகும்.

சிரெஸ்ததாரை ஆசிரியர் சுயகதை உருவத்தில் எழுதியிருப்பது கவனிக்கத்தக்கது. குணநலன் சித்திரத்தை விரித்து வளர்த்திக்

கொண்டுபோவதற்கு இது ஏற்ற உருவம். கதை சொல்கிறவர் தன்னிலையில் பேசுகிறபடியால் அகமன நிகழ்வுகளைச் சொல்வதற்கும் இந்த உருவத்தில் வாய்ப்பு உண்டு. இவ்வுருவத்தைக் கையாள வெகு திறமையும், உட்பார்வையும், தன்னடக்கமும் வேண்டும். கொண்டதேவ் ஓகா இயல்பிலே நாவல்திறன் வாய்க்கப்பெற்றவர் என்று சொல்லிவிட முடியாதெனினும் நாவல் முயற்சியில் அவர் வெற்றிகண்டிருக்கிறார் என்பதைச் சொல்லவேண்டும். அக்காலக் கண்ணோட்டத்தில் அது சிலாகிக்கத் தகுந்தது.

யமுனா பாரியாதனையும், சிரெஸ்ததாரையும் எழுதிய இரு ஆசிரியர்களும் பின்வந்த யதார்த்த நாவலுக்கு வழிவகுத்தவர்களாவார்கள். ஆனால் அந்த உணர்வுடன் அவர்கள் தங்கள் நாவல்களை எழுதவில்லை.

மராத்தி நாவல் வரலாற்றிலே யமுனா பாரியாதன் நல்ல கவனம் பெற்றுள்ளது. முதல் யதார்த்த நாவலென வரலாற்றாசிரியர்கள் அதை விவரித்து எழுதுகின்றனர். ஆனால் சிரெஸ்ததார் போதிய கவனம் பெறாமல்போயிருக்கிறது. செய்திறனைப் பொறுத்தவரை சிரெஸ்ததார் சிறந்ததாகும். கதை முடிவிலே அதில் பிரசங்கங்கள் சற்று அதிகம் என்பதைத்தவிர மற்றப்படி நன்றாக இயற்றப்பட்டுள்ளது. 1857-க்கும் 1881-க்குமிடைப்பட்ட காலப்பகுதியில் கற்பனை விநோத நாவல்கள் அதிகமாக வெளிவந்தமையாலும், மக்கள் அவற்றையே விரும்பிப் படித்தமையாலும், சிரெஸ்ததார் கவனம் இழந்துபோயிருக்கலாம். எழுதிய உடனேயே அது பிரசுரமாகியிருந்தால் ஒருவேளை அதற்கு நல்ல வரவேற்பிருந்திருக்கக்கூடும்.

நாம் அடுத்து கவனிக்கப் போகின்ற நாவல் நாராயணராவும் கோதாவரியும் 1879-ல் பிரசுரமாயிற்று. அதன் ஆசிரியர் தாம் இன்னது எழுதுகிறோம் என்றும் எதற்காக அதை அப்படி எழுதுகிறோம் என்பதையும் உணர்ந்தபடி எழுதினார்.

அக்காலத்தில் வெளிவந்து கொண்டிருந்த கற்பனை விநோத நாவல்களுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கவும், கலைபூர்வமான இலக்கியம் படைக்கவேண்டுமென்ற நோக்கத்துடனும் இந்த நாவல் எழுதப்பட்டது. மகாராட்டிரத்தின் செல்வந்தர் மற்றும் அரச வகுப்பினரைப் பற்றியில்லாமல், மத்திய, ஏழை வகுப்பினரைப் பற்றியது இது. மேலும் கற்பனை விசித்திரக் கதைகள் வழக்கமாக முடிவதுபோல இந்நாவல் மங்களமாக முடியவில்லை. ஆசிரியர் முன்னுரையில் தமது நோக்கத்தையும் திட்டத்தையும் தெளிவு படுத்திருக்கிறார். ''நாவல்களின் மூலம் அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சித்திரமாகக் காட்ட வேண்டுமென நாம்

விரும்பினல், அவற்றை உள்ளது உள்ளபடி காட்டவேண்டும். நல்ல மனிதர்கள் எதிர்கொள்ள வேண்டியிருக்கிற கஷ்டங்களையும், பொய்க்குற்றங்கள் சுமத்தப்படுவதனுல் அவர்கள் முடிவிலே அழிந்துபோவதையும் காட்ட வேண்டும். அந்தக் கண்ணேட்டத்தில் தான் நான் இந்த நாவலை எழுதியுள்ளேன். . . மேலும் நமது நாடகங்களும் நாவல்களும் இன்பமாக முடிவதே வழக்கமாயிருக்கின்றது. அதற்கு மாருக நான் இந்நாவலுக்குத் துன்ப முடிவைக் கொடுத்துள்ளேன் . . . எனக்குத் தெரிந்தவரை இம்மாதிரியான நாவல் மராத்தியில் வருவது இதுவே முதல் தடவையாகும்.''

கதைக்களன் பம்பாய்க்கருகில் உள்ள வாசை. நாராயணராவும் கோதாவரியும் பரஸ்பரம் மனமொப்பித் திருமணம் செய்து கொண்டு இன்பமாக வாழ்க்கையைத் தொடங்குகின்றனர். சிறிது காலத்திற்குள் தீயவர் சிலரின் சூழ்ச்சியினுலே அவல முடிவடைகின்றனர்.

தீயவர் குழு கோதாவரியின்மீது கண் வைக்கிறது. வெகு தொலைவிலுள்ள ஒரு ஊருக்கு நாராயணராவ் மாற்றலாகிப் போகும்படி ஏற்பாடு செய்து, அவன் அங்கு போனபின்னர் கோதாவரி அவனுக்குத் துரோகம் செய்வதாக அவன் சந்தேகப் படும்படி செய்து, அவன் அதை நேரில் கண்டறிவதற்காக ஊர் திரும்ப வைக்கின்றனர். குழுவினர் மீண்டும் பல சூழ்ச்சிகளைக் கையாண்டு அவள் துரோகிதானென சந்தேகத்துக்கிடமில்லாமல் நம்பும்படியாகச் செய்கின்றனர், உடனே அவன் அவளது உணவில் நஞ்சுகலந்து அவளைக் கொல்கிருன். அதன் பிறகு தான் அயோக்கியர்களின் சூழ்ச்சிக்கு தான் பலியாகிவிட்டது அவனுக்குப் புரிகிறது. உடனே தீயவர் கூட்டத்தைக் கொன்று தீர்த்துத் தன்னையும் கொன்று கொள்ளுகிருன்.

கதைக் கட்டுமானம் சிக்கலாக இருக்கின்றது. நிகழ்ச்சியிணைப்பு சிலவிடங்களில் சரியாகப் பொருந்தவில்லை. ஷேக்ஸ்பியரின் ஒத்தெல்லோ நாடகத்தின் தாக்கம் தெளிவாகத் தெரிகின்றது. ஆனுல் தாம் எதைச் செய்யத் திட்டமிட்டாரோ அந்த நோக்கத்தில் ஆசிரியர் வெற்றி கண்டு விட்டார் என்பதைச் சொல்லியே ஆக வேண்டும். இது ஆசிரியரின் முதல் நாவல் என்பதையும் மனதில்கொள்ள வேண்டும். மத்தியதர வகுப்பினரைப் பற்றி யதார்த்தமாக ஒரு துன்ப முடிவுக் கதையை எழுதவேண்டுமென விரும்பினுர். அதைச் செய்துவிட்டார். எனவே மராத்தி யதார்த்த நாவல் வரலாற்றிலே இந்நாவலும் ஒரு முக்கிய திருப்பமாக அமைகின்றது.

இதுபோன்ற நாவல்கள் மேலும் பல வெளிவரத்தொடங்கின, ஒரு சில கூறுகள் இவ்வகை நாவலுக்குப் பொதுவானவை.

மீண்டும் மீண்டும் வருபவை. ஹரிபாவரின் நாவல்களிலுங்கூட காணப்படுபவை. அக்காலத்து நாடகங்கள் சிலவற்றிலும் அவை இருக்கின்றன. இக்கூறுகள் பலவிதம். ஒரு ஏழைக்கு ஒரு அழகான மகள். பூப்படையுமுன் அவளைக் கட்டிக் கொடுக்க வேண்டிய அவசரம் கொண்ட அந்த தரித்திரர் (அல்லது பேராசைக் காரர்) தமக்குப் பணம் கொடுக்கிற மாப்பிள்ளையாகத் தேடுவார். பெண்களுக்கு ஆறேழு வயதிலும் ஆண்களுக்குப் பதினலு பதினைந்து வயதிலும் திருமணங்கள் நடந்த அந்த நாளிலே வயதேறிவிட்ட அந்தப் பெண்ணுக்கு ஒரு தாரமிழந்த பணக்காரன் தான் கிடைப்பான். அவன் இளமையாக இருக்கலாம் அல்லது வயதான வனகவும் இருக்கலாம். சில சமயங்களில் ஜாகிர்தார் மாப்பிள்ளை யும் கூட வருவான் அல்லது செத்துப்போன ஒரு பணக்காரக் கருமியின் மகன் அமைவான். அந்த மகனுக்கு ஒரு நண்பன் இருப்பான். அவன் மாப்பிள்ளையை குடி கூத்தியில் பழக்குவான். அழகான ஒரு பெண்ணை மணந்துகொள்ளச் சொல்லுவான். அப்புறம் அவளைத் தானே ஆளலாம் என்ற நோக்கத்துடன் சொல்லுவான். கூட்டிவிடுகிற பெண்கள், ஊழல் உத்தியோகஸ்தர் கள், மூத்தகுடியாள் மகளை ஒடுக்குகிற இளையகுடியாள், அதன் காரணமாகத் தற்கொலை செய்கிற அல்லது எவனுனலும் சரி என்று கழுத்தை நீட்டுகிற அல்லது காதலனேடு ஓடிப்போகிற பெண்கள் எல்லோரும் அடிக்கடி அந்த நாவல்களிலே காணப் படுகிருர்கள்.

முடிவாக வரலாற்று நாவல் என்கிற நாவல் வகையைப் பற்றி யும் கவனித்துவிடுவது அவசியமாகும். மேற்குறிப்பிட்ட நாவல்கள் எப்படி ஹரிபாவரது யதார்த்த நாவல்களுக்கு முன்னேடியாக இருந்தனவோ அதுபோல அவரது வரலாற்று நாவல்களுக்கு முன்னேடியாக அமைந்த நாவல் ஒன்றும் இக்காலத்தில் வெளி வந்தது. ஆர். பி. குஞ்சிகர் எழுதிய மோச்சங்காடு என்பது அது. 1867லிருந்து 1870 வரை தொடராகவும் பின் 1871-ல் நூலுருவ மாகவும் வந்தது.

வரலாற்று நாவலின் முன்மாதிரியாக மோச்சங்காடு கருதப் படுகின்றது. இந்திய மொழிகளில் வரலாற்று நாவல்கள் பல்வேறு நோக்கங்களுடன் எழுதப்பட்டிருக்கின்றன. பழமையைக் கற்பனை மயமாக்கி வாசகர்களை மகிழ்விப்பது ஒன்று. அரசியல் நோக்கம் மற்ருென்று. அடிமைகளாய்க் கிடந்த இந்தியர்களின் தேசிய உணர்வையும் விடுதலை வேட்கையையும் கிளர்வித்து அந்நிய ஆதிக்கத்தினின்று நாட்டை விடுவிக்கும் பணிக்கு அவர்களைத் தயார் செய்விப்பதும் ஒரு நோக்கமாக இருந்தது. கிராண்ட் டப்பு (Grant Daff) எழுதிய மராத்தியர் வரலாறு அக்காலத்தில் தான்

வெளியாகியிருந்ததால் மராத்திய வரலாறு குறித்த ஆர்வம் உருவாகி வளர்ந்திருந்தது. அதுபோலவே தோட் (Tod) எழுதியிருந்த இராஜஸ்தான வரலாறு ராஜஸ்தானியரது வரலாற்று விவரங்களை அறிந்துகொள்ள ஏதுவாக இருந்தது. மராத்திய இராஜபுத்திர வரலாற்று வீரர்களும், அவர்கள் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளும் சுவையான கதைகள் புனைய நல்ல வாகாக இருந்தன. அந்நியர் எதிர்ப்பு உணர்வைக் கிளப்புவதும் அரசியலுக்கு ஏற்றதாக இருந்தது. வரலாற்று நாவலுக்கு இன்னொரு உபயோகமும் இருந்தது. பழமையை மீண்டும் இணைத்துருவாக்கவும், கிடைத்த வரலாற்று விவரங்களைக்கொண்டு வரலாற்றுக் காலங்களின் சூழலையும் நிலவரத்தையும் கருத்துப்போக்குகளையும் முழுமையாக மீண்டும் வரப்பற்றிக்கொள்ளவும் அவை பயன்பட்டன. மோச்சங்காடு இந்த வகையைச் சேர்ந்தது. நாவல் சிவாஜியின் காலத்தைப் பின்னணியாகக் கொண்டது. சிவாஜியின் தோழர்கள் சிலரைப் பற்றிப் பேச்சு வருகிறது. மக்கள் சிவாஜியின் குணத்தையும் செயலையும் பற்றி என்ன எண்ணினார்கள் என்பதும் சொல்லப்படுகிறது. ஆனால் நாவல் சிவாஜியைப் பற்றியதல்ல. ஆசிரியர் சிவாஜி காலத்து நிலவரச் சூழலையும் கருத்துப்போக்குகளையும் வெற்றிகரமாக வெளிக் கொணர்ந்திருக்கின்றார்.

மக்கள் இவ்வகை நாவலை விரும்பத் தொடங்கியதாலே, ஒன்றன்பின் ஒன்றாக பல இவ்வகையில் வர ஆரம்பித்தன. ஹரிபாவரின் மொத்த இலக்கியப்படைப்பிலே ஏறத்தாழ பாதி வரலாற்று நாவல்கள்தாம் அவரது நாவல்கள் அவ்வகையை மேலும் ரஞ்சகமாக்கின. எனவே மராத்திய வரலாற்றுச் சூழலைப் பின்னணியாகக் கொண்டு பலரும் நாவல்கள் எழுதத் தொடங்கினர். இன்றும் எழுதி வருகின்றனர்.

ஹரிபாவர் எழுதத் தொடங்கியபோது மகாராட்டிரத்தில் நிலவிய இலக்கியச் சூழல் இதுதான். நாவல் இலக்கியத்திலே அன்று கற்பனாவிசித்திரம், யதார்த்தம், வரலாறு என்று மூன்று போக்குகள் இருந்தன. பிந்தைய இரண்டிலும் ஹரிபாவர் நிறைய எழுதியது மட்டுமல்ல, உயர்ந்த சாதனை என்று சொல்லக்கூடியபடி மிகச் சிறப்பாகவும் எழுதினார்.

## அத்தியாயம் 3

# ஹரிபாவரின் சமூக நாவல்கள்

ஹரிபாவரின் முதல் நாவல் 1883லும் கடைசி நாவல் 1917லும் எழுதப்பட்டது. இந்த இருபத்தி நான்கு ஆண்டுகளிலே அவர் இருபத்திரண்டு நாவல்கள் எழுதினர். பதினேரு சமூக நாவல்கள்; பதினேரு சரித்திர நாவல்கள். சமூக நாவல்களில் பத்து மகாராட்டிரத்தின்—குறிப்பாக—பூனுவின் சமகால சமுதாய வாழ்க்கையைப் பற்றியவை. மற்ற ஒன்று பிரெஞ்சு நாவலொன்றைத் தழுவி எழுதப்பட்ட ஒரு ஆங்கில நாவலின் மொழிபெயர்ப்பு. வரலாற்று நாவல்களில் ஒன்று மொழிபெயர்ப்பு, கர்னல் மெடோஸ் டேயிலர் (Col. Meadows Taylor) ஆங்கிலத்தில் எழுதிய நாவலொன்றின் மராத்தியாக்கம். நான்கு சமூக நாவல்களும் நான்கு சரித்திர நாவல்களும் முடிக்கப்படாதவை.

ஹரிபாவரின் சமூக நாவல்களைப் பற்றியது இந்த அத்தியாயம். அவை மகாராட்டிரத்தின் மத்திய வர்க்கத்தினருடைய வாழ்க்கையைப் படம் பிடிக்கின்றன. கற்றவர், ஓரளவு கற்றவர், கல்லாதவர் ஆகியோரைப் பற்றி சொல்லுகின்றன. கதாபாத்திரத்தின் கல்வி பற்றிய குறிப்பு எப்படியும் நாவலில் இடம் பெறுகிறது. பாத்திர வர்ணனைக்கு அது இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. ஏனெனில் அக்காலத்தில் வெகு சிலரே கற்றிருந்தனர். ஆங்கிலக் கல்வியின் விளைவுகளைப் பற்றி முரண்பட்ட கருத்துக்கள் நிலவின. அதை ஆதரித்தவர், எதிர்த்தவர் அனைவரும் அக்கல்வி கற்றவர்களை மிக உன்னிப்பாகக் கவனித்து வந்தனர்.

இந்தியாவிலே பெரும்பாலும் எல்லாப் பாகங்களிலும் பெரிய பெரிய மிராசுதார்கள் உண்டு. ஆனல் மகாராட்டிரத்திலே அப்படி இல்லை. அங்கே சமுதாய ஏணியின் உச்சப் படியிலே லேவாதேவிக்காரரும், வழக்கறிஞர்களும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், நொடித்த ஜாகிர்தாரர்களும் இருந்தனர். ஹரிபாவரின் நாவல்களிலே அவர்கள்தான் வருகின்றனர். சமஸ்தான அரசகுமாரர்களும் பிரித்தானிய அதிகாரிகளும் அவ்வப்பொழுதுதான் வருகின்றனர். முக்கிய பாத்திரங்களாக வருவது கிடையாது. சமுதாயத்தின் அடிமட்டத்தில் புரோகிதத்தைத் தொழிலாகக்

கொண்ட ஏழை அந்தணரும், உறவினரை அண்டிப் பிழைத்த விதவைகளும், கிடைத்த வேலையைச் செய்துகொண்டுவந்த அன்றாடங்காய்ச்சிகளும் இருந்தனர். போக்கிரிகளும் எத்தர்களும் இருக்கவே இருந்தனர். ஹரிபாவரின் தொடக்ககால நாவல்கள் பெரும்பாலும் ஹிந்துப் பெண்களின் நிலைமையை விவரித்து வந்தன. வெகு இளமைப் பருவத்தில் அவர்களுக்குத் திருமணமாகிவிடும். ஆறேழு வயதில் அது நடந்துவிடும். மாப்பிள்ளை பையன்களுக்கு பன்னிரண்டு பதின்மூன்று வயதுக்குள் இருக்கும் (ஹரிபாவருக்குப் பதினைந்து வயதில் ஆயிற்று). சில பெண்கள் பத்துப் பதினைந்து வயதுக்குள்ளேயே விதவையாக நேரிட்டுவிடும். சற்று முற்போக்கான குடும்பங்களானால் பிழைத்தார்கள். மற்றப்படி நரக வாழ்வுதான் அவர்கள் பங்கு. துயரத்தோடு உழைத்து உழைத்து அடிமைபோல காலந்தள்ளினார்கள். சுமங்கலிகளும் பெரிதாக வாழ்ந்துவிடவில்லை. சில கணவன்மார் குடி கூத்தியில் பழகிக்கொண்டு மனைவிமாரை அடித்துக் கொடுமை செய்து வீட்டை விட்டு விரட்டினார்கள். இதற்கெல்லாம் தீர்வுகளாக பெண் கல்வி வலியுறுத்தப்பட்டது. ஆண்களுக்கு அறிவொளியுடன் கூடிய புதிய பார்வைகள் தேவை என்றும் சொல்லப்பட்டது. கோவிந்தராவ்—காசிபாய் தம்பதிகளுடன் பழகியதன் விளைவாக ஹரிபாவர் பெண்கள் பிரச்னைகள் குறித்து முற்போக்குக் கருத்துக்கள் கொள்ளலானார். பெண்களை முன்னேற்ற வேண்டும் என அவர் நினைத்தார். மில் (Mill), ஸ்பென்ஸர் (Spencer) முதலியோருடைய நூல்களும் அவரைப் பாதித்திருந்தன.

ஹரிபாவர் ஆங்கில ஐரோப்பிய இலக்கியங்களை நன்கு படித்திருந்தார் என்பது முதல் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. ஷேக்ஸ்பியரின் நாடகங்களை அவர் பலமுறை படித்திருந்தார். மோலியர், சோலா, தாக்கரே, டிக்கன்ஸ், ஸ்காட், ஜேன் ஆஸ்டின், ஜார்ஜ் எலியட் ஆகிய பலரது நூல்களை நன்கு வாசித்திருந்தார். இவ்வளவிருந்தும் அவருடைய முதல் நாவலில் ஜி. டபிள்யூ. எம். ரெயினால்டுஸின் (G.W.M. Reynolds) தாக்கம் அதிகமாகத் தென்படுவது வியப்பாகவே இருக்கின்றது. இதற்குக் காரணமாக இருப்பது அவர் காலத்து இலக்கியச் சூழல்தான் என்றே நினைக்கத் தோன்றுகிறது. அதாவது: கல்லூரிப் படிப்புப் படித்தவர்களுக்கு வாசிக்க ஓய்வு கிடைத்தால் ஆங்கில நாவல்களையே வாசிக்க விரும்பினர். மற்றப்படி ஓரளவு படித்தோரும், எழுதப் படிக்கத் தெரிந்த பெண்களும், வேலைவெட்டியற்ற சாவகாசக்காரரும்தான் மராத்தி நாவல்களைப் படித்து வந்தனர். இவர்கள் பெரும்பாலும் பொழுதுபோக்குக்காக வாசித்தனர். எனவே அவர்களுக்கென கற்பனாவிசித்திர நாவல்கள் பல மராத்தியில் அப்போது வெளிவந்தன. நடப்பு சமுதாயத்தோடு

அதிகத் தொடர்பில்லாத அந்த நாவல்களை அவர்கள் விரும்பி வாசித்தனர். யமுனா பாரியாதன், சிரெஸ்ததார் போன்ற யதார்த்த நாவல்களில் அவர்களுக்கேற்ற பரபரப்பு அம்சங்கள் கிடையா. வாசகர்கள் மனத்திலே அறிவொளி ஏற்றவும் புத்தி புகட்டவும் எழுதப்பட்டவை அவை. எனவே அவற்றின் பாணியிலே நாவல்கள் வரவேண்டுமானால் முதலிலே அவற்றை வாசிக்க வாசகர்களையும் உருவாக்க வேண்டும். ஹரிபாவர் அந்தப் பணியைச் செய்ய வேண்டியவரானார். அவர் சமுதாயப் பிரக்ஞை ஒளி பெற்றிருந்ததோடு, சுவையாகக் கதை சொல்லிக்கொண்டு போகும் வரமும் கொண்டிருந்தார். அக்காலத்து வாசகர்களை அவர் ஈர்க்க வேண்டியதிருந்தது. கற்பனை விசித்திரங்கள் மீது அவர்கள் கொண்டிருந்த விருப்பத்தைத் திருப்பவேண்டும். உயர்கல்வி பெற்றோர் நாவல் வாசிக்கும் பழக்கத்தை மேற்கொள்ளும்படி செய்ய வேண்டும். இதெல்லாம் எளிதான காரியமல்ல. ஏனெனில் கற்பனை சாகசக் கதைகள் வாசகர்களுக்குப் பரபரப்பு ஊட்டியதோடு அவர்களது பொழுதைப் போக்கவும் உதவிவந்தன. அந்த அம்சங்களைச் சிறிதாவது தமது நாவல்களிலும் புகுத்தினால்தான் வாசகர்கள் மனங்களை மாற்ற முடியும் என அவர் நினைத்திருக்கலாம். அவரது நாவல்களில் ஒரு சில மர்மங்களும் வீரசாகசங்களும் காணப்படுவதற்கு இதுவே காரணமாக இருக்கவேண்டும். இந்த அம்சங்கள் சமுதாய யதார்த்த நாவலில் இணைந்து பொருந்தக்கூடியவை அல்ல. ஆயினும் ஹரிபாவரின் நாவல்களில் இந்த இரண்டு கூறுகளும் கலந்து கிடக்கின்றன. நாம் ஒரு விஷயத்தை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். டிக்கன்ஸும் தாக்கரேயும் எழுதின காலத்தில் ஆங்கில நாவல் வளர்ந்து ஒரு நூற்றாண்டு கண்டுவிட்டது. ஆனால் ஹரிபாவர் எழுதியபோது மராத்தி நாவலின் வயது இருபத்தைந்துதான். எனவே வாசகர்களுக்குச் சிறிது பரபரப்பு ஊட்டிக்கொண்டு அதே சமயத்தில் மத்திய வகுப்பினரின் வாழ்க்கையையும் அதன் அவலங்களையும் காட்டிவிட வேண்டும். பரபரப்பினூடேயே அவர்களுக்கு அறிவு கொளுத்த வேண்டும். இப்போதைக்கு ரேயினால்ட்ஸின் பாணியைத் தழுவினால்தான் நல்லது. பொழுதுபோக்குக் கலை கைவந்தவர் ரேயினால்ட்ஸ். அந்த நாளில் மகாராட்டிரத்தில் ஆங்கிலக் கல்வி கற்றோரும் ரேயினால்ட்ஸை மிகவும் விரும்பிப் படித்தனர் என்பதையும் இங்கு நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். ஹரிபாவர் மிகவும் மதித்த விஷ்ணு சாஸ்திரி சிப்லங்கர் ரேயினால்ட்ஸை விரும்பி வாசித்தவர்தாம்.

ஆகவே ஹரிபாவரும் ரேயினால்ட்ஸைத் தழுவிக்கொள்ளத் தீர்மானித்தார். பழைய இலண்டன் மர்மங்களைத் (The mysteries of Old London) தழுவி 1883-ல் மத்லி ஸ்திதி (Madhli Sthithi)யை

எழுதத் தொடங்கினுர். ஆனுல் முதல் அத்தியாயம் முடிந்த வுடனேயே அவருக்குத் தழுவலின் சங்கடங்கள் தெரியலாயின. சுயமாக எழுதுவது தேவலாம் எனத் தோன்றிவிட்டது. மூல நாவலின் அந்நிய பாத்திரங்களும், அவர்களது எண்ணங்களும், சிந்தனைகளும், பழக்க வழக்கங்கள் எல்லாமும் இந்தியப் பாத்திரங் களோடு குழம்பின. நாவல் ஒரு ஒட்டு வேலையாகத் தோற்ற மளிக்கும் எனத் தெரிந்தது. எனவே ரேயினுல்ட்ஸைத் தழுவுவதை விட்டுவிட்டுச் சொந்தமாக எழுதிக்கொண்டு போனுர். ஆயினும் மூலநாவல் அதற்குள் அவரது சிந்தனையில் ஊறிவிட்டிருந்தமை யால் முதல் மூன்று நான்கு அத்தியாயங்களில் அதன் தாக்கம் மிகுதியாகத் தெரிகிறது என்பதாக அவர் அந்நாவலின் முன்னுரை யில் எழுதுகிறுர். தொடர் நாவல் எழுத ஹரிபாவர் எண்ண மிட்டார். ஆஜ்கல்சிய கோஷ்டி (Stories of contemporary life) என்ற பொதுத் தலைப்பின் கீழ் வரவிருந்த அந்தத் தொடரின் முதல் நாவலாகவே மத்லி ஸ்திதி வெளிவந்தது. நாவல்களில் அன்றைய மகாராட்டிரத்தின் சமுதாய வாழ்க்கையைச் சித்தரித்து விட அவர் திட்டமிட்டார். மத்லி ஸ்திதியில் பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் நிஜவாழ்வை அடிப்படையாகக் கொண்டு அமைந் திருந்தாலும் எந்த ஒரு தனிநபரையோ நிகழ்ச்சியையோ அவை குறிப்பிட்டதாக இல்லை.

நாவல் தொடர்கதையாக பூனே வைபவத்தில் வெளியிடப் பட்டது. ஓரிரு தொடர் வந்ததுமே பாராட்டுக் கடிதங்கள் பிரசுராலயத்துக்கு வந்து குவியலாயின. கல்வியிற்சிறந்தோர் பலரும் பிரபல விமர்சகர்களும் புகழ்ந்து எழுதியிருந்தனர். நாவல் நூலுருவில் 1888-ல் வெளியாயிற்று.

அக்காலத்தில் வழக்கமாக எழுதப்பட்டுவந்த நாவல்களினின்று இது மிகவும் வேறுபட்டிருந்தது. இது ஒரு புதியவகை என ரசிகர் கள் உணர்ந்தனர். நடை நேரடியாக, எளிமையாக, அன்றுடப் பேச்சுவழக்கில் இருந்தது. இலக்கிய பந்தாக்களும் தோரணங் களும் காணப்படவில்லை. இடங்கள், பாத்திரங்களுடைய வர்ணனை கள் மிகக் கவனமாகச் செய்யப்பட்டிருந்தது. விவரங்களை அமைத்த விதத்திலே வாசகர்கள் எல்லாவற்றையும் மனக்கண்கொண்டு காண முடிந்தது. கதாநாயகன் கதாநாயகி என்ற அச்சுவார்ப்பு பெரிதுபடுத்தப்படவில்லை. மொத்தத்தில் நாவலின் உலகம் வாசகர்கள் வாழ்கிற நிஜ உலகம்போலவே இருந்தது. நாவலுக் கும் வாசகனுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதுபோல இருந் தது. மத்லி ஸ்திதி மூலம் ஹரிபாவர் அந்தத் தொடர்பைத் தொடங்கிவைத்தார்.

மத்லி ஸ்திதி என்ற தலைப்புக்குப் பல விளக்கங்கள் கூற முனை கின்றனர். அந்தச் சொல் மத்திய நிலை என்ற பொருளையே தரும். ஆசிரியர் கொடுக்கும் விளக்கம் இது: ''ஆஜ்கல்சிய கதைகள் நிதரிசன நடப்பு வாழ்க்கையை விவரிக்கின்றன. மத்லி ஸ்திதி அவைகளில் ஒன்று. கதை மத்திய நிலையில் உள்ளவர்களைப் பற்றிய தாதலாலே அதற்கு அப்பெயர் கொடுக்கப்பட்டது. ஆஜ்கல்சிய கோஷ்டியின் அடுத்த கதை கணபதிராவ். கல்வி கற்று அதன்மூலம் உயர்நிலை பெற்றோரைப் பற்றியும், எப்போதும் சமுதாய ஏற்றத் தைப்பற்றிய சிந்தனையும் அக்கறையும் கொண்டோரைப்பற்றியும் நான் அக்கதையில் விவரித்து வருகின்றேன். மத்லி ஸ்திதி பாத் திரங்களான விஷ்ணுவும் யமுனுவும் இக்கதையிலும் வருகின்றனர். அவர்கள் நல்ல தரமான கல்வி பெறுவதால் அவர்களது, மனம் உயர்வதாகவும் அவர்களது சிந்தனைகள் மேம்படுவதாகவும் காட்டி யுள்ளேன். அதற்குப் பிறகு தாழ்ந்த நிலையிலுள்ளோரைப்பற்றி ஒரு கதை எழுதுவதாயுள்ளேன். மத்லி ஸ்திதியில் வருகின்ற பாத் திரங்களான கான்யாவும் நான்யாவும் தரக்குறைவான கல்வி கற்றதன் விளைவாகத் தாழ்ந்த நிலைக்கு இறங்குவதாக காண்பிக்க விருக்கிறேன். தாழ்ந்த நிலை என்றால் தாழ்ந்த நிலையிலிருக்கும் மனித ஜீவன்கள் என்று பொருள். பொதுத் திட்டம் அதுதான்.''

ஆனால் கான்யா நான்யா பற்றி அவர் கடைசிவரை எழுதவே இல்லை.

சிலர் மத்லி ஸ்திதி என்ற சொல்லுக்கு வேறு பொருள் கூறு கின்றனர். மேனாட்டுக் கல்வி மகாராட்டிரத்தில் விளைவித்த தாக்கத்தை அவர்கள் மூன்று நிலைகளாகப் பிரிக்கின்றனர். முதல் நிலை அப்போதுதான் அக்கல்வி அறிமுகமாகியிருந்த நிலை. இரண்டா வது அல்லது மத்திய நிலை மக்கள் அப்புதிய கல்வியைப் பெற்றதின் காரணமாகக் கண்கூசி அறிவு மயங்கிய நிலை. அதாவது பாரதத்தை வெகுவாகக் கண்டனம் பண்ணி மேனாட்டை அதன் தீமைகள் உட்படத் தழுவிக்கொண்ட நிலை, மூன்றாவது, மேனாட்டுக் கல்வி தந்த புதிய அறிவால் நற்பயன் பெற்ற நிலை. இந்த மூன்று நிலைகளில் மத்லி ஸ்திதி இரண்டாவது நிலையைப் பற்றி விவரிப்ப தால் அதற்கு அப்பெயர் வந்ததெனவும் அவர்கள் விளக்கம் தருகின்றனர்.

இரு விளக்கங்களிலும் ஓரளவு உண்மை உளது. மத்லி ஸ்திதி சித்தரிப்பது பூனா மத்திய வர்க்கத்தினரின் ஒரு குறிப்பிட்ட பகுதி யினரையாகும். கான்வாசு பெரிதென்று சொல்லமுடியாது. ஆறேழு குடும்பங்களும் ஏறத்தாழ ஐம்பது பாத்திரங்களும் வருகின் றனர். எல்லோரும் அவர் காலத்தில் வாழ்ந்தவர்கள். கதையின் முக்கிய வில்லனான கோவிந்தராவ் என்பவன் காகுபாய், தாமாபாய்

என்ற இரு பெண்களின் துணையுடன் செய்கின்ற இழிசெயல்களை நாவல் விவரிக்கின்றது. விநாயகராவ் என்ருெரு இளைஞன். வசதி படைத்த லேவாதேவிக்காரரின் மகன். தந்தை இறந்ததும் அவன் தலையெடுக்கிருன். கோவிந்தராவ் அவனைக் கெடுத்து அவன் பணத்தைக் கறக்க முனைகிருன். தாயுடனும், மனைவி சரஸ்வதியுடனும் வசித்து வருகின்ற கோவிந்தராவை ஒரு சமூக சங்கத்துக்கு அறிமுகப்படுத்துகின்ருன். அது மத்திய வர்க்கத்தின் படித்த பிரமுகர்கள் மாலை வேளைகளில் சந்தித்து உறவாடுகின்ற சங்கம். குடிப்பதும் அரட்டையடிப்பதும் அவர்களது முக்கிய வேலைகள். அவ்வப்போது பாடுவதற்கு தாசிகளை அழைப்பதுண்டு. அவர்களுடன் பழகியதன் விளைவாக விநாயகராவ் தன் வீட்டைப் புதுப்பித்து, நவீன தட்டு முட்டுகள் வாங்கிப் போட்டு நண்பர்களை அழைத்துக் குடிக்கவும் பாட்டுச் கச்சேரிகள் நடத்தவும் தொடங்கு கிருன்.

நாளடைவில் அவன் தன் தாயைத் துரத்திவிட்டு மனைவியை அடித்து இரக்கமில்லாமல் நடத்துகின்ருன். சரஸ்வதியின் நடத்தையில் சந்தேகம் கொள்ளுமாறு விநாயக்கிடம் கோவிந்தராவ் பேசி வருகின்ருன். சரஸ்வதியிடம் தனிமையில் விநாயக்கைப்பற்றியும் அவனது குடிகூத்தி நடவடிக்கைகளைப் பற்றியும் குறைகூறி அவள் மனத்தைக் கவர்ந்துகொள்ள முயல்கிருன். அவள் அவனது வலையில் விழாமல், அவன் ஆசைக்கு இணங்காமல் இருக்கின்ருள். அதனுல் அவளை மேலும் கொடுமைப்படுத்தும்படியாக விநாயக்கைத் தூண்டிவிடுகிருன். எனவே விநாயக் அவள்மேல் திருட்டுக் குற்றம் சுமத்தி அவளை வீட்டைவிட்டு விரட்டுகின்ருன்.

இதற்குள் விநாயக்கின் பணம் முழுவதையும் கோவிந்தராவ் சுரண்டி முடித்துவிடுகிருன். இனி அவனிடமிருந்து பணம் பெயராது என்ற நிலை வந்துபோது அவன் காகுபாய், தாமாபாய் மற்றும் அவர்கள் கடத்தி வைத்திருந்த வேறு இரு இளம் பெண்கள் சகிதம் பூனுவை விட்டு நகர்கின்ருன். ஆனுல் இதுகாறும் அவனது நடவடிக்கைகள் அனைத்தையும் விடாமல் கண்காணித்துக் கொண்டே வந்திருந்த ஒருவன் காவல் துறை துணையுடன் பூனு ரயிலடிக்கு வந்து அவர்களைக் கைதுசெய்கிருன். பின்னர் மாஜிஸ்டிரேட் முன்னிலையில் விசாரணை நடக்கிறது. தண்டனைகள் கிடைக்கின்றன. பறிபோன பணம் விநாயக்குக்கு மீண்டும் கிடைக்கிறது. அவனுக்கு புத்தியும் வருகிறது. மனைவி குற்றமற்றவள் என்று தெரிந்துவிடுகிறது. தாயையும் மனைவியையும் அழைத்து வருகிருன்.

நாவல் ஏறத்தாழ ஐநூறு பக்க நீளமுள்ளது. மேற்கண்ட சின்னச் சுருக்கம் மிகவும் மேலோட்டமானது என்பதைச் சொல்ல

வேண்டியதில்லை. கோவிந்தராவின் கயமைக்கு உள்ளான குடும்பங்கள் வேறு சிலவும் வருகின்றன. ஆனால் கடைசியில் எல்லாம் இன்பமாக முடிவுறுகின்றன.

மத்லி ஸ்திதியின் குறைபாடுகள் சில வாசித்தவுடனேயே தெரியக்கூடியவை. ஹரிபாவர் இப்போது எழுதிப் பழகுகின்ற நிலையில்தான் இருந்தார். வர்ணனைகள் நீளம். விஷயங்களைப் பகுத்து விரித்து எழுதுவதும் நீளமாகப் போகின்றது. கதை நிகழ்வுகள் நின்றுவிட்டு மீண்டும் தொடர்வதற்குள் பல அத்தியாயங்கள் வந்துபோய்விடுவதால், வாசகர்களுக்கு முந்திய நிகழ்வை நினைவுக்குக் கொண்டுவருவது சிரமமாக உள்ளது. முன்னிலை விளிகள் பல உள. அவற்றில் சில கதாபாத்திரங்களை விளிப்பவை. ஒரு சில வாசகர்களை விளிக்கின்றன. வேறு சில யாரையுமே விளிப்பதில்லை. ஆச்சரியக் குறிப்புகள் போல் ஒலிக்கின்றன. மத்திய வர்க்க வாழ்க்கையின் சீர்கேடுகளையும் அசிங்கமான பகுதிகளையும் மட்டுமேதான் நாவல் விவரிக்கிறது; அதன் துலக்கமான அம்சங்களைப் பற்றி ஒன்றும் கூறுவதில்லையே என்பதும் ஒரு சிலரின் குறையாக இருக்கக்கூடும். ஆனால் ஆசிரியரின் நோக்கமே அதுதான். நாவலில் வருகின்ற ஒரு குடும்பம் அப்படியில்லை. அது மத்திய வர்க்கத்தினரில் சிலர் இக்காலத்தில் மேற்கொள்ளத் தொடங்கியிருந்த புதிய ஒளிமயமான வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாகும். நரோபந்த் அவன் மனைவி ராதாபாய், மகள் யமுனா, நரோபந்த் படிக்க வைக்கும் விஷ்ணு ஆகியோர் அக்குடும்பத்தின் உறுப்பினர்கள். ஹரிபாவரின் அடுத்த நாவலான கணபதிராவில் விஷ்ணுவும் யமுனாவும் வயது வந்த பாத்திரங்களாகச் சித்தரிக்கப்படுவதாலும் இக்குடும்பம் இங்கே குறிப்பிடத் தகுந்ததாகிறது.

குறைகள் இருந்தபோதிலும் நாவல் இன்றைக்கும் படித்துச் சுவைத்து மகிழக்கூடியதாக இருக்கின்றது. அதன் வீச்சு விரிந்ததல்ல. அக்காலச் சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட பகுதியினரைப் பற்றியதே ஆகும். ஆனால் அப்பகுதியினரை உள்ளது உள்ளபடி படம் பிடித்திருக்கிறது. இடங்கள், மாந்தர் ஆகியோரின் பெயர்கள் துல்லியமாகத் தரப்படுகின்றன. குறிப்பிட்டுச் சொல்லிக் கொள்ளும்படியாக விவரிக்கப்படுகின்றன. நடை எளிமையானது; நேரடியானது. உரையாடல்கள்—முந்தைய நாவல்கள் போலில்லாமல்—இயற்கையாக பேச்சு மொழியில் திறம்படக் கையாளப் பட்டுள்ளன.

மத்லி ஸ்திதி புத்தக உருவில் வருவதற்கு முன்பாகவே கணபதிராவை ஹரிபாவர் (1886-ல்) பிரசுரிக்கத் தொடங்கியிருந்தார். இந்நாவல் முடிக்கப்படாத ஒன்று. இது மத்லி ஸ்திதியினின்று முற்றிலும் வேறுபட்டது. கதை மாந்தர் வேறு வர்க்கத்

தைச் சேர்ந்தவர்; வேறு பண்புகள், திறன்கள் பெற்றவர். கணபதி ராவ்—நாவலுக்கு அவன் பெயர்தான்—ஒரு அரசு அதிகாரியின் மகன். பூனு தக்காண கல்லூரியில் பி.ஏ. படித்து வருகிறுன்; வயது இருபது; திருமணமாகியிருக்கின்றது. அவனது நண்பன் நாணு அவன் வகுப்பில் படிப்பவன். வயதும் இருபதுதான்; ஆனுல் இன்னும் திருமணமாகவில்லே. நான்கு வயதிலேயே தந்தையை இழந்துவிட்ட நாணு தாயுடன் மாமாவின் ஆதரவில் இருந்து வருபவன். அவனது சகோதரி கோதாவரி ஒரு புரோகிதரின் மகனுக்கு வாழ்க்கைப்பட்டிருக்கிறுள். கணவன், மாமியார் ஆகியோரால் அவளுக்கு இமிசை அதிகம்.

மத்திலி ஸ்திதியில் நாம் சந்தித்த நரோபந்தையும் ராதா பாயையும் இங்கும் சந்திக்கின்றேம். அவர்களது மகள் யமுனு வுக்கு விஷ்ணுவுடன் திருமணமாகி அவள் இப்போது லக்ஷ்மி என்றழைக்கப்படுகின்றுள். விஷ்ணுவும் தக்காண கல்லூரியில் படிக் கின்றுன். கணபதிராவ், நாணுவுக்கு ஒரு வருடம் ஜூனியர்.

நயஉணர்வுகள் கொண்ட கணபதிராவுக்கு சமுதாய சீர் திருத்தங்களில் தீவிர நாட்டம் இருக்கின்றது. அவன் ஆங்கில சமஸ் கிருத இலக்கியங்களே நன்கு கற்றிருந்தான். மில், ஸ்பென்ஸர் ஆகியோரது கருத்துக்களில் உடன்பாடு கொண்டு சமுதாய மாற்றங் களில் ஆர்வம் கொள்ளுகின்றுன். பண்புமிக்க ஒரு குடும்பத்தின ரோடு அந்த நண்பர்களுக்கு அறிமுகம் கிட்டுகின்றது. கிருஷ்ணுராவ், மனேவி ராமாபாய், மகள் துவாரகா ஆகியோருடன் அவர்கள் பழகிவருகின்றனர். நாணுவும் துவாரகாவும் திருமணம் செய்து கொள்ளுவர் என்பதாக ஒரு மௌன உடன்பாடு எல்லோரிடமும் நிலவுகின்றது.

நாவல் செறிவுடன் வளர்வதாகச் சொல்லிவிட முடியாது. நாணுவின் மாமா பணத்துக்காகவேண்டி வேறு இடத்தில் அவனுக்கு மணம் ஒழுங்கு செய்கிறுர். பெண்ணுக்கு அழகும் கல்வியும் கிடையாது. நாணு மறுக்கிறுன். மாமா அவனேயும் தாயையும் வீட்டைவிட்டு விரட்டிவிடுகிறுர். இப்போது கோதாவரி யின் துயரமும் அதிகமாகிறது. கணபதிராவும் நாணுவும் அவளே கணவன் வீட்டிலிருந்து அழைத்துவந்துவிட ஏற்பாடு செய்கின்றனர். இந்தக் கட்டத்தில் நாவல் பட்டென நின்றுபோகிறது. 1893 தொடக்கம் அது. தொடர் நாவலாக அதைப் பிரசுரித்துக்கொண் டிருந்த மாத ஏடு நின்றுபோனதுதான் நாவல் நின்றதன் காரணம். அதற்குப்பின் ஹரிபாவர் பல நாவல்கள் எழுதினுராயினும் இந்த நாவலே அவர் முடிக்கவில்லே. அவர் அதைத் தொடர்ந்து எழுதி யிருந்தால் எப்படி முடித்திருப்பார் என்பதை ஊகங்கள் வேண்டு மானுல் செய்யலாம்.

குறைநாவலில் தூக்கலாகத் தொனிப்பது பெண்கள் பிரச்னை யாகும். ஹிந்துப் பெண்களின் அவல நிலையும் அதை மாற்றும் வழிகளும் சொல்லப்படுகின்றன. பல சர்ச்சைகள், உரையாடல்கள் அப்பிரச்னை குறித்து நிகழ்கின்றன. பெண்கல்வி, திருமண வய தேற்றம், விதவை மணத் தடைகளை அகற்றுதல் முதலியன பரிகாரங்களாகச் சொல்லப்படுகின்றன. பெண்கள் உயர்கல்வி கற்று, இலக்கியங்களை ரசித்துப் படித்து, ஆண்களோடு சரிசமமாக அளவளாவும் ஒரு சமுதாயத்தை கணபதிராவ் இந்த நாவலிலே கனவு காண்கின்றான். கனமான சமுதாயப் பிரச்னைகள் குறித்த சர்ச்சைகளில் முதன்முதலாக ஹரிபாவர் இறங்கியது இந்த நாவலில்தான். அவரது அடுத்த நாவலில் கணபதிராவின் கனவு ஓரளவு நனவாக மாறுவதைக் காணமுடிகிறது.

எழுதுகலையைப் பொறுத்தவரையில் இந்த நாவலில் ஹரிபா வரின் திறன் முதிர்ச்சி பெற்று வருவதைக் காணமுடிகிறது. மத்திலி ஸ்திதியிலே எழுதிப் பழகிக்கொண்டிருந்த அவர் கணபதிராவிலே பயிற்சியும் பழக்கமும் பெற்று வளர்ந்திருப்பது தெரிகிறது. கதா பாத்திரங்கள் பன்முகப்பட்டைகளுடன் முழுமையாகத் தீட்டப் பட்டிருக்கின்றனர். நானுவின் மாமியைக் குறிப்பிட்டுச் சொல்ல லாம். அதிகாரப் பிரியையாக, தன்னிஷ்டமாய்ச் செயல்படுகின்ற அவளும் கவர்ச்சி பொருந்தியவளாகக் காட்டப்படுகின்றாள். அவள் நிறமும், சீரான முகவெட்டும், கண்களும், பேசுந் தோரணை களும், பார்ப்போரையும் கேட்போரையும் பிணிக்கும் அந்தத் தன்மைகளும் படம்போல விவரிக்கப்படுகின்றன. நாவல் நிறை வுறாதது வருந்தத்தக்கது.

கணபதிராவை எழுதி வருகையிலேயே ஹரிபாவர் அடுத்ததும் மூன்றாவதுமான 'பன் லக்ஷியாந்த கோன் கேதோ?' (யாருக்குக் கவலை?) என்ற நாவலைத் தொடங்கிவிட்டார். அவரது எழுத்துக் களில் இதுவே மிகச் சிறந்ததாகக் கருதப்படுகின்றது. 1890-ல் அவர் சொந்தமாகக் 'காரமானுக்' என்ற வாரப் பத்திரிகை நிறுவியிருந்தார். 'பன் லக்ஷியாந்த கோன் கேதோ?' அதில் பிரசுர மாகி வந்தது.

ஹரிபாவரின் சமுதாய நாவல்களின் பிரதிநிதியாக இந் நாவலைக் கொள்ளலாம். பன் லக்ஷியாந்த கோன் கேதோ? வாசகர் களின் மனதில் ஆழப் பதிந்து தாக்கம் ஏற்படுத்தக் கூடியது. மத்தியவர்க்கத்தின் பெரிய கூட்டுக் குடும்பங்களில் நடந்த வாழ்க்கையை உள்ளபடியே அது காட்டுகின்றது. பழமைப் போங்குகளுக்கும் சீர்திருத்தக் கருத்துக்களுக்கும் இடையே உண்டான மோதல்களையும், தலைமுறைகளுக்கிடையே உருவான வேறுபாடுகளையும், அக்குடும்பங்களில் பெண்களின் நிலையையும்

நாவல் மெய்யாக எடுத்துச் சொல்லுகின்றது. இம்மாதிரியான பல காரணங்களுக்காக அது நுணுக்கமாகக் கவனிக்கப்படவேண்டிய தகுதியைப் பெறுகின்றது.

நாவல் சுயகதை உருவத்தில் அமைக்கப்பட்டது. சிறிது படித்த ஒரு இளம் பெண் தன் வாழ்க்கைச் சரிதையை சொல்லிக் கொண்டு போகிருள். இந்த இலக்கிய உத்தி புதிதல்ல. ஆனல் ஹரிபாவர் அதைச் சாமர்த்தியமாகக் கையாண்டிருக்கின்ருர். யதார்த்தத்தின் எல்லேயும், கற்பனையின் எல்லேயும் இயல்பாக இணே கின்றன.

நண்பர் ஒருவரின் முயற்சியாலே ஒரு நாவலின் கையெழுத்துப் பிரதி ஒரு ஆசிரியருக்குக் கிடைப்பதாகக் கதை தொடங்குகிறது. அதை எழுதிய இளம்பெண் இறந்துவிட்டிருந்தாள். நண்பர் ஆசிரியரை அந்தப் பெண்ணின் சகோதரனுன கணபதிராவுக்கு அறிமுகம் செய்து வைக்கின்ருர். கணபதிராவ்தான் கையெழுத்துப் பிரதியை ஆசிரியரிடம் கொடுக்கிருன். அவர் அதைப் படித்து, விரும்பி, காரமானுக்கிலே பிரசுரிக்கவும் மனம் கொள்கிருர். கதை முடிவுருததினல்—அது சாத்தியமில்லேயே—அதைப் பூர்த்தி செய்யவும் விரும்புகின்ருர். கடைசி அத்தியாயத்தை எழுதித் தரும்படியாக கணபதிராவிடம் சொல்லுகிருர். அவனும் அப்படியே செய்கிருன். கதை குறித்த விவரங்கள் அடங்கிய வேறு சில துண்டுத் தாள்களேயும் கொடுக்கிருன். அந்த விவரங்கள் கையெழுத்துப் பிரதியில் இல்லாதவை.

முக்கிய பிரதியும், கணபதிராவின் முடிவுரையும், துண்டுத் தாள் விவரங்களும் சேர்ந்ததுதான் 'யாருக்குக் கவலே?' என்ற நாவல் என்று ஹரிபாவர் சொல்லுகிருர். முக்கிய கதை இரு குடும்பங்களேப் பற்றியது. ஏனேய பாத்திரங்களும் இருக்கின்றனர். யாமுதான் சுயகதை சொல்லுகிறவள். அவள் எட்டு ஒன்பது வயதாக இருக்கையில் கதை தொடங்குகிறது. அவள் குடும்பம் பூனுவில் வசிக்கிறது. பெற்ருேர், பன்னிரண்டு வயது அண்ணனுன தாதா, தங்கை சுந்தரி ஆகியோர் குடும்ப உறுப்பினர். தந்தையின் பெற்ருேரும் உண்டு. அவர்கள் பூனுவுக்கு அருகான ஒரு ஊரில் வீடு, நிலபுலங்களுடன் வசிக்கின்றனர். வசதியான குடும்பம். யாமுவின் தந்தை கலெக்டர் அலுவலகத்தில் தலேமை குமாஸ்தா. அவருக்குத் தம் தகப்பனுருடன் உறவு சரியில்லே. அதே உறவு தான் அவருக்குத் தம் குழந்தைகளுடனும். குழந்தைகள் அவரைக் கண்டால் பயந்து ஒதுங்குகின்றனர். தாய் விவேகி. கவனத்துடன் எல்லோரையும் அனுசரித்துக்கொண்டு போகிருள். குழந்தை களுக்கு அவள்மீது மரியாதையும் அன்பும் இருக்கிறது. அவர்களே ஆளாக்கி உருவாக்குவதும் அவள்தான்.

ஒரு பொம்மைக் கலியாணத்துடன் யாமு கதையைத் தொடங்குகிறுள். அவள், தாதா, அண்டைவீட்டு தாக்கி எல்லோருமாக அதை விமரிசையாக நடத்துகின்றனர். குழந்தை களுக்கு இயல்பான கும்மாளமும் சண்டையும் சத்தமுமாக அது நடந்தேறிக்கொண்டிருந்த சுபவேளையில் ஆபீஸிலிருந்து திரும்பிய அப்பா திடீரென வந்து அவர்களிடம் கோபமாகக் கூச்சல் போடு கிறுர். பயந்த பறவைகள் போலக் குழந்தைகள் அவ்விடமிருந்து சிதறியோடி விடுகின்றனர். இது ஒன்றும் புதுமையல்ல. எல்லா வீடுகளிலும் நடக்கக்கூடியதே. யாமுவும் அதை சாதாரணமாகத் தான் விவரிக்கிறுள். ஆனுல் அதில் பூடகமாகப் பொதிந்துள்ள குறியீட்டை வாசகன் நோக்கில் அணுகிஞல் ஒன்று தெரிகிறது. மனித ஜீவன்கள் சந்தோஷமாக வாழ்க்கையை ரசித்து அனுபவித் துக் கொண்டிருக்கையில், விதி அவர்களை அடித்துப் போட்டு விடுவதை அந்நிகழ்ச்சி குறித்தது.

சில மாதங்களுக்குள் யாமுவுக்குக் கலியாணமாகிறது. மாப்பிள்ளை ரகுநாதன். தாதா படிக்கிற பள்ளியில்தான் படித் தான். தாதாவைவிட மூன்று ஆண்டுகள் சீனியர். மெட்ரி குலேஷன் பரீட்சை எழுதவிருந்தான். அவன் இளமையிலேயே தந்தையை இழந்தவன். அவனும் அவன் தாயும் மாமன்மாராலே ஆதரிக்கப்படுகின்றவர்கள். ரகுநாதன் அறிவுத்திறன் வாய்ந்தவன். நேரடியாகப் பேசும் இயல்பும் மன உறுதியும் படைத்தவன். பிறர் பால் கரிசனையும் இருந்தது. யாமுவின் புருஷன் வீட்டில் சுமார் ஒரு டஜன் பேர் இருந்தனர். ரகுநாதனின் தாய், அவளது சகோதரர்கள், அவர்களது மனைவிமார், வயதான பாட்டி ஆகியோர் இருந்தனர்.

மூத்த சகோதரர் சங்கர மாமாஜிதான் நாவலின் வில்லன். அதன் அவலமுடிவு கடைசியில் அவரால்தான் நேர்கிறது. குடி கூத்தியில் ஊறிய அவர் பெரும் பக்தன் போல் நடிப்பார். மனைவிக்குத் துரோகம் செய்கிறது மாத்திரமல்லாமல் அவளைக் கொடுமையும் படுத்துவார். பிள்ளைகளின் எதிரே அவளை ஏசி, அவர்களும் அப்படிச் செய்யுமாறு தூண்டுவார்.

இந்தக் குடுபத்திலே யாமுவை எல்லோரும் இமிசைப்படுத் திஞர்கள். ரகுநாதனின் தாயாகிய அவளது மாமியாரைத் தவிர மற்ற அனைவரும் அவளைத் துன்புறுத்தி வந்தனர். மாமியார் இயல்பிலேயே சாது. சகோதரர்கள் தயவிலே வாழ்கிறவள். எனவே அவள் ஒன்றும் பேசுவதில்லை. எல்லாவற்றையும் மௌன மாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். யாமுவின் ஒரே துணையும் ஆதரவும் அவள் கணவன்தான். ஆனுல் அவன் சிறுவன். எதுவும் செய்ய இயலவில்லை. மேலும் யாமு இன்னும் பூப்பெய்தாதலால்,

அவர்கள் தனியே சந்திப்பதும் பேசுவதும்கூட அனுமதிக்கப் படவில்லை. எனவே யாமு எல்லாவற்றையும் பொறுமையாகத் தாங்கிக் கொண்டிருந்தாள்.

யாமுவின் தாய் வீட்டிலும் கஷ்டங்கள். அவளுக்குக் கலியாணம் நடந்த ஒரு மாதத்தில் தாய் இறந்துவிட்டாள். நான்காவது பிள்ளைப் பேற்றுக்கப்புறம் அவள் உடல்நிலை மிகுதியும் சீர்கேடடைந்திருந்தது ஒரு காரணம். யாமுவின் தந்தை மறு மணம் செய்து கொண்டார். அந்த இரண்டாவது மனைவி மூத்தாள் மகனை தாதாவைவிடவும் இளையவள். அவள் வந்து வீட்டில் அதிகாரம் பண்ணவும் கோள் சொல்லவும் தொடங்கினாள். யாமு எப்போதாவது ஓரிரு நாட்கள் தாய்வீட்டுக்குப் போயிருக் கும் போதுகூட அவளையும் தாதாவையும் இடைவிடாமல் கண் காணித்து உளவு பார்த்தாள். எனவே தாதாவோடு சிறிதுநேரம் மனமாரப் பேசக்கூட யாமுவுக்கு இயலாது போயிற்று.

அப்புறம் தாதாவுக்குக் கலியாணம் ஆயிற்று. அவனது இள மனைவியுடன் தோழமை பூண்டு பேசி மனக்கவலையை ஆற்றி யிருக்கலாம் என்று யாமு எதிர்பார்த்திருந்தாள். ஆனால் அந்த எதிர்பார்ப்பிலும் மண் விழுந்தது. அந்தப் பெண்ணை சிநேகிக்க யாமு எடுத்துக்கொண்ட எல்லா முயற்சிகளையும் அவள் எதிர்த்து முறியடித்தாள். அவளுக்கு அறியாமை அதிகம். எழுத்தறிவு அற்ற அவள் படித்துக் கொள்ளுவதில் ஆர்வம் காட்டவில்லை. பொறாமை யும் பிடிவாதமும் பிடித்த சண்டைக்காரியாகவும் இருந்தாள். தன் தோழமையை அவள் புறக்கணித்தது மாத்திரம் இப்போது யாமு வின் துக்கமல்ல. அவள் தாதாவின் வாழ்க்கையையும் நரகமாயடிக் கிறாள் என்று தெரிந்தபோது அவளுக்கு அந்த துக்கமும் சேர்ந்து கொண்டது.

ரகுநாதன் முதல் வருடப் பரீட்சையை முடித்ததும் சட்டம் படிப்பதற்காக பம்பாய் செல்லத்திட்டமாயிற்று. யாமுவையும் தாயையும் உடனழைத்துச் சென்றான். அவனது நண்பர்கள் விஷ்ணுபந்தும் நானாசாகேப்பும் தங்கள் மனைவிமாரோடு ஏற்கெனவே பம்பாயில் ஒரு பங்களா அமர்த்தி வசித்து வந்தனர். அப்பங்களாவிலேயே ரகுநாதன் குடும்பத்துக்கும் இடம் அமைத்துக் கொடுத்தனர். விஷ்ணுபந்தின் மனைவியும் நானாசாகேப் மனைவியும் யாமுவை வரவேற்று மிகுந்த சிநேகத்துடன் பழகினர். யாமுவுக்கு முதலில் கூச்சமிருந்தது. அந்தப் பெண்கள் செய்தது போல ஆண்களோடு உட்கார்ந்து பேசுவதற்குத் தயங்கினாள். ஆனால் ரகுநாதன் அதை ஊக்குவித்தான். அந்தப் பெண்களும் அவளுக்குத் தைரியமூட்டினர். நாளடைவில் அவள் கூச்சம் தெளிந்து பழகத் தெரிந்து கொண்டாள்.

பம்பாயில் கழிந்த இந்த வருடங்கள்தாம் யாமுவின் வாழ்க்கையில் மகிழ்ச்சிகரமானவை. நல்லது எதுவும் நீடிக்காது போலும். ஒருநாள் எல்லோரும் எலிபெண்டா குகைக்கு உல்லாசப் பயணம் போனபோது, ரகுநாதன் திடீரென நோய்கண்டு பன்னிரண்டு மணி நேரத்துக்குள் உயிர் நீத்தான். சற்றும் எதிர் பாராத இடி விழுந்துவிட்டது. யாமுவின் இன்பவாழ்க்கைக் கனவுகள் அனைத்தும் நொறுங்கித் தூளாகிப் போயின. நாவலின் தொடக்கத்தில் யாமுவின் தகப்பன் திடீரென புகுந்து பொம்மைக் கலியாணத்தைக் கலைத்தது இங்கே நினைவுக்கு வருகின்றது. ஆனால் யாமுவின் பாடுகள் இத்துடன் நிற்கவில்லை. அவளை அவள் போக்கில் விட்டிருந்தால் நாளடைவில் அவள் தன் துக்கத்தை மறந்து அண்ணனின் ஆதரவாலும், கணவனின் நண்பர்கள் உதவி யாலும் ஏதோ பயனுள்ள வழியில் அவள் தன் வாழ்நாளைக் கழித் திருக்கக் கூடும். அப்படி அவளை விடவில்லை.

பூனு திரும்பியதும் அவளை ஏமாற்றி பலவந்தமாக அவள் தலையைச் சிரைத்தார்கள். யாமு, ரகுநாதன், தாதா ஆகிய எல்லோரது விருப்பத்துக்கும் கொள்கைக்கும் இது முற்றிலும் விரோதமானது. இது அவளுக்குப் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கி விட்டது. அவள் உடல் நலம் குறையத் தொடங்கியது. அவள் நரம்புகள் முறுக்கிக் கொண்டன. அவள் உணர்ச்சிகளை இயல்புநிலைக்குக் கொண்டு வந்துவிடும் ஒரு வழியாக, அவள் கதையை அவளையே எழுதச் சொன்னார்கள். அவளும் அப்படியே எழுதி வந்தாள். ஆனால் அவளது உடல் நலம் விரைவாக நலியத் தொடங்கிற்று. வெகு சீக்கிரமே இறந்து போனாள்.

துர்க்கி என்ற யாமுவின் தோழியின் கதையும் யாமுவின் கதை யோடு கூடவே சொல்லப்பட்டு விடுகிறது. துர்க்கியின் கணவன் ஒழுங்கற்றவன். பள்ளி செல்வதை நிறுத்திவிட்டுப் புகை பிடிப்பதும், திருடுவதும், சூதாடுவதுமாய் அலைகிறவன். உடலாசையை தணித்துக் கொள்ளமட்டுமே அவனுக்கு மனைவி தேவைப்பட்டாள். அவன் கேட்கிறபோது அவள் தன் தகப்பனிட மிருந்து பணம் கொண்டுவந்து கொடுத்துவிடவேண்டும். இல்லை யானால் அவளை அடிப்பான். துர்க்கிக்கு ஒரு குழந்தை பிறந்தது. அதன் பின்னரும்கூட அவளுக்கு வாழ்க்கையில் பிடிப்பு உண்டாக வில்லை. வெறுப்புமிகுந்து, கஞ்சா தின்று தன்னையும் குழந்தையை யும் கொன்று கொள்ள முயன்றாள்.

யாருக்குக் கவலை? பண் லக்ஷியாந்த கோன் கேதோ? ஒரு துன்பியல் கதை. எதிர்காலக் கனவுகள் கண்டு கொண்டு அவர் கள் பாட்டுக்கு சந்தோஷமாக இருக்கிற இளம் ஜீவன்களை பலி யிடுகிற கதை. மதவெறி என்ற பலிபீடத்திலே மாய்மாலக்காரர்

கள் சின்னஞ்சிறு ஜீவன்களைப் பிடித்துப் பலிபோடுகிறதைப் பற்றிய கதை அது பொதுவாக பெண்களின் நிலை அந்நாளில் எப்படி இருந்தது என்பதை அது எடுத்துச் சொல்லிற்று. பெண்கள் வீட்டு மிருகங்களைப்போல நடத்தப்பட்டனர் என்பதாக யாமு ஒரு கட்டத்தில் சொல்லுகிறாள். ஒரு மனம் வந்தால் ஆண்கள் அவர்களைச் சீராட்டி, ஊட்டி மகிழ்கிறது; இன்னொரு மனம் வந்தால் அடித்து, மொத்திப் பட்டினி போட்டு வதைக்கிறது.. பெண்கள் சமமாக நடத்தப்பட வேண்டிய மனித ஜீவன்கள் அல்ல; பயன் படுத்தப்படவேண்டிய உடைமைகள், அவர்களது உணர்வுகளையும் விருப்பங்களையும் குறித்து யாரும் கவலைப்படுவதில்லை. தலைப்பும் அதுதான். ''பின்னே யாருக்குக் கவலை?''

அதே நேரத்தில் பெண்கள் கொடுமையாகவும், தந்திரமாகவும், சொரணையற்றவர்களாகவும் நடந்து கொள்ளமுடியும் என்பதையும் இந்நாவல் காட்டி விடுகின்றது. அவர்கள் பிற பெண்களின் வாழ்க்கையைக் கெடுத்துவிடுகின்றனர்; ஆண்களுக்கு வாழ்க்கையை சகிக்க முடியாததாக்கி விடுகின்றனர். ரகுநாதனின் மாமிகளும், யாமுவின் மாற்றாந்தாயும், மதனியும் அப்படிப்பட்ட பெண்களே. இப்படியான வேறு வேறான பெண்களின் குண வித்தியாசங்களை ஹரிபாவர் நுணுக்கமாய் நேர்த்தியாய்ச் செதுக்கியிருக்கிறார். மனித இயல்புகளைக் கூர்ந்து நோக்கக் கூடிய அவரது உட்பார்வை வியக்கத்தக்கதாகவே இருக்கின்றது. நாவலில் பல்வேறு வகைப்பட்ட பெண் பாத்திரங்கள் வருகின்றனர். அவரவர் பேசுகின்ற மொழி அவரவர் குணவிசேஷங்களுக்குச் சரியாகப் பொருந்துகிறாற்போல வேறு வேறு விதமாக அமைத்திருக்கின்றார். நாவலை எழுதியதாகச் சொல்லப்பட்டவள் கள்ளங்கபடற்ற இளம்பெண். அவள் மென்மையுணர்வுகள் கொண்டவளும் எல்லோரிடமும் அன்பு செய்ய விரும்பியவளுமாக இருந்தாள். எனவே அவள் தன்னிலையில் கூறும் விவரங்களின் நடை அவளது அந்த குணவியல்புகளுக்கு முற்றிலும் பொருந்துவதாக அமைந்துள்ளது.

முதிர்ச்சி பெற்ற நாவலாசிரியராக ஹரிபாவர் முகிழ்த்து விட்டார் என்று இந்த நாவலில் கண்டு கொள்ளலாம். அதன் முப்பதுக்கும் மேற்பட்ட பாத்திரங்களின் குணவித்தியாசங்களையும் தனித்தன்மைகளையும் அவர் நன்கு உணர்த்தி விடுகின்றார். எல்லோருமே உயிருள்ள மனிதர்களாக வாசகர்களின் மனக்கண்களினெதிரே உலவுகின்றனர். நாவலின் பின்புலம் விசாலமான தல்லவாயினும், அதன் உள்ளடக்கம் செறிவானது. சொல்ல வந்ததை நாவலாசிரியர் திருத்தமாகச் சொல்லியிருக்கின்றார்.

அடுத்த நாவல் யஸ்வந்தகாரே (1892–95). கணபதிராவைப் போல முடிவுறாதது. ஆனாலும் நிறைவுற்றதுபோலத் தோன்றுவது,

அதன் கருப்பொருளும், அதில் காணப்படுகின்ற சிந்தனைப் போக்கும் கணபதிராவின் கருத்துக்களுடன் ஒத்துப் போகக் கூடியவை அல்ல. கணபதி பி. ஏ. படிக்கின்ற, திருமணமான இளைஞன்; கல்வி முடிந்த பின் தான் செய்யப் போவதைப் பற்றிய திடமான கருத்துக்கள் உடையவனுயிருந்தான். மேலும் அவன் வசதிபடைத்த அரசு அலுவலரின் மகன், ஆனுல் யஸ்வந்தராவோ பன்னிரண்டு பிராயத்தனுன ஏழைச் சிறுவன். தகப்பனற்றவன். விதவைத்தாய் வீட்டு வேலைகள் செய்து கிடைத்த அற்ப ஊதியத்தில் அவனையும் அவன் தம்பியையும் சகோதரியையும் காப்பாற்றி வந்தாள்.

கணபதிராவிலே சமுதாயச் சீர்திருத்தம் அழுத்தம் பெறுகிறது. பெண்கல்வி, திருமண வயதேற்றம், விதவை மணம் ஆகியவை ஊக்குவிக்கப்படுகின்றன. ஆனுல் யஸ்வந்தராவிலே அழுத்தம் பெறுவது அரசியல் சீர்திருத்தமாகும். அது மாத்திரமல்லாமல் சமுதாய சீர்திருத்தம் குறைவாகப் பேசப்படுகிறது. அதன் வாதிகள் சமுதாய எதிரிகள் என்று வர்ணிக்கப்படுகின்றனர்.

மாணவனுன யஸ்வந்தராவ் ஏழ்மை காரணத்தினுல் பள்ளிச் செலவுகளுக்கு செல்வந்த போஷகர்களை அண்ட வேண்டிய நிலை ஏற்படுகிறது. ஒரு ராவ்பகதூர் முதலில் அவனை ஆதரிக்கிருர். அவர் தன்னைச் சமுதாய சீர்திருத்தவாதி என்று கூறிக்கொள்ளு பவர். அவர் பிரித்தானிய ஆட்சியின் ஆதரவாளர். ஆனுல் அவரும் அவர் குடும்பத்தினரும் கர்விகளாக இருக்கின்றனர். வீட்டுப் பெண்களும், அவர் மகன்களும் பதவி, கௌரவம் பார்க்கின்றனர். அந்தப் பார்வை மிதமிஞ்சியதால் பிறர் துயரம் கண்களில் படாமல் போய் சொரணையற்றுப் போகின்றனர். விளைவாக யஸ்வந்தராவை அவமதிக்கின்றனர். மென்மையுணர்வுடைய அவன் மனம் புண்படுகிறது. மேலும் சமுதாய சீர்திருத்த வெறுப்பும், பெண் பகையும் அவன் மனத்தில் உருவாகி வளர்ந்துவிடுகிறது. தன் தாய்க்குத் தன்மீது அன்பில்லை என்றும் தோன்றிவிடுகிறது. அவளிடமிருந்தும் குடும்பத்தினரிடமிருந்தும் விலகித் தனிமைப்பட்டுப் போகிருன்.

இந்த நெருக்கடியான கட்டத்தில் அவன் ஸ்ரீதரபந்த்தை சந்திக்க நேர்கிறது. அவர் ஒரு தேசியவாதி. நூல்கள் பல வாசித்தவர். யஸ்வந்தராவிடம் பரிவு காட்டுகிருர். அவனும் அவரது பராமரிப்புக்கு உட்படுகின்ருன். அவன் கல்லூரிப் படிப்பு முடியும் வரையிலும் அவரே அவனது குருவும் வழிகாட்டியுமாக இருக்கின்ருர். யஸ்வந்தராவின் குணம், ஆளுமை, கருத்துக்கள் அனைத்தையும் உருவாக்குகிருர். யஸ்வந்தராவ் அவரது போதனைகளை ஏற்று அவரது சீடனுகின்ருன். பயனுக தீவிர தேசியவாதியாகவும் சமுதாய சீர்திருத்த விரோதியாகவும் ஆகின்ருன்.

கணபதிராவின்—கணபதிராவ் மில் எழுதிய பெண்ணடிமையை அப்படியே நம்புகின்றவன். யஸ்வந்தராவின் — யஸ்வந்தராவ் இத்தாலிய தேசியவாதியான மாஜினியை (Mazzini) அப்படியே பின்பற்றுகின்றவன்.

நாவல் இங்கே நின்றுவிடுகிறது. ஒரு இளைஞனின் ஆளுமை பெருமளவு உருவாகின்ற ஒரு காலப்பகுதியை அது சித்திரித்திருக்கிறது. யஸ்வந்தராவின் எட்டு வயதில் அது தொடங்கி இருபதில் நிற்கிறது. அவனது ஆளுமையின் வளர்ச்சியை அது விவரிக்கிறது. அந்த அம்சத்தில் இது முந்தைய மூன்று நாவல்களையும்விட மேம்பட்டு வளர்ந்திருக்கிறது. மத்திலி ஸ்திதியில் கதாபாத்திரங்களின் வளர்ச்சி அதிகம் காட்டப்படவில்லை, உயிருள்ளவர்கள் எனினும் அவர்கள் மாறுவதையும் வளர்வதையும் அது காட்டுவதில்லை. கணபதிராவின் பாத்திரவர்ணனை மத்திலி ஸ்திதியைவிடவும் சிறந்தது. காசிநாதபந்தின் மனைவி சீதாபாயின் சித்திரம் மிக அருமை. பன் லக்ஷியாந்த கோன் கேதோவில் பாத்திர சித்திரம் இன்னும் ஒருபடி முன்னேறியிருக்கிறது. யாமுவின் சித்திரமானது மொட்டு பையப் பைய விரிவதுபோல தீட்டப்பட்டது. சிறுமி யாமு மெல்ல மெல்ல இளம்பெண்ணாக வளர்கின்றாள். நாவலாசிரியர் அதுபற்றி எதுவும் சொல்லாமல், அவ்வளர்ச்சி தானாக வாசகர்களுக்குத் தெரியும்படியாகத் தீட்டப்பட்ட பாத்திரம். ஆனால் யஸ்வந்தகாரேயின் ஐநூறு பக்கங்கள் மொத்தமும் ஒரு தனி மனிதனின் ஆளுமை வளர்ந்து உருப்பெறுவதை விவரிக்கின்றது. அவனது பிறவிக்குணங்களும், திறன்களும் அவன் வளர்கின்ற பின்னணிச் சூழலினால் எப்படி பாதிக்கப்படுகின்றன, அதன் விளைவாக அவன் எப்படி உருப்பெறுகிறான் என்பதையெல்லாம் விவரமாக விளக்கமாக இந்த நாவல் தரவிழைகின்றது. ஒரு சில துணைப் பாத்திரங்களின் சித்திரங்களும் மனத்தில் நிற்கக்கூடியவையே.

அன்றைய மகாராட்டிரத்தில் பல்வகைப்பட்ட கருத்துக்களும் வாதங்களும் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொண்டு வந்தன என்பதை முதல் அத்தியாயத்தில் கண்டோம். அந்த மோதல்கள் இந்த நாவலில் முற்றாகப் பிரதிபலிக்கின்றன என்று சொல்லலாம். அரசியல் சீர்திருத்தங்களுக்கு அதிகம் அழுத்தம் கொடுத்தோரின் பிரதிநிதி ஸ்ரீதரபந்த் என்ற பாத்திரம். அவர்கள் சமுதாய சீர்திருத்தப் பிரச்னைகளுக்கு முக்கியத்துவம் தரவில்லை. ஒரு சிலர் சமுதாய சீர்திருத்தம் எதுவுமே தேவையில்லை என்றும் சொன்னார்கள்.

யஸ்வந்தராவ் தன் கருத்துக்களை எவ்வாறு பிரச்சாரம் செய்திருந்திருப்பான், அவனது வாழ்க்கை எத்தகையதாக இருந்திருக்

கும், அவன் தன் கொள்கைகளைப் பின்னல் மாற்றிக்கொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்திருக்குமா என்பவையெல்லாம் வாசக னுக்குக் கேள்விகளாகவே நிற்கின்றன.

ஹரிபாவரது அடுத்த நாவல் மீ ஆகும் (1893–1895). சுய சரிதை உருவத்தில் எழுதப்பட்டது. எழுதுவதாகச் சொல்லப் படுபவர் பாவா. பின்னல் சந்நியாசம் மேற்கொண்டு பவானந்தர் என்ற பெயரைக் கொள்கிருர். இந்நாவலேயும் முந்தைய நாவல் களுடன் ஒப்பிட்டும் வேறுபடுத்தியும் நோக்க முடியும். கணபதிராவ், பன் லக்ஷியாந்த கோன் கேதோ? ஆகிய இரு நாவல்களின் கருப் பொருளும் பெண்கள் பிரச்னைகள், பெண்கல்வி, அவர்களது அந்தஸ்து, முன்னேற்றம் முதலியன குறித்தன. அதாவது சமுதாய உள்ளடக்கம் கொண்டது. ஆனல் யஸ்வந்தகாரேயின் கருப்பொருள் சமுதாய சீர்திருத்தத்தைப் புறக்கணித்து அரசியல் சீர்திருத்தத்தைப் பிரதானப்படுத்துகின்றது. மீ நாவலிலோ இந்த இரண்டுக்கும் சமமான முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. இரண்டு வகை சீர்திருத்தங்களும் அவசியமே என்றும், அவரவர் பிரியத்துக்கும் சக்திக்கும் தகுந்தாற்போல் ஏதாவது ஒன்றிற்காக உழைக்கலாம் என்றும், தன்னம்பிக்கையிருந்தால் இரண்டின் முன்னேற்றத்துக்காகவும் ஒருவர் பாடுபடலாமெனவும் இந்த நாவல் சொல்லுகிறது. கணபதிராவ், யஸ்வந்தராவ்காரே இரண்டும் முடிவுருத நாவல்கள். இரண்டின் கதைத் தலைவர்களும் பின்னல் தங்கள் நம்பிக்கைகளுக்காக எவ்வாறு உழைத்திருப்பர் என்பதை நமக்கு நிச்சயமாகச் சொல்லமுடியவில்லை. கணபதிராவ் கர்ம யோகா என்ற பிற்காலத்து நாவலொன்றிலும் ஒரு பாத்திரமாக வருகிருன். அரசு அலுவலராக அவன் உயர்ந்த பதவிக்கு வருவ தாகவும், தனது சீர்திருத்த நம்பிக்கைகளை விடாதிருப்பதாகவும் ஒரு குறிப்பு மாத்திரம் கிடைக்கிறது.

ஆனல் மீயில் சுய சரிதையைச் சொல்லுகின்ற பாவா, பள்ளிக் கல்வியை முடித்து கலை வகுப்பையும், சட்டப் படிப்பையும் முடித் துக் கொண்டு உடனேயே மக்கள் சேவையைத் தொடங்கத் தீர் மானிக்கிருன். பேச்சுக்கள் நிகழ்த்துகிருன். தன் கருத்துக்களைப் பரப்ப ஏடு தொடங்குகிருன். ஆண் பெண்கள் சேர்ந்து அர்ப்பண சிந்தையுடன் உழைக்கவென்று மடம் நிறுவுகிருன். பின்னர் தன் நேரம் சக்தி அனைத்தையும் பொதுப்பணிக்கென செலவிட சந்நியா சம் கொள்கின்ருர். உழைப்பு மிகுதியால் இறந்துவிடுகின்ருர். அதன் பின் நடக்கும் நிகழ்ச்சிகள் அவரது சீடர் ராமானந்தரால் சொல் லப்படுவதாகக் கடைசி அத்தியாயத்தில் தரப்படுகின்றன. பன் லக்ஷியாந்த கோன் கேதோவிலும் இந்த உத்தி கையாளப்பட்டது.

பிள்ளைப் பருவத்திலும் இளமைப் பருவத்திலும்தான் மனித ஆளுமை பெரும்பாலும் வளர்ந்து உருப்பெறுகிறது. ஸ்ரீதரபந்தின் தாக்கத்தால் யஸ்வந்தராவ் அப்படி வளர்ச்சியடைவதை யஸ்வந்த காரேயில் ஆசிரியர் காட்டினார். கதை படர்க்கையில் சொல்லப் பட்டது, மீயிலும் ஏறத்தாழ அந்தப் பருவங்கள்தான் விவரிப் பதற்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆனால் இங்கே முக்கிய பாத்திரமான பாவா அதைத் தாமே சொல்லிக்கொண்டு போவதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இரு பாத்திரங்களுக்கும் தாக்கம் ஏற்படுத்துகின்ற வழிகாட்டிகள் விவரிக்கப்படுகின்றனர். இருவரும் வயதானவர்கள். ஆனால் யஸ்வந்தராவை உருவாக்கும் ஸ்ரீதரபந்த் வலியத் தாக்குதல் செய்கின்றார். மன உறுதி அதிகம் படைத்த அவர் பிறரை மதிப்பதில்லை. தமது கருத்துக்களினின்று மாறுபடுவோரை பொருட்படுத்துவதில்லை. ஆனால் பாவாவின் குருவான சிவராமபந்த் அப்படிப்பட்ட அழுத்தமான மனிதராக இல்லாவிடினும் பரந்த கருத்துக்கள் உடையவர். எல்லாக் கருத் துக்களையும் சீர்தூக்கி ஆராயக்கூடிய நிதானம் உடையவராக இருக்கின்றார். தமது நம்பிக்கைகளைச் செயலில் காட்டக்கூடிய மன உறுதியுடன் விளங்குகின்றார். சமுதாய அரசியல் சீர்திருத் தங்கள் இரண்டும் சம முக்கியத்துவம் வாய்ந்தவை; இரண்டும் உடனடியாக நிறைவேற்றப்படல் வேண்டும் என்று நம்புகின்றார். மகள் சுந்தரிக்குக் கல்வி கற்பித்ததுமல்லாமல், அவள் மணம் செய்துகொள்ளாமல் சமுதாயப் பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள விரும்பியபோது அதற்கு அனுமதியும் கொடுக்கின்றார். ஹரிபாவரின் இலட்சிய மனிதர் சிவராமபந்த் போன்றவரே என்று கொள்ளலாம்.

பன் லக்ஷியாந்த கோன் கேதோவில் இரண்டு பாத்திரங்கள் வளர்ந்து விரிவடைகின்றன. யாமு, அவள் சகோதரன் தாதா ஆகியோரின் குணசித்திரங்கள் பையப் பைய மடலவிழ்கின்றன. யாமுதான் அதைச் சொல்லிக்கொண்டு போகின்றாள். மீயிலே மூன்று பாத்திரங்கள் அப்படி மெல்ல வளர்ந்து விரிகின்றன. கதை சொல்லுகின்ற பாவா, தங்கை தாய், சிவராமபந்தின் மகள் சுந்தரி ஆகிய மூவரும் அப்படி விவரிக்கப்படுகின்றனர். முன்னது பெண்ணால் சொல்லப்படுவது; பின்னது ஆணால் சொல்லப்படுவது. இருபாலாரின் உலகங்களும், பார்வைகளும், அநுபவங்களும் வெவ்வேறு. பெண்ணின் கண்ணோட்டம் குடும்பம், உறவினர் என்ற சிறிய வட்டத்தினுள் அடங்குகின்றது. ஆணின் அநுபவங்கள் அதை விடப் பரந்தவை. இந்தப் பார்வை வேறுபாடு இரு நாவல்களிலும் கடைசிவரை கொண்டு செலுத்தப்படுகின்றது. இதனால் ஹரி பாவரது திறமை நன்கு வெளியாகின்றது. வாழ்க்கையைக் கூர்ந்து தரிசிக்கும் வன்மை பெற்றிருப்பதோடு பாத்திரங்களின் அகமன

நினைவுகளையும் சரியானபடி விவரிக்கும் சக்தியும் அவருக்கு இருக்கின்றது.

மீயில் வருகின்ற தாய் யாமுவைப் போன்றவள் அல்ல. யாமு பிறரை நேசிக்கவும் பிறரால் நேசிக்கப்படுவதையும் மிகவும் விரும்பினுள். பம்பாயில் அவள் கணவனேடு சிலகாலம் நடத்திய இல்வாழ்க்கையில் மகிழ்ச்சியாக இருந்தாள். அவன் இறந்த பிறகு அவள் நெடுநாள் உயிர்தரிக்கவில்லை. ஆனல் தாய் வேறு பட்ட குணம் படைத்தவள். அவள் மன உரம் கொண்டவள். இளமைப் பருவத்தில் அவள் வறுமையுடன் போராடவேண்டியதிருந்தது. மன உற்சாகமும் திடசித்தமும் தற்சார்பும் கொண்டிருந்தாள். அதேசமயத்தில் அவளுக்குப் பிறர்பால் கரிசனை இருந்தது. கடமை உணர்வும் பொறுப்புணர்ச்சியும் இருந்தன. மனைவி, பாவா, தாய் எல்லோரையும் விட்டுவிட்டுத் தகப்பன் பொறுப்பில்லாமல் வீட்டை விட்டு வெளியே போய்விட்டான். மாமாதான் அவர்களை ஆதரித்து வந்தார். தகப்பன் எப்போதாவது வந்து சில நாட்கள் தங்கி தொல்லை தந்துவிட்டுப்போவான். அவையெல்லாம் கசப்பான அனுபவங்கள். தாயின் அம்மாவும் பிடிவாதக்காரி, குழந்தைகளைக் கடுமையாய் நடத்துவாள், தன்னிஷ்டமாய்க் காரியங்கள் செய்வாள். பின் விளைவுகளைப் பற்றிக் கவலைப்பட்டுக்கொள்ளமாட்டாள். தாய்க்கு இளவயதிலேயே திருமணமாகிவிடுகிறது. அறுபது வயது மனிதருக்கு மூன்ருந்தாரமாய் வாழ்க்கைப்பட்டாள். குடி கூத்தியில் திளைத்துக் கொண்டிருந்த அந்தக் கிழவருடன் வாழ்வதற்கு இயலாதவளாய் அவள் தாய்வீடு திரும்பினுள். தமையனும் சிவராமபந்தும் ஊக்கமளித்ததால் தானகவே கல்வி கற்றுக்கொள்ளத் தொடங்கினுள். அவளது தாயும் தாய்மாமனும் அதை எதிர்த்தனர். சமுதாயத்தில் வேறு பலரும் கண்டனம் செய்தனர். அவதூறுகள் பரப்பினர். அக்காலத்தில் பெண்கள் படித்தது புதுமையே. அதனல் எதிர்ப்பு அதிகம். ஆனல் தாய் மன உறுதியுடன் இருந்தாள். கணவனின் மரணம் சமீபித்தபோது அவர் வீட்டுக்குச் சென்று பணிவிடைகள் செய்தாள். பின்னர் படிப்பு முடிந்ததும் பாவாவின் மடத்தில் சேர்ந்து சமுதாயப் பணியில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டாள். மராத்தி நாவலில் இப்படியொரு பெண்பாத்திரம் படைக்கப்பட்டது இதுவே முதல்தடவை. ராக்கமாபாய், பண்டித ராமாபாய் முதலியோரின் வரலாறுகளை வாசகர்கள் கேள்விப்பட்டிருக்கவில்லையெனில் தாயின் பாத்திரம் யதார்த்த விரோதமானது என்று முடிவு கட்டியிருப்பார்கள்.

சுந்தரியும் ஒரு புதுமையான பாத்திரம். அவள் சிவராமபந்தின் மகள். அவள் பாவாவுடன் சேர்ந்து வளர்கிருள். தந்தை

யின் அரவணைப்பில் அவரது போதனைகளின்படியே பாவாவைப் போல அவரது அடிச்சுவடுகளைப் பின்பற்றுகிறாள். இளமையெய்தியபோது வயதிற்கேற்றபடி அவர்களுடைய உறவு குறித்த உணர்ச்சிகளில் மாற்றம் தெரிகிறது. இதை சிவராமபந்த் எதிர்பார்க்கவில்லை. ஏனெனில் சுந்தரி தாயைப்போலவே மணம் செய்துகொள்ளாமல் சமூக சேவையில் ஈடுபடுவாள் என அவர் நினைத்திருந்தார். ஆனால் சுந்தரியின் இயல்பு தாயினுடையதைப் போன்றதல்ல. அவள் சற்றேறக்குறைய யாமுவைப் போன்றவள். மென்மை உணர்வும் இளகிய நெஞ்சமும் கொண்டவள். பிறரை மிகுதியும் சிநேகிப்பவள், சிநேகிக்கப்படுபவள். எனவே நிலைமையைப் புரிந்துகொண்ட சிவராமபந்த் திருமணத்துக்குச் சம்மதம் தெரிவிக்கிறார். ஆனால் காலந்தாழ்ந்து விடுகிறது. ஏனெனில் இதற்கிடையில் பாவா பிரம்மச்சரியம் மேற்கொண்டு சமுதாயப் பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளத் தீர்மானம் செய்து விடுகிறான். சிவராமபந்துக்கு மீண்டும் ஏமாற்றம். ஆனால் அவர் யாரையும் நொந்துகொள்ளவில்லை.

இப்படியொரு திருப்பம் நாவலுக்கு அவசியம்தானா என்ற கேள்வி எழலாம். ஆனால் எல்லாத் திருப்பங்களையும், மெல்லிய உணர்வுகளின் மாற்றங்களையும் ஹரிபாவர் நம்பும்படியாகவே சித்திரித்திருக்கிறார். அதில் இரண்டு கருத்துக்கிடமில்லை.

பண் லக்ஷியாந்த கோண் கேதோவில் கேட்கும் தொனி மொத்தத்தில் மென்மையானது. மீயின் தொனி அப்படியானதல்ல. கடுமையான உக்கிரமான ஒரு தொனி அதில் ஒலிக்கின்றது. உணர்ச்சியைவிடக் கடமையும் ஒழுக்கமும் அதிகமாக வலியுறுத்தப்படுகின்றன. அந்த அடிநாதம் நாவல் பூராவும் ஒரே சீராக ஒலிப்பதையும் கேட்க முடிகிறது. ஹரிபாவர் நாவல் கலையில் முதிர்ந்துவிட்டார் என்பதை இது காட்டுகிறது. மேலும் இந்நாவலில் அவரது சமுதாயப் பிரக்ஞை மிக அழுத்தமாய்ப் பரவிக்கிடக்கிறது. அவர் காலத்தில் படித்த மத்திய வர்க்கத்தினரின் மனதைக் குடைந்துகொண்டிருந்த எல்லாப் பிரச்னைகளையும் கவனத்தில் கொண்டு இந்நாவலை அவர் எழுதியிருக்கின்றார்.

அடுத்தாற்போல் மூன்று நாவல்களை சேர்ந்தாற்போல் கவனிக்கலாம். ஜக் ஹே அஸே ஆஹே (உலகம் இப்படித்தான்) 1897–99, பயங்கர திவ்யா (பயங்கர சோதனை) 1901–1903, மாயேச்ச பஜார் (மாய உலகம்) 1910–1912 என்பதே அம்மூன்றும். ஆஜார் (1904) என்ற நாவலை இப்போதைக்கு விட்டுவிட்டு, கடைசி நாவலான கர்மயோகாவை விமர்சிக்கிறபோது அதையும் கவனிக்கலாம். ஏனெனில் அவை இரண்டும் முடிவுறாதவை.

முதற்சொன்ன மூன்று நாவல்களும் ஹரிபாவரது மற்ற நாவல் களினின்றும் வேறுபட்டவை. முழுத் திருப்தி தருபவை அல்ல. ஜக் ஹோ ஆசே ஆகே ராதாபாயையும் அவளது மகன் சீதாராமனை யும் பற்றிய கதை. ராதாபாயின் கணவன் இறந்ததும், அவளது மூத்தகுடியாளின் மகனும் மருமகளும் அவளை அவமதித்து, உபத்திரவப்படுத்தி, வீட்டை விட்டுத் துரத்துகின்றனர். அவள் தந்தையின் வீட்டுக்கு வருகின்ருள். அவர் இறந்துவிடுகின்ருர். அவர் வீடு தன் கணவரிடம் (இப்போது தன் மூத்தாள் மகனிடம்) அடமானத்தில் இருப்பது தெரியவருகிறது. துன்பம் விட்ட பாடில்லை. மூத்தாள் மகன், மருமகள், அவர்களது நண்பர்கள் தொல்லைகள் தருகின்றனர். ஆனல் அவள் மனதிடமாய் இருக் கின்ருள். அவளும் மகனும் ஒழுக்கத்துடன் வாழ்கின்றனர். முடிவில் நிலைமை தலைகீழாய் மாறுகிறது. அவளுக்கும் மகனுக்கும் நீதி கிடைக்கிறது. மகிழ்ச்சி சேருகிறது, நன்மை தீமையை வெல்கிறது, கதையின் நிகழ்ச்சிகள் இரண்டு இடங்களில் நடக் கின்றன. ஒன்று பூனவில் சதாசிவப்பேட்டை. அது ஹரிபாவருக்கு நன்கு பழக்கமான இடம், அடுத்தது குபுக்காபாத் என்ற கற்பனை இடம் (அந்தப் பெயரில்கூட குழப்பம் இருக்கின்றது). அந்த சமஸ்தானத்துக்கு ராதாபாயின் மூத்தகுடியாள் மகன சிந்தோ பாத் எப்படியோ திவானகிருன். ராதாபாய்க்கு விரோதமாகச் செய்யப்படுகின்ற சூழ்ச்சிகளும், சதிகளும் அவ்விடத்தில்தான் புனையப்படுகின்றன. இந்தக் களம் ஆசிரியருக்குப் பழக்கமில்லாத தால் அதன் வர்ணனை வாசகனை ஈர்க்கவில்லை. விளைவாக கதையில் நாட்டம் குறைகிறது. பாத்திரங்கள்கூட அச்சு வார்ப்புக்களாகத் தெரிகின்றனர். சம்பவங்கள் வலிந்து புனையப்பட்டனவாகவும் நம்பவியலா விபத்துக்கள்மீது சார்ந்துமிருக்கின்றன. ஆக ஏதோ நீதிக் கதைபோல் இருக்கிறது. ஓரிரு பாத்திரங்கள் மாத்திரம் மனதில் நிற்கிருற்போல் தீட்டப்பட்டிருக்கின்றனர்.

பயங்கர திவ்யாவுக்கும் மாயேச்ச பஜாருக்கும் ஒரு சில ஒற்றுமைகள் உள. எனவே அவையிரண்டையும் சேர்த்தே கவனிப் போம். மகாராட்டிரத்தின் சமுதாய சீர்திருத்த இயக்கத்தின் முன்னேற்றத்தை இந்த நாவல்கள் பிரதிபலிக்கின்றன. ஆனல் ஹரிபாவரின் நாவல் திறனைப் பற்றி இந்நாவல்களில் விசேஷமாக எதுவும் சொல்லுவதற்கில்லை.

பயங்கர திவ்யா கமலா என்ற பெண்ணின் சரிதம். பலவந்த ராவ் ஒரு சமுதாயவாதியாதலால் ஏற்கெனவே விதவையாகி யிருந்த துவாரகாபாயை மணந்துகொண்டார். அவர்களது மகள் தான் கமலா. அவளுக்கு நல்ல கல்வி அளித்தார். பதினன்கு வயது வரையில் திருமணம் செய்விக்கவில்லை. அதுவுமல்லாமல்

பிரபாகரன், பத்மாகரன் என்ற இரு இளைஞர்களை வீட்டுக்கு அழைத்து மகளுடன் தாராளமாகப் பேச அனுமதித்தார். நாளடைவில் பத்மாகரன் கமலாவை மணக்க விரும்பி பலவந்த ராவின் அனுமதியைப் பெறுகிறான். ஆனால் அவனது தந்தை தாதாசாகேப்—ஓய்வு அரசு அலுவலர், சமூக சீர்திருத்த நம்பிக்கை யற்றவர்—அதை எதிர்க்கிறார். அவரது அனுமதியின்றி திருமணம் நடக்கிறது. அவர் மகனுக்குத் தன் சொத்து கிடைக்கா வண்ணம் மறுதலிக்கிறார்.

உடனே பல தொல்லைகள் தொடங்குகின்றன. சீர்திருத்தவாதி களுக்கும் சீர்திருத்த விரோதிகளுக்குமிடையே எழுந்த மோதலி னால்தான் இந்தத் தொல்லைகள் என்று நினைத்தோமானால் அது தவறு. அப்படியில்லை. கதை வேறே மாதிரித் திரும்பி மர்மக் கதை போலத் தொடர்கிறது. ராஜாராம் என்றொரு போக்கிரி வருகிறான். கள்ளக் கையெழுத்துப் போடுகிறவன்; எத்தன். அவன் பத்மாகரனிடம் போய் அவன் மனசைக் குழப்புகிறான். கமலா பிரபாகரனுடன் கள்ள உறவு வைத்திருக்கிறாள் என்று சொல்லி வைக்கிறான். பத்மாகரனின் கையெழுத்தில் கமலாவுக்கு அவளைத் திட்டித் திட்டி கடிதங்கள் எழுதுகிறான். முடிவிலே அவன் பல சங்கடங்களில் மாட்டுகிறான். உடனே தன் குற்றங்களை அறிக்கை செய்கின்றான். சந்தேகங்கள் நிவிர்த்தியாகி, மனங்கள் சுத்தமாகி, நல்லவர்கள் ஒன்றுகூடி மகிழ்ச்சியடைகின்றனர். இந்த நாவல் சம்பவக் கட்டுமானத்தை நம்பியிருப்பது. இருப்பி னும் பாத்திரப்படைப்பும் மோசமில்லை. பத்மாகரன் எதையும் நம் பும் அவசரக்காரன்; கமலா கள்ளங்கபடற்றவள். கதையின் எல்லா நிகழ்ச்சிகளிலும் இந்தக் குணங்கள் பிசிறில்லாமல் வெளிக்காட்டப் படுகின்றன. கமலாவை முதலில் வெறுத்த தாதாசாகேப், பின் மனம் மாறுவதும் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. சீர்திருத்த விரோதியான அவரும் அடிப்படையில் நல்ல மனிதரே என்பது காண்பிக்கப்பட்டு விடுகிறது.

அடுத்தது மாயேச்ச பஜார். மேற்கண்ட இரண்டைப்போல முடி வுற்ற நாவல். அவற்றைவிட இதில் மானுட கரிசனம் அதிகம் காணப்படுகின்றது. ஆனால் நாவல் மொத்தத்தில் சரியாகக் கையாளப்படவில்லை. இதில் இரண்டு கதைகள் சொல்லப்படு கின்றன. ஆனால் அவை சரிவர இணைத்துப் பின்னப்படவில்லை. நாவலில் வரும் பாத்திரங்களை மூன்று வெவ்வேறு தொகுதிகளாகப் பிரிக்கலாம். அவற்றில் இரண்டு தொகுதிகள் முக்கியத்துவம் பெறுகின்றன. அபாசாகேப் ஒரு சமுதாய சீர்திருத்தவாதி. மகள் பத்மாவதிக்குக் கல்வி அளிக்கிறார். பதினாலு பதினைந்து வயதில் பாலாசாகேப் என்ற ஏழை இளைஞனுக்கு மணம் செய்து

வைக்கிறார். அவருக்கு இரு மகன்களும் உண்டு. அவர்களிடம் அவர் கடுமையாக நடந்துகொண்டிருந்ததால் இருவரும் வீட்டை விட்டு வெளியேறியிருந்தனர். மகளிடம் பாரபட்சம் காட்டிய தால், மகன்கள் வெளியேற நேரிட்டது என்று அவரது மனைவி மனத்தாங்கல் கொள்கிறாள். விளைவாக அவள் பத்மாவதியிடம் அனுதாபமுடன் நடந்துகொள்ளுவதில்லை. கலியாணத்திற்கப்புறம் பாலாசாகேப்பும் அபாசாகேப்பின் குடும்பத்தில் வந்து வசிக்கிறான். பின்னர் வழக்குரைஞர் தொழில் படிக்க இங்கிலாந்துக்கு அனுப்பி வைக்கப்படுகிறான். அவன் சந்தேகப் புத்தியும் வஞ்சகமும் சூதும் உடையவன். பத்மாவதியைத் தன் தலையில் கட்டிவிட்டார்கள் என்ற எண்ணம் அவன் மனத்தில் உருவாகிறது. பழிவாங்கத் திட்டமிடுகிறான்.

அடுத்த கதை தாதாசாகேப் என்பவரின் குடும்பத்தைப் பற்றி யது. மனைவி, மகன் வசந்தராவ், மகள் மாலதி ஆகியோர் குடும்ப உறுப்பினர். மாலதி படித்தவள். கலியாணம் ஆகிறது. கணவன் இந்தியன் சிவில் சர்வீஸ் பரீட்சைக்காக இங்கிலாந்து செல்கிறான். பாலாசாகேப் போகிற சமயத்தில்தான் இவனும் போகிறான். இரு குடும்பத்தினரும் அந்நியோந்நியமாகப் பழகு கின்றவர்கள். அடிக்கடி ஒருவர் வீட்டுக்கு அடுத்தவர் வந்து போகின்றவர்கள். பத்மாவதியும் வசந்தராவும் சிறு வயது முதல் தோழமையுடன் இருப்பவர்கள். இப்போதும் அதே பிரியத்துடன் பழகுகிறவர்கள். அவள்மீது அதிகப் பிரியம் கொண்டுவிட்ட காரணத்தினால்தான் வசந்தராவ் இன்னும் திருமணம் செய்து கொள்ளாமலிருக்கிறான். பாலாசாகேப் இங்கிலாந்து சென்ற பின்பும் வசந்தராவ் பத்மாவதியைப் பார்க்க வருகிறான். அவள் சாக்கிரதையாக அவனுடன் அளவுடன் பழகுகிறாள். ஆனால் பாலாசாகேப் சந்தேகம் கொள்கிறான். பத்மாவதியின் கற்பை சந்தேகிக்கிறான். ஒரு சமயம் நிந்தித்தும் மற்றொரு சமயம் புகழ்ந் தும் அவன் அவளுக்குக் கடிதங்கள் எழுதி வருகிறான்.

நாவலின் தொடக்கத்திலேயே அபாசாகேப் இறக்கிறார். பாலாசாகேப் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்து அவரது இரும்புப் பெட்டியின் சாவியையும், உயிலையும் கேட்கிறான். அவள் மறுக் கிறாள். அவள் மன உரமும், தைரியமும் கொண்டவளாக இருக் கிறாள். அவள் அவனை மரியாதையுடன் நடத்துகிறாள். அவ் னுக்குத் துரோகம் இழைப்பதில்லை. ஆனால் அவன்மீது மனிதன் என்ற மரியாதை அவளுக்கு இல்லை.

அவர்கள் இருவருக்குமிடையே நடக்கின்ற நீடித்த போர் கதை யின் பிற்பகுதியை ஆக்கிரமிக்கிறது. பாலாசாகேப் குடிக்கத் தலைப்பட்டு, மோசடிக்காரர்களுடன் சேர்ந்து பலவிதங்களில்

பத்மாவதிக்குத் தொல்லைகள் கொடுத்து வருகிறான். முதிர்ச்சி யடைந்துவிட்ட ஹரிபாவர் எழுதுவதற்குத் தகுந்த விஷயமே இது. இரண்டு பாத்திரங்களும் சிக்கலானவர்கள், அவர்களது உறவும் அப்படிப்பட்டதே. ஆனால் கதை சற்று இழுவையாகப் போகிறது. அவர்களது உள்மன நினைவுகளையும் மற்றும் சமுதாயப் பார்வை களையும் பிரதானப்படுத்தாமல், நாவலாசிரியர் சூழ்ச்சிகளையே அதிகமாக விவரித்து விடுகிறார். ஆயினும் இரு பாத்திரங்களும் திறனுடன் படைக்கப்பட்டிருக்கின்றனர். நிகழ்ச்சிகளும் அப் படியே கையாளப்பட்டிருக்கின்றன.

நாவலினுள் அடங்கிய மூன்றாவது கதை மதுராபாயினது. அவள் இளம் விதவை. பெற்றோரும் இறந்துவிட்டனர். தம்பி தங்கைமாரைக் காப்பாற்றும் பொறுப்பு அவளைச் சேர்கிறது. பள்ளி ஆசிரியையாக வேலை செய்து அவள் அப்பொறுப்பை நடத்தி வருகிறாள்.

திகம்பரபந்த் அவளது அண்டை வீட்டுக்காரர். அவள் தந்தை யின் நண்பன் என்ற ஹோதாவில், தான் அவளுடையபாதுகாவலன் என்று தனக்குத்தானே பாவித்துக்கொண்டு அவள் நடவடிக்கை யில் வலியத் தலையிடுகிறார். மதானுட்டானங்களைச் சரியாகச் செய்வதில்லை என்று அவளைக் கண்டிக்கிறார். அவள் அவரைப் பொருட்படுத்துகிறதில்லை. உடனே அவர் அவளைப் பற்றி அவதூறு கள் கிளப்பி விடுகிறார். நிலைமை சகிக்க முடியாததாகிவிட்டதும் அவள் வீட்டை மாற்றுகிறாள். புது வீடு பத்மாவதியின் வீட்டுக் கருகில் அமைகிறது. இரு பெண்களும் தோழிகளாகின்றனர். மதுராபாய்க்கு நிம்மதி கிட்டுகிறது. நோய்வாய்ப்பட்டிருந்த பத்மாவதி தன் சொத்துக்களை மதுராபாயின் பேரில் எழுதி வைத் துத் தன் மகனையும் அவள் பராமரிப்பில் விட்டு இறக்கிறாள்.

மதுகரன் இந்தியா திரும்பினான். ஆனால் அதன் பிறகு மதுகரன்-மாலதி கதை அவ்வளவாகக் கூறப்படவில்லை. நாவல் பெரும்பாலும் பத்மாவதியையும் அதற்கடுத்தபடியாக மதுரா பாயையும் பற்றியது என்று சொல்ல வேண்டும்.

பத்மாவதியின் கதை தனிநபர்களின் அகமன உணர்வுகளின் பால் பின்னப்பட்டது. மதுராபாயினது சமுதாயப் பிரச்னைகளின் பாற்பட்டது. அக்கால மத்தியவர்க்கம் கண்ட நெருக்கடியில் மதுராபாய் போன்ற பெண்கள் இடைஞ்சல்களையும் எதிர்ப்புக்களை யும் சமாளிக்க வேண்டியதிருந்தது. பல பொய் அவதூறுகளை மேற்கொள்ள வேண்டியதிருந்தது. விதவைகளில் சிலர் கல்வி கற்று சுயமாகத் தங்கள் கால்களில் நிற்க முயன்றனர். ஹிந்து சமுதாயத்தின் காப்பாளர்களாகத் தங்களைத் தாங்களே நியமித்

துக் கொண்ட சிலர் அத்தகைய மாற்றங்களை எதிர்த்தனர். எனவே சமுதாய நோக்கில் அணுகினால் மதுராபாயின் கதையே அதிக முக்கியத்துவம் பெற வேண்டும். அவள் கதையை ஆசிரியர் நன்றாகக் கையாண்டிருக்கிறார். எனினும் மொத்தத்தில் பத்மாவதியின் கதைதான் பிரதானப்படுத்தப்பட்டுள்ளது. இருகதைகளும் சீராக இணைக்கப்படவில்லை. சூழ்ச்சியம்சம் நாவலில் அதிகமிருப்பதாலும் மனத்தை ஈர்க்கும் வன்மை குறைந்துவிடுகின்றது.

ஆஜாச் (இன்றே—(1904-1906), கர்மயோகா (1913-1917) இரண்டும் முடிவுறாத நாவல்கள். பொருளடக்கத்தைப் பொறுத்த வரையில் இவையிரண்டும் கணபதிராவ், யஸ்வந்த காரே, மீ என்ற நாவல்களைப் போன்றவை. கணபதிராவில் பெண் விடுதலை அழுத்தம் பெற்றது. பெண்கல்வி, திருமண வயதேற்றம், பால் சமத்துவம் ஆகியவை அலசப்பட்டன. யஸ்வந்த காரேயில் அரசியல் விடுதலை முக்கியத்துவம் பெற்றது, மீயில் இரண்டுக்கும் சம அழுத்தம் கிடைத்தது. ஆஜாச்சில் இவை தவிர வேறு பரிமாணங்களும் கூட்டப்படுகின்றன. நாவல் ஒரு சர்ச்சையுடன் தொடங்குகிறது. 1901-ல், கல்கத்தாவில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸில் கலந்துகொண்டு திரும்புகின்ற நால்வர் சர்ச்சையில் பங்கு கொள்கின்றனர். அவர்களில் மூவர் முந்தைய நாவல்களின் பாத்திரங்கள். சமுதாயவாதியான கணபதிராவ், அரசியல்வாதியான யஸ்வந்தராவ், யஸ்வந்தராவ் காரேயில் வந்த கிருஷ்ணபாபு ஆகியோர் அந்த மூவர். கிருஷ்ண பாபுவுக்கு இந்த நாவலில் கிருஷ்ணராவ் என்ற பெயர். இந்தியர் தொழில்களைத் துவங்கவில்லையெனில் அவர்களுக்கு எதிர்காலம் இல்லை என்கிற கருத்தை இவர் சர்ச்சையின்போது எடுத்து அலசுகிறார். நான்காவது சர்ச்சையாளர் நாராயணராவ். இவர் முந்தைய நாவல்களில் வந்ததில்லை. பூரண அரசியல் சுதந்திரம் அடைந்து கொள்ளாவிடில், நாடு முன்னேற வாய்ப்பில்லை என்ற கருத்தை இவர் விளக்கிச் சொல்லுகின்றார்.

நால்வரும் ரயிலில் ஒன்றாகப் பயணம் செய்கையில் உரையாடல் தொடங்குகிறது. நாவலின் பல அத்தியாயங்கள் வரை அது நீண்டுகொண்டு போகிறது. நடுவே ஒரு ஸ்டேஷனில் அத்வைதானந்தா என்றொரு சாமியாரும் அவர்கள் பெட்டியில் ஏறி உட்கார்ந்து கலந்துரையாடலில் பங்கு கொள்கிறார். எந்தவொரு இயக்கமும் பொருளுடையதாகி வெற்றி பெறவேண்டுமானால் அது இறைவனையும் சமயத்தையும் அடிப்படையாகக் கொண்டெழுந்ததாக இருக்கவேண்டும் என்ற தம் நம்பிக்கையை அவர் விளக்குகின்றார். நாவல் இருநூறு பக்கங்களுக்குமேல் போவது, ஆனால் கதை மேலே போவதில்லை. கதை எப்படி முடியும் என்பதற்கான

குறிப்பும் அந்தக் குறை நாவலில் காணப்படவில்லை. ஏதோ யூகித்துக் கொள்ளலாம். அவ்வளவுதான். நாவல் சர்ச்சைகளிலும் விவாதங்களிலும் மூழ்கிப்போகிறது.

ஆஜாச்சைப் போன்று கர்மயோகாவும் முடிவுறாத நாவல். கணபதி ராவின் கதைத் தலைவனான கணபதிராவின் மகன் இந்த நாவலின் தலைவன். பெயர் சந்திரசேகர். அவனது இரண்டாவது மனைவியான சரஸ்வதிபாய் நானுவின் சகோதரி கோதாவரி. சந்திரசேகரை அவள் மணக்கும்போது அவள் விதவை. நானு, அவன் மனைவி யசோதாபாய், மகள் லீலாவதி ஆகியோர் இந்த நாவலிலும் வருகின்றனர். சந்திரசேகர் எம். ஏ-இல் முதல் வகுப்பில் தேறுகிறான். எல்லோருக்கும் அவன் குறித்துப் பிரமாத எதிர்பார்ப்புக்கள் உள. சமுதாயப் பணிக்குத் தன்னை அர்ப்பணிப்பான் என்று எண்ணுகின்றனர்.

அவனுக்கோ எந்தத் தீர்மானமும் செய்ய இயலவில்லை. சிறிது காலம் ஓய்வாக நிம்மதியாக இருந்துவிட்டுப் பின் திட்டமிடலாம் என்று யோசிக்கிறான். தகப்பனைப்போல இவனும் நம்பிக்கையற்றவன். திட்டங்கள்போடுவதும் அழிப்பதுமாய் நாட்களைக் கடத்துகிறான். அவன் அவ்வாறு மனங்குழம்பிக் கிடந்த வேளையில் ஒரு சாமியாரைச் சந்திக்கிறான். அவரது சொல்திறனும் கம்பீரமும் அவனைக் கவர்கின்றன. எதிர்காலத் திட்டங்கள் தீட்டுவதுபற்றி அவர் அவனுக்கு ஆலோசனைகள் சொல்லுகிறார். அவரது ஆளுமை அவனைப் பாதிக்கிறது, அவரது செய்தி இதுதான்: கடவுள்மீது கொள்ளும் நம்பிக்கையால்தான் செயல் (கர்மா) மீது வைக்கும் நம்பிக்கை பொருளுறுகின்றது; உலகைப் படைத்து ஆண்டு நடத்தி வருகிற பெருஞ்சக்தி ஒன்று உண்டு என்ற முழு நம்பிக்கை மனிதருக்கு இன்றியமையாதது; அது நடத்துவதெல்லாம் உலகத்தின் நன்மைக்கே என்பதையும் விசுவாசிக்க வேண்டும். இந்தச் செய்தியை மனத்தில் வாங்கிக்கொண்ட நிலையில், சந்திரசேகர் தன் தாய்மாமன் நானுவின் வீடு சென்று அங்கு சில நாட்கள் தங்குகின்றான். அங்கே (மீயில் வந்த) தாயைச் சந்திக்கின்றான். அவள் (மீயில் வந்த) பாவா தொடங்கிய ஆசிரமத்தை நிர்வகித்துக் கொண்டிருக்கிறாள். அவளையும், அவளது வேலைத் திறனையும், ஆசிரமத்தின் பல துறைகளையும் கண்டு அவன் வியக்கிறான். தான் ஆற்ற வேண்டிய பணி குறித்து அவனுக்குத் தெளிவு பிறக்கிறது. இந்த இடத்தில் நாவல் நின்றுவிடுகிறது.

நாவலில் சந்திரசேகரின் கதை அவ்வளவாக வளரவில்லை. ஆனால் அதனுள் இருக்கும் துணைக்கதை சற்றுத் துடிப்புடன் செல்லுகிறது. பாவாசாகேப் என்பவரின் குடும்பம் பற்றியது அது. அவர் கல்லூரியில் கணபதிராவுடன் படித்தவர். தமது சமஸ்

கிருதப் புலமை பற்றிக் கர்வம் கொண்டவர். சீர்திருத்த விரோதி; பெருமை பீற்றுகிறவர்; குடும்பத்தினரை அநாவசியமாக அதிகாரம் பண்ணுகிறவர். ஆனால் முகஸ்துதியினால் இவரை யாரும் கவிழ்த்துவிட முடிகிறது. இவர் தமக்கு நடிப்புத்திறன் உண்டு என்று நம்புவதால், விக்கிரமசீலன் என்ற ஒருவனுடன் சேர்ந்து ஒரு நாடகம் தயாரிக்கின்றார். தமது வீட்டில் ஒத்திகைகள் நடத்துகிறார். விக்கிரமசீலன் ஒரு வீணன்; ஊர்சுற்றி. பாபாசாகேப்பின் பாதுகாப்பில் அவரது வீட்டில் வளர்கின்ற நர்மதா என்ற பெண் விக்கிரமசீலனிடம் மயங்குகிறாள். ஒரு அந்தி வேளையில் அவர்கள் இருவரையும் ஒருங்கே கண்ட சந்திரசேகர், விக்கிரமசீலனின் அயோக்கியப் பிடியினின்று நர்மதாவை மீட்கிறான்.

ஒருக்கால் சந்திரசேகரின் வாழ்க்கையில் இது புதுத் திருப்பமாக அமைகிறதோ என்னவோ. நாவல் இவ்விடத்தில் நின்று விடுவதால் அதுகுறித்து ஒன்றுஞ் சொல்ல இயலவில்லை.

பாவாசாகேப்பின் குடும்பத்திலும் பல நிகழ்ச்சிகள் நடக்கின்றன. ஆனால் பாவாசாகேப்பின் குடும்பக்கதை முக்கியகதையுடன் சிறிதளவே இப்போது தொடர்பு கொண்டிருக்கின்றது. இரு கதைகளையும் எப்படி இணைத்திருப்பார் என்பதைக் குறித்து நாம் ஹேஷ்யங்கள்தான் செய்யலாம்.

ஆக, ஹரிபாவரது சமுதாய நாவல்கள் அனைத்தையும் ஒருசேரப் பார்க்கின்றபோது ஒன்று தெரிகிறது; மகாராட்டிரத்தின் மத்தியதரக் கீழ் வர்க்கத்தினரில் ஒரு ஐந்தாறு குடும்பங்களை எடுத்துக்கொண்டு அவர்களது வாழ்க்கைக் கதைகளை ஒரு காவியமாக எழுத அவர் திட்டமிட்டிருக்கிறார். அதில் ஏறத்தாழ ஒரு நூறு மனிதர்கள் நடமாடுகிறார்கள்; மகாராட்டிர சமுதாய வரலாற்றில் ஒரு முப்பத்தைந்து வருடகாலம் பார்வைக்கு எடுக்கப்பட்டிருக்கிறது. அக்கால கட்டத்தில் நடந்த முன்னேற்றங்கள் அவற்றில் பிரதிபலிக்கின்றன. நாவலுக்கு நாவல் பெண்களின் நிலை முன்னேறுகிறதைக் காணமுடிகிறது. வர வர அவர்களது கல்வி வாய்ப்புக்கள் அதிகரிக்கின்றன. திருமண வயது மெள்ள மெள்ள ஏறுகிறது. விதவை மணத்துக்கு எதிர்ப்பு இருந்தாலும் அங்கங்கே அத்தகைய மணங்கள் நடக்கின்றன. அப்படி மறுமணமாகாவிட்டாலும் அவர்களில் ஒரு சிலர் வெளி வேலைகள் ஏற்பதையோ சமுதாயப் பணியில் ஈடுபடுவதையோ பார்க்கிறோம். இவையெல்லாம் அக்கால யதார்த்தங்கள்தாம்.

மகாராஷ்டிரத்தின் சமுதாய அரசியல் அரங்கிலே அந்த இரண்டின் சீர்திருத்த வாதிகளும், எதிரெதிராக நின்றுகொண்டிருந்தனர். அந்நிலைமை நாவல்களில் சிறிது மாற்றப்பட்டிருப்பதாகக்

கொள்ளலாம். அத்துடன் நாட்டின் பொருளாதார நடவடிக்கை களுக்கும் தொழில்களுக்கும் அவரது நாவல்களில் முக்கியத்துவம் கிடைக்கின்றது. சமுதாயம், அரசியல் இவற்றுக்குக் கிடைக்கின்ற அளவு கிடைத்துவிடுகிறது. அதுபோலவே ஆன்மிக விஷயங்களும் தகுந்த அழுத்தம் பெறுகின்றன. சமுதாய அரசியல் நடவடிக்கை களை ஆன்மிகப் படுத்த வேண்டும் என்ற கருத்து, நாவல்களில் வலி யுறுத்தப்படுகின்றது.

நாவல்களின் சமுதாய உள்ளடக்கத்தைப்பற்றிப் பார்த்தோம். ஆனால் நாவலாசிரியர் என்ற அளவில் ஹரிபாவரது சாதனைகள் என்ன, மராத்தி நாவலுக்குப் புதுமையாக அவர் செய்தது என்ன என்பனபற்றியும் கவனிக்கவேண்டும். அவரது நாவல்கள் வாழ்க்கை யோடு ஒட்டியவை, அதனோடு நெருங்கிய தொடர்புடையவை என்பது முக்கியமானதொன்று. அவர் காலத்துக்கு முன்பும், அவர் காலத்திலும் வெளிவந்துகொண்டிருந்த நாவல்களோடு அவரது நாவல்களை ஒப்பிட்டுப் பார்த்தால் அது தெளிவாகப் புலனாகிறது. அவரும் தம் சமுதாய நாவல்களுக்கு ‘சமகாலக் கதைகள்’—ஆஜ் கல்சியா கோஷ்டி என்றுதான் பெயரிட்டார். ஒருசில நாவல்களில் இலட்சியப்போக்கும், கற்பனைவினோதங்களும் அங்கங்கே தோன்று கின்றன என்பது உண்மையே. ஆயினும் அவையுங்கூட, சம்பந்தப் பட்ட பாத்திரங்களின் ஆசைகள், கனவுகளையொட்டி விளைவதாக இருக்கின்றனவேயன்றி, பொருத்தமில்லாமல் ஒட்டாமல் நிற்ப தாக இல்லை. எனவே, அவை ஓரளவு யதார்த்தமாகத்தான் ஒலிக் கின்றன. அடுத்ததாக அவரது மொழிநடை, அன்றாட நடப்பு வாழ்க்கையில் மக்கள் பயன்படுத்தி வந்த மொழி. பாத்திரங்கள் பேசினால் அவர்களுக்கேற்ற மொழியே பேசுகின்றனர். முக்கிய பாத்திரங்கள் தனித்தனி ஜீவன்களாக நன்கு தெரிகின்றனர். அவர்களில் யாரும் அச்சு வார்ப்பு இல்லை. பாத்திரங்களின் குண விசேஷங்களை வளர்த்து விரித்துக் கொண்டுபோவது திறமையாகச் செய்யப்பட்டுள்ளது. யாமு, பாவா, தாய், யஸ்வந்தராவ் ஆகியோ ரைக் குறிப்பிட்டுச் சொல்ல முடியும்.

குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் பாத்திரங்களின் மனங்களில் தோன்றியிருக்கக்கூடிய எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் மிக நுணுக்கமாகப் பகுத்து விவரிக்கிறார். கதையின் பின்புலமும் அப்படியே சித்திரிக்கப்படுகின்றது. பாத்திரங்கள் வாழ்ந்து செயலாற்றிய இடங்களும் மற்றும் சூழல்களும் நிதரிசனமாக தீட்டப்பட்டிருக்கின்றன. இதற்கொரு சிறந்த உதாரணம் பன் லக்ஷியாந்த கோன் கேதோ? ஆகும். மீயிலும் யஸ்வந்தகாரேயிலும்கூட ஆசிரியரின் இத்திறனைப் பார்க்கமுடிகிறது. யஸ்வந்த காரே முடிவடையாமல் போய்விட்டது. மற்றப்படி அது பன் லக்ஷியாந்த

கோன் கோதோ?வுக்கொத்த சிறப்புடையதாகவே இருந்திருக்கும். அதன் பாத்திரங்கள் நிபுணத்துவத்துடன் செதுக்கப்பட்டவை. யஸ்வந்தராவின் குணவியல்புகளை உருவாக்கி இயக்கிய மூலங்களைப் பற்றியும் அவர் அந்நாவலில் விளக்க முனைகிறார்.

ஹரிபாவரது சில நாவல்கள் முடிவுறவில்லை. முடிவுற்ற சில நிறைவு தருவதாக இல்லை. எனினும் மராத்தி நாவல் இலக்கியத்தில் அவர் பெரும் பாதிப்பு ஏற்படுத்தியவர் என்பதில் இரு கருத்துக் கிடமில்லை. அவரது நாவல்களின் பாதிப்பால், பின் வந்த நாவல் இலக்கியம் முற்றிலும் மாறியது. அவரைப் பின்பற்றித்தான் சர்ச்சை நாவல் பின்னால் எழுதப்படலாயிற்று. வி. எம். ஜோஷியும் பிறரும் அவ்வகை நாவல்கள் எழுதினர். யதார்த்த நாவல்களும் அவரைப் பின்பற்றியே எழுதப்படலாயின. எனவே சமுதாய நாவல் வளர்ச்சியில் அவரது பணிகளைக் குறிப்பிட்டுச் சொல்லிவிட முடிகிறது. ஒன்று தனி நபரின் பாத்திரப்படைப்பு. அடுத்தது குடும்பம் என்பது சமுதாயத்தின் அடிப்படை அங்கம் என்பதை அவர் தெளிவாகக் காட்டியதாகும். இன்றைய நாவல்கள் பலவற்றில் பாத்திரங்களைக் குடும்ப உறுப்பினர்களாகவும் அணுகிச் சித்திரிக்கும் போக்கு மிகக் குறைவு. ஆனால் ஹரிபாவரின் பாத்திரம் குடும்பத்தில் அவன்/அவள் ஏற்கும் பங்கைக் காட்டி நிற்பது. ஒரு தனி நபர் குடும்பத்தினின்று பிரிக்கப்படமுடியாத கூறு, ஒருவன்/ஒருத்தி அக்குடும்பம் உருவாக்கிய விளைவு என்பதை அவர் தெளிவாக்குகின்றார். ஒரு மனித ஜீவன் தன் குடும்பத்தின் நிலைமையையும் அதன் ஏற்றத் தாழ்வுகளையும் பொறுத்துத்தான் உருவாக்கப்பெறுகிறது என்பது சொல்லப்படுகிறது. குடும்பத்தைப் பார்க்கும் பார்வையிலே அவர் சமுதாயத்தைக் கோடி காட்டி விடுகிறார். சமுதாய நெசவில் குடும்பம் ஒரு இழையாகும். தேக்கமுற்ற, தேய்கின்ற, வளர்கின்ற எல்லாக் குடும்பங்களும் அவர் நாவல்களில் பிரதிநிதித்துவம் பெறுகின்றன. அந்தப் பல்வேறு குடும்பங்களும் ஒன்றையொன்று பாதிக்கவும் பாதிக்கப்படவுமாய் இருக்கின்றன. இக்காரணங்களினால்தான் ஹரிபாவரது நாவல்கள் உண்மையான சமுதாய நாவல்களெனப் பெயர் பெறுகின்றன.

அத்தியாயம் 4

# ஹரிபாவரின் வரலாற்று நாவல்கள்

ஹரிபாவர் பதினொரு சமுதாய நாவல்கள் எழுதியதுபோல பதினொரு வரலாற்று நாவல்களும் எழுதினர். இது தற்செயலாகவும் நேர்ந்திருக்கும். ஆனல் இதுபோன்று வேறு சில பொருத்தங்களும் உள.

முந்திய அத்தியாயத்தில் சமூக நாவல்களை ஆராய்ந்தபோது, சாணக்ஷ பாசை கலாஸ் (1889–90) என்ற சமூக நாவலைக் கவனத்திற்கு எடுத்துக் கொள்ளவில்லை. ஏனெனில் அது துப்பறியும் பிரெஞ்சு நாவலொன்றைத் தழுவிய ஆங்கில நாவலின் மொழி பெயர்ப்பாகும். அதுபோலவே ஹரிபாவரின் முதல் சரித்திர நாவலான மைசூர்ச்ச வாகு (மைசூர்ப் புலி) என்பதையும் நாம் விட்டுவிடலாம். அது கர்ணல் மெடோஸ் டேயிலரின் (Col Meadows Taylor) திப்பு சுல்தான் என்ற நாவலின் மொழிபெயர்ப்பு என்பது மட்டுமல்ல, அது மூலத்தின் சிதைந்த சுருக்கமாகவும் உளது. முடிவுருததுங்கூட.

மற்றப் பத்தில் ஆறு, மராத்திய வரலாற்றைப் பொருளடக்கமாகக் கொண்டவை. எனவே அவற்றை ஒருசேரக் கவனிப்பது நல்லது. அவை பிரசுரமான கால வரிசையில் அல்லாமல் அந்த வரலாற்று நிகழ்ச்சிகள் நடந்த வரிசையில் அவற்றைக் கவனிப்போம். நாவல்கள் (1) உஷாக்கால், (2) சூரியோதயா, (3) சூரியகிரகண், (4) காத் அலா பன் சிங்ககேலா, (5) கேவல் சுயராஜ்யசதி, (6) மத்யங்கா என்பன. சூரியகிரகணும், மத்யங்காவும் முடிவுருதவை.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பாதியில் மகாராட்டிரத்தில் பொதுவாகப் பழைய வரலாற்றையும் குறிப்பாக சிவாஜியைப் பற்றியும் தெரிந்துகொள்ளும் ஆர்வம் மக்களிடையே பெருகிற்று. அவ்வார்வம் பெரும்பாலும் கிராண்ட் டப்பு (Grant Duff) எழுதிய மராத்தியர் வரலாறு (History of the Marathas) என்ற நூலாலும், அதற்கு நீலகாந்த ஜனர்த்தன் கீர்த்தனே எழுதிய விமரிசனத்தாலும் உருவாகி வளர்ந்திருந்தது. நாடெங்கும் பொதுவாகக் கிளர்ந்திருந்த தேசிய உணர்வின் ஒரு கிளை விளைவாகத்தான் இந்த சரித்திர உணர்வும் கிளர்ந்தது. பிரித்தானிய ஆட்சியைப்பற்றி முதன் முதலில் மக்களிடையே ஒரு பெருவியப்பு இருந்து வந்தது.

நாளடைவில் அது அடங்கத் தொடங்கியது. பாரதம் அடிமைப்பட நேர்ந்த காரணங்களையும் அது மீண்டும் தன் அரசியல் சுதந்திரத்தைப் பெறும் வழி வகைகளையும் குறித்துச் சிந்தனையாளர்கள் ஆராயத் தொடங்கிவிட்டனர். சமுதாய சமய சீர்திருத்தங்கள், ஆண்பெண் ஆகிய இருபாலாரது கல்வி, தொழில்கள் தொடக்கம், அரசியல் விடுதலைப்போராட்டம் இவையெல்லாம் அரசியல் விடுதலைக்குச் சில வழிகளாகும் என்பது உணரப்பட்டது. அரசியல் விடுதலை உணர்வை ஊட்டுவதற்கும், எழுச்சி உண்டாக்குவதற்கும் பாரத சரித்திர அறிவை முதலில் ஊட்டவேண்டும் என்பதும் ஒரு வழி எனப் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

1895 ஏப்ரல் தொடக்கம் சிவாஜிபற்றிய கட்டுரைகள் திலகரின் ஏடான கேசரியில் வரத் தொடங்கின. சிவாஜியின் பிறந்தநாளைக் கொண்டாடும் முயற்சியையும் திலகர் தொடங்கி வைத்தார். 1896 ஏப்ரலில் ரேய்காட்டில் முதன் முறையாக சிவாஜியின் பிறந்தநாள் விழா மிக்க ஆர்வத்துடன் நடந்தேறியது. மராத்திய வரலாறு குறித்தும் சிவாஜி குறித்தும் அப்போது பெருகிய உற்சாகம் ஒரு புதிய யுகத்தைத் தொடங்கி வைத்தது. அது இன்னும் மகாராட்டிரத்தில் தொடர்ந்து இயங்கி வருவதைக் காணலாம். சிவாஜியின் வாழ்க்கை குறித்து ஹரிபாவர் நாவல்கள் படைக்க இந்தச் சூழலும் உந்துதலும் ஏதுவாக அமைந்தன. சிவாஜிபற்றிய உஷாக்காலம் (1895–1897) அவரது முதலாவது வரலாற்று நாவல். பின்னர் தொடர்ந்து வேறு நாவல்கள் வெளியிடலானார்.

சிவாஜி அரசியல் அரங்கில் தோன்றுவதற்குமுன்பு மராத்தி நிலப்பிரபுக்களின் போங்கு எவ்விதமிருந்தது என்பதைக் காண்போம். அந்த ஹிந்துப்பிரபுக்கள் ஜாகிர் நிலங்களையும் படை வீரர் கூட்டத்தையும் தங்கள் அதிகாரத்தில் வைத்திருந்தனர். முஸ்லிம் ஆட்சியை ஒப்புக்கொண்டு முஸ்லிம் சுல்தான்களுக்கு அடிபணிந்து நடந்தனர். நிலமும் படையும் தங்கள் அதிகாரத்தில் இருக்கும்படியாக சுல்தான்கள் அனுமதிக்கும் பட்சத்தில், அவர்கள் அந்த ஆட்சியை ஒப்புக்கொள்ள எந்தத் தயக்கமும் காட்டவில்லை. அந்த நிபந்தனையை முன்வைத்து அவர்கள் தங்கள் விசுவாசத்தை சுல்தானுக்கு சுல்தான் மாற்றிக்கொள்ளவும் தயங்கியதில்லை. இந்த நிலை ஏறக்குறைய முன்னூறு ஆண்டுகளாக எவ்வித மன உறுத்தலுமில்லாமல் நீடித்து வந்தது. தங்கள் நிலங்களும் மற்றச் சலுகைகளும் அப்படியே இருக்கவேண்டும் என்ற ஒன்றைத் தவிர அவர்கள் வேறெதைப்பற்றியும் கவலைப்பட்டுக்கொள்ளவில்லை. தாங்கள் ஆண்ட பூமியை இப்போது அந்நியன் வந்து ஆள்கிறானே என்ற எண்ணம் அந்த ஹிந்துக்களுக்கு இதுகாறும் ஏற்பட்டதாகத் தெரியு

வில்லை. ஹிந்துமதமும், ஹிந்துக்களும் அவமதிக்கப்படுவதை அவர்கள் பார்த்துக்கொண்டுதானிருந்தனர். ஆனால் அது குறித்து அவர்கள் மனதைக் குழப்பிக்கொள்ளவில்லை. சிவாஜியின் தந்தை சாகாஜி இந்த அச்சில் வார்க்கப்பட்ட ஒரு ஜாகிர்தார்தான். தீரமும் உறுதியும் வாய்ந்த தளகர்த்தரும் திறமைபொருந்திய நிர்வாகியுமானவர். ஆமத்நகர் சுல்தானுக்கும், பிஜப்பூர் சுல்தானுக்கும் மாறி மாறி விசுவாசம் காட்டி உழைத்து வந்த அவரும் அவர் காலத்தில் ஒரு பெரும் வீரதீரராகத்தான் கருதப்பட்டார்.

ஆனால் சிவாஜி முற்றிலும் மாறுபட்ட ஒரு இளைஞராக இருந்தார். தாய் ஜீஜாபாயும் தாதாஜி கொண்டதேவுமாகச் சேர்ந்து அவரைச் சுதந்திர உணர்வுடன் வளர்த்திருந்தனர். அந்தப் பயிற்சியின் விளைவாக அவருக்கு ஒரு சுதந்திர ராச்சியத்தில் நாட்டம் உண்டாயிற்று. தான் அமைக்கின்ற அந்த ராச்சியத்திலே ஹிந்துக்கள் மானமாகவும் பயமின்றியும் வாழமுடியும் என்று கருதினார். வளர வளர இதுவே தமது வாழ்க்கைப் பணியாக இருக்கப்போகிறது என்பதை உணர்ந்தார். அவரது கருத்துக்களில் உடன்பாடு கொள்ளக்கூடிய இளைஞர்களை ஒன்றுசேர்க்கத் தொடங்கினார். சாயாதிரி மலைகளைச் சேர்ந்த, ஏழையான ஆனால் திடகாத்திரமான மாவலிகள் திரளாக அவர் படையில் வந்து குழுமினர். பின்னர் தம் பணிக்குக் கைகொடுத்துதவுமாறு மூத்த நிலப்பிரபுக்களையும் வேண்டினார். ஆனால் அவர்களுக்கு அவரது கருத்துக்களோடு அனுதாபமில்லை. அவரது கிளர்ச்சித் திட்டங்களைப் பிடிக்கவில்லை. எதிலும் பட்டுக்கொள்ளாமல் பதவியை வகித்துக் காலத்தைக் கடத்திக்கொண்டு போவதில் ஒரு சுகம் கண்டவர்களாக இருந்தனர். மூத்த தலைமுறையினர் பழைய தடத்திலேயே போக விரும்பினர். இளைஞர்களோ எதிர்த்துக் கிளர்ச்சி செய்யவும், சுதந்திரம் பெறவும் விரும்பினர். இரு தலைமுறையினருக்குமிடையே மோதல் தொடங்கிற்று. இந்த மோதலைச் சித்திரிப்பதுதான் உஷாக்கால் என்ற நாவல்.

சிவாஜி தமது பதினேழாவது வயதில் 1647-ல் தோரணக் கோட்டையைப் பிடித்தார். அதுவே அவர் செய்த முதல் சாகஸச் செயலாகும். அந்த வரலாற்று நிகழ்ச்சியை மையமாகக் கொண்டது உஷாக்கால். கோட்டையின் பெயரை சுல்தான்காட் என்று நாவலாசிரியர் மாற்றிவிட்டார். நாவலில் சிவாஜி, தானாஜி ஏசாஜி, பிஜப்பூர் சுல்தான், ராணாதுல்லாகான் ஆகியோர் மாத்திரமே உண்மைப் பாத்திரங்கள். அதில் வருகின்ற ஏனையோர் கற்பனையே.

ரங்ராவ் அப்பா என்பவர் சுல்தான்காட்டின் கில்லேதாராக இருந்து வருகிறார். பிஜப்பூர் சுல்தானுக்குப் பணிந்து அவர் சார்பில்

அவர் அந்தக் கோட்டைப் பாதுகாப்பை நிர்வகித்துவருகிறார். மகன் நாஞசாகிப் சிவாஜி அனுதாபியாக இருக்கிறான். நாவல் ஒரு நாடகம்போல் தொடங்குகிறது. பிஜப்பூரிலிருந்து பெறப்பட்ட பரிவட்டங்களை சபையில் நாஞசாகிப்புக்கு அணிவித்து கௌரவிக்கும் சடங்கு தொடங்கவிருக்கிறது. நாஞசாகிப் அவற்றை ஏற்க மறுக்கிறான். தந்தைக்கும் மகனுக்குமிடையே சூடான சொற்பரிமாற்றம் நிகழ்கிறது. நாஞசாகிப் கோட்டையை விட்டு வெளியேறுகிறான். சிவாஜியின் தோழர்படையில் சேர்கிறான். பின்னர் பிஜப்பூருக்குத் தூது செல்ல சிவாஜியால் தாஞஜியும் அவனும் அனுப்பப்படுகின்றனர். அங்கே அவன் சிறையாகின்றான். அரசவையினன் ரணதுல்லாக்கானின் மகள் மேகர்ஜனின் உதவியால் விடுவிக்கப்படுகிறான். பின்னர் சிவாஜி படையெடுப்பு முஸ்திப்புக்கள் தொடங்குகிறார். தாஞஜி, ஏசாஜி, நாஞசாகிப், மற்றுமுள்ள மாவலிகளின் படைத்துணையாலே சுல்தான் காட்டைப் பிடிக்கிறார். அந்த வெற்றியுடன் நாவல் முடிவடைகிறது.

இது கதையின் வெறும் எலும்புக்கூடு மாத்திரமே என்பதைச் சொல்லவேண்டியதில்லை. முக்கிய நிகழ்ச்சிகளுக்கிடையே பற்பல சம்பவங்களை உள்ளடக்கி நாவல் இரத்தமும் சதையுமாக உயிரும் ஆத்மாவும் பொருந்தியதாக இருக்கிறது. நிலவறை ஆலோசனைகள், சுரங்கப்பாதைப் பயணங்கள், மாறுவேட ஒற்றர்கள் செய்யும் சாகஸங்கள் ஆகியன வருகின்றன. மோன நிலையில் சிவாஜிக்குப் பவானியின் தரிசனமும் நல்வாக்கும் கிட்டுகின்ற விவரங்கள் தரப்படுகின்றன. இவைபோக பெண்களைக் கடத்திச் செல்லுதல், அவர்கள் இக்கட்டில் மாட்டுதல், பின் அவர்களை விடுவித்தல் அல்லது பெண்களே தங்களை விடுவித்துக் கொள்தல்—எது எப்படியாயினும் அவர்கள் மானத்தை இழக்காதிருத்தல்—என்று பற்பல சம்பவங்கள். பெண்கள் வெகு தைரியமாகவும் சாகஸமாகவும் செயல்படுகின்றனர். விவரங்கள் அனைத்தும், சித்திரிக்க எடுத்துக்கொண்ட காலப் பகுதியில் நடந்திருக்கக் கூடியனவாகவும் பொருந்துவனவாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன. கதை நிகழ்ச்சிகளும் பாத்திரங்களின் செயல்களும் நேர்த்தியாக விவரிக்கப்படுகின்றன. எனவே அந்தப் பழமைக் காலம் உயிர்பெற்று நம் கண்முன்னால் வந்து நடமாடுகிறது.

மூத்த இளைய தலைமுறைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகள் தெளிவாகக் காண்பிக்கப்படுவதுபோலவே பாத்திரங்களின் குண வித்தியாசங்களும் நன்கு கொணரப்பட்டிருக்கின்றன. குறிப்பாக சிவாஜியின் குணவியல்பு அருமையாகத் தீட்டப்பட்டுள்ளது. அவர் ஒரு பிறவித் தலைவர்; மக்களைக் கவர்ந்து, அவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாகிப் பின் அவர்களைப் பிணைத்து ஒன்றுதிரட்டி நிர்வகித்

துக்கொண்டு போகிறார். பெரிய வீரர் நண்பர்களும் மாவலிகளும் அவர்மீது கொண்ட விசுவாசம் பெரிது; உறுதியானது. ஒரு செயலின் விளைவுகள் எப்படியிருக்கும் என நிச்சயமாகக் கணிக்க வியலாத நிலையிலும், அளவோடு அவர் காட்டுகின்ற துணிவு வியக்கத்தக்கது. மனித இயல்பை எடைபோடுவதிலும், நிகழ்வை நிதானிப்பதிலும் நிபுணர். எந்த நிலையிலும் மனம் பதறுவதில்லை. என்பதாக அவர் சித்திரிக்கப்பட்டிருக்கின்றார்.

இந்த நாவலில் சில குறைபாடுகள் உள. ஹரிபாவரது நாவல்கள் சிலவற்றில் காணப்படுகின்ற பொதுவான குறைபாடுகள் இவை. சில மனிதரது பெயர்களை அவர் வாசகர்களுக்குத் தெரிவிக்காமல் இருப்பது ஒன்று. துணைப்பாத்திரங்களுக்கும், துணைக் கதைகளுக்கும், உபநிகழ்வுகளுக்கும் தேவைக்கதிகமான முக்கியத்துவம் கொடுப்பது இன்னொன்று. மேலும் ஒரு சம்பவத்தைச் சொல்லிக்கொண்டு வந்து அதை நிறுத்திப் பின் பல அத்தியாயங்கள் கடந்தபின்னரே அதன் தொடர்ச்சியை மீண்டும் எடுக்கிறார். வாசகர்கள் காத்துக்கொண்டிருப்பதை அவர் மறந்துவிடுகின்றார். கூறுவது கூறலும், சொற்பெருக்கமும் அங்கங்கே காணப்படுகின்றன.

இந்தக் குறைபாடுகள் இருந்துங்கூட நாவல் வாசகனை ஈர்க்கிறது. மனநிறைவு அளிக்கிறது. கதை உயிர்த் துடிப்புடன் இயங்குகிறது. பாத்திரங்கள் ஜீவனோடு உலவுகிறார்கள். அவர் எடுத்துக்கொண்ட காலகட்டத்தின் கருத்துப்போக்குகள், மனநிலைகள், பின்னணிச் சூழல் மற்றும் நிலவரங்கள் அனைத்தும் வரலாற்றுப் பிசகின்றி தரப்படுகின்றன. நிஜ, கற்பனைப்பாத்திரம் என்ற இருவகையினரும் காலப்பொருத்தம் வழுவாது சித்திரிக்கப்பட்டிருக்கின்றனர். ஹரிபாவரது சமுதாய நாவல்களில் சிறந்ததாக பன் லக்ஷியாந்த கோன் கேதோ?வைச் சொல்லுவதுபோல, மராத்தி வரலாற்று நாவல்களிலே உஷாக்காலைச் சொல்லலாம்.

உஷாக்காலத்தில் சிவாஜி காலப் பின்னணி நுணுக்கமாகத் தீட்டப்பட்டுவிட்டது. சிவாஜிபற்றி அவர் பின்னர் எழுதிய எல்லா நாவல்களுக்கும் அதுவே பொதுவான பின்னணியாகப் பயன்பட்டது. நாம் அடுத்துக் கவனிக்கவேண்டிய நாவல் சூரியோதயா (1905–6). அப்சல்கான் சிவாஜியால் கொலையுண்ட நிகழ்ச்சியை மையமாகக்கொண்டது. உஷாக்கால் என்றால் விடியற் காலம் என்று அர்த்தம். சூரியோதயம் அதற்கடுத்தாற்போல் வருகின்ற நேரம். இந்தத் தலைப்புக்கள் கவனிக்கத்தக்கன. உஷாக் காலத்தில் வரும் சிவாஜியை மூத்த பிரபுக்களும் சுல்தான்களும் பொருட்படுத்தவில்லை. தொந்தரவு பிடித்த இளைஞன் என்று கருதி ஒதுக்கியதோடு சரி. ஆனால் இப்போது நிலைமை மாறுகிறது.

சிவாஜி ஒரு சக்தியாகத் தலையெடுத்துவிட்டார். அவர் செல்வாக்கு அதிகரித்துவிட்டது. பல படையெடுப்புக்களை வெற்றிகரமாகச் செய்துகாட்டிவிட்டார். அவரது படைகளும் படைக்கலன்களும் பெருகிவிட்டன. ஒரு பெரும் பகுதி நிலம் அவரது ஆதிக்கத்தின் கீழ் வந்துவிட்டது. எனவே, இப்போது பிஜப்பூர் சுல்தான் சிவாஜியை எதிரியாகக் கருதினான். அவரை உயிருடன் பிடித்துவர அல்லது கொன்றுவர உத்தரவிட்டு அவன் அப்ஸல்கானை அனுப்பினான். சிவாஜிக்கு அப்சல்கானின் நோக்கம் தெரியும். நிலைமையைச் சமாளிக்க அவர் தயாராக இருந்தார். பிரதாப்காட்டின் அடிவாரத்தில் ஒரு மத்தியான வேளையில் அவர்கள் சந்திக்கும்படியாக ஏற்பாடாயிற்று. சந்திப்பின்போது அப்சல்கான் சிவாஜியால் கொல்லப்பட்டுவிட்டான்.

அப்சல்கான்தான் பலாத்காரம் தொடங்கினான். சிவாஜியின் தலையைத் தன் இடது அக்குளில் வைத்து அமுக்கிக்கொண்டு அவரது முதுகிலே வாளைப்பாய்ச்சினான். உடல் அங்கங்களை லாகவமாகவும் விரைவாகவும் இயக்கவல்ல சிவாஜி சட்டென்று தலையை விடுவித்துக்கொண்டு அப்சல்கானின் வயிற்றில் தம் ஈட்டியை உருவிப் பாய்ச்சவே, அது அவன் முதுகின் வழியாக வெளிவந்தது. அவன் தலையை வெட்டினார்.

பெரும் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த இந்த நிகழ்ச்சி சில வினாடிகளில் நடந்துபோயிற்று. எனவே அதைச் செறிவுபடுத்த நாவலாசிரியர் துணைக்கதை ஒன்றைச் சேர்க்கிறார். அப்சல்கான் கொலை நடப்பதற்கு நான்காண்டுகளுக்கு முன்பு 1655-ல் சிவாஜியின் ஆட்களிலொருவன் சந்திரராவ் மோரே என்பவரைக் கொன்றிருந்தான். மோரே பிரதாப்காட் பிராந்தியத்தில் செல்வாக்கு மிகுந்தவர். எனவே அது ஒரு அரசியல் கொலையாகும். நாவலில் ஹரிபாவர் மோரேக்கு ஒரு கற்பனை மகளை உருவாக்குகிறார். அவள் தந்தையின் கொலைக்குப் பழியெடுக்க, சிவாஜிக்கெதிராகச் சதி செய்கிறாள். ஆனால் இந்தத் துணைக்கதை நாவலின் பெரும் பாகத்தை ஆக்கிரமித்துக்கொண்டு முக்கிய கதையை அமுக்குகிறது. முக்கிய கதையோட்டத்தை நிறுத்தி பின் நெடு நேரம் கழித்துத் தொடர்கிற, ஆசிரியரது வழக்கமான குற்றம் இந்நாவலிலும் காணப்படுகின்றது.

ஓரிரு அம்சங்கள் மட்டுமே நாவலில் நன்றாய் வாய்த்திருக்கின்றன. அப்சல்கானின் குணுதிசயச் சித்திரம் அவைகளில் ஒன்று. சிவாஜியின் தரப்பில் மத்தியஸ்தனாக செயல்படுகின்ற கோபிநாத பந்துவின் திறமை நன்கு வெளியிடப்பட்டுள்ளது. அதுபோலவே சிவாஜியும் அப்சல்கானும் சந்திப்பதற்கு முன்னிரவு சிவாஜியும்

தாய் ஜீஜாபாயும் மனங்குழம்பித் தவிப்பது உணர்ச்சிகரமாக எழுதப்பட்டிருக்கின்றது.

1666-ல் சிவாஜி ஆக்ரா சென்று, சிறையாகிப் பின் சிறையினின்று தப்பி மகாராஷ்டிரம் வந்தடைந்தார். அவற்றை மையமாகக்கொண்டது சூரியகிரகண் (1908—9). நாவல் முடிவுறவில்லை. 1665-ல் சிவாஜிமீது ஜெயசிங் திணித்த புரந்தர் உடன்படிக்கை சிவாஜிக்குச் சாதகமானதல்ல. அவமானந்தருவதாக அமைந்தது. வேறு வழியின்றி சிவாஜி அதற்குச் சம்மதிக்கவேண்டியதிருந்தது. அச்சமயத்தில் அவர் மனம் புழுங்கித் தவித்திருப்பார் என்று கொள்ள இடமிருக்கிறது. அப்போது அவர் மனத்தில் நிகழ்ந்திருக்கக்கூடிய போராட்டங்களை விவரிப்பது ஒரு நாவலாசிரியருக்குக் கிடைக்கும் வாய்ப்பு. ஆயினும் ஹரிபாவர் அதைச் செய்யவில்லை. வாய்ப்பை நழுவவிட்டிருக்கிறார். மேலும் கடத்தப்பட்ட இளம் பெண்களைக் காப்பாற்றும் முயற்சிகளில் சிவாஜி மும்முறை ஈடுபடுவது விவரிக்கப்படுகின்றது. சிவாஜியின் உள்மனப் போராட்டங்களை வெளிப்படுத்தக்கூடியதாகவும், நாடகக்கூறு அமைந்ததாகவுமுள்ள கட்டத்தை ஹரிபாவர் சரியாகப் பயன்படுத்திக்கொள்ளத் தவறிவிட்டார் என்றுதான் சொல்லவேண்டும்.

1670-ல் சிங்ககாட் கோட்டையை சிவாஜியின் தோழர் தாஞ்ஜி பிடித்தார். அந்த நிகழ்ச்சியை மையமாகக்கொண்டு எழுதப்பட்டது கால ஆலா பான் சிங்க கேலா (1903) என்ற குறுநாவல். சிங்ககாட் கோட்டை சிவாஜியின் ஜாகிரைச் சேர்ந்ததாகத்தான் இருந்து வந்தது. ஆனால் அது பலமுறைகள் கைமாறி அப்போது மொகலாயரின் ஆதிக்கத்துக்குட்பட்டிருந்தது. உதயபானு என்ற இராஜபுத்திர அதிகாரி அதற்குப் பொறுப்பாக இருந்தான். கோட்டை அந்நியர் வசமானது குறித்து ஜீஜாபாய்க்கும் சிவாஜிக்கும் மிகுந்த வருத்தம் இருந்துவந்தது. அதை எப்படியும் மீட்டுவிடுவது என்று சிவாஜி தீர்மானித்துக்கொண்டார். 1670-ம் ஆண்டு பெப்ருவரி 4-ம் தேதி சிவாஜியும் தாஞ்ஜியும் முன்னூறு மாவலிகளுடன் இரவில் கயிற்றின் உதவியால் கோட்டையிலிருந்த மலையுச்சிக்கு ஏறினார்கள். மூன்று மணிநேரம் உக்கிரமாகப் போர் நடந்தது. தாஞ்ஜியும் உதயபானுவும் போரில் மாண்டனர். முடிவில் வெற்றி மராத்தியரை அடைந்தது. அப்சல்கான் கதையைப் போலவே இதுவும் விரைவாக நடந்து முடிந்த சம்பவம். நாவலுக்குரிய சமாச்சாரம் அதிகம் கிடையாது. கதைக்குச் செறிவூட்ட நாவலாசிரியர் சின்ன அளவில் கற்பனைக் கதை ஒன்றைச் சேர்த்திருக்கிறார். கமலகுமாரி என்றொரு இராஜபுத்திர இளம் விதவையை உதயபானு கடத்திக்கொண்டுபோய்க் கோட்டைக்குள் வைத்திருந்ததாகவும், மாவலிகள் மலையுச்சியை அடைந்த

போது அவள் தன் தீக்குளிச்சடங்கைத் தொடங்கியிருந்ததாகவும், உடனேயே தாஞஜி போய் அவளைக் காப்பாற்றியதாகவும் அந்தக் கதை செல்கிறது.

ஹரிபாவரின் உயர்ந்த படைப்புக்களில் ஒன்று காத் ஆலா பின் சிங்க கேலா. நாவலின் களம் விசாலமானதல்ல. நிகழ்ச்சிகளும் சொற்பந்தான். ஆனல் வீரமும் கற்பனையும் அழகாக அளவோடு கலந்திருக்கின்றன. முக்கிய நிகழ்வுகள் பளிச்சென்று தூக்கி நிற்கின்றன. அதுபோலவே முக்கிய பாத்திரங்களான சிவாஜி, தாஞஜி ஆகியோரின் குணச்சித்திரங்கள் நேர்த்தியாய்ச் சித்திரிக்கப்படுகின்றன. வாசகனின் கவனத்தை நாவல் தொடக்கத்தில் ஈர்த்து, அதைத் தொடர்ந்து கொண்டுசெலுத்தி முடிவிலே அவனுக்கு மனநிறைவை அளிக்கிறது. ஹரிபாவரது வரலாற்று நாவல்களில் உஷாக்காலத்துக்கு அடுத்தபடியான இடத்தை இந்த நாவல் பெறுகிறது.

நான்கு வரலாற்று நாவல்களையும் சேர்த்துப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது நாவலாசிரியரின் சில திறன்கள் புலனுகின்றன. சிவாஜியை அவர் மாபெரும் வீரனுகவும், அந்நிய ஆதிக்கத்தினின்று நாட்டை விடுவித்த இரட்சகனுகவும் காட்டியபோதிலும், அவரை அவர் தெய்வபுருடனுக்கிவிடவில்லை. அடுத்ததாக தாம் பார்வைக்கு எடுத்துக்கொண்ட இறந்த காலத்தை உயிருடன் நம் கண்முன் கொணர்ந்து நிறுத்த ஆசிரியர் முயன்று அதில் வெற்றி கண்டிருக்கிருர். கிடைத்த வரலாற்று விவரங்களை வைத்துக்கொண்டு அக்கால நிலவரங்களையும் நடப்புக்களையும் காண்பித்து விடுகிருர். சிவாஜிக்கு சாதகமாகவும் பாதகமாகவும் செயல்படுகின்ற பல பாத்திரங்களைக் கற்பனையாகப் படைத்தபோதிலும், அவர்கள் எல்லோரும் தங்கள் வரலாற்று வரம்பினுள் நின்று செயலாற்றுவதாகவே காட்டுகின்ருர். நிகழ்ச்சிகளும் அப்படியே வரலாற்றுப் பிசகில்லாமல் விவரிக்கப்படுகின்றன.

அடுத்ததாக நாம் கவனிக்கவேண்டிய நாவல் கேவல் சுயராஜ்ய சதி (1898–9) ஆகும். 1689-ல் மொகலாயர் சிவாஜியின் மகன் சாம்பாஜியைப் பிடித்து கொடூரமுறையில் கொன்றனர். அவன் மனைவி ஏசுபாயையும் மகன் சாகுவையும் சிறையாக்கிவிட்டனர். விளைவாக மகாராஷ்டிரத்தில் பெருங் குழப்பம் நிலவியது. சிவாஜியின் இரண்டாவது மகன் ராஜாராமுக்கு அப்போது பத்தொன்பது வயது. அவன் நல்லவன்; ஆனல் திறமை போதாதவன். மனித இயல்பைச் சரிவர எடைபோடக் கூடாதவன். பெரும்பாலும் உதவாக்கரைகள்தான் அவனைச் சுற்றிவந்தார்கள். அவன் ரேய்க் காட்டிலிருந்து தெற்கே செஞ்சிக்கு ஓடினன். மகாராஷ்டிரத்திலேயே தங்கிய சிலர் சிவாஜியின் ராச்சியத்தைக் காப்பாற்றி

வைக்க அரும்பாடுபட்டும் தீரமாகப் போராடிக்கொண்டுமிருந்தனர். இந்த வரலாற்று நிகழ்ச்சிகள்மீது நாவல் எழுதப்பட்டுள்ளது.

மற்றைய நாவல்களைவிடவும் இந்த நாவலில் வரலாற்று மனிதர்களும் வரலாற்று நிகழ்ச்சிகளும் அதிகமாக உண்டு. மராட்டியருக்கு அது சோதனைக்காலம். சாம்பாஜியின் கொலைத் தண்டனை, அவனது குடும்பத்தினர் சிறைபடல் ஆகியவற்றை அவர்கள் தைரியமாகவே எதிர்கொண்டனர். பல பெண்கள் பர்தாவைத் துறந்து வெளியில் வந்து நாட்டுக்காக உழைத்தனர். இம்மாதிரி வியக்கத்தக்க, நாடகக் கூறுகள்கொண்ட பல பரபரப்பான உண்மை நிகழ்ச்சிகள் அப்போது நடந்தன. ஆசிரியர் அவற்றை முழுமையாகப் பயன்படுத்தியிருக்கலாம். ஆனால் செய்யவில்லை.

நாவலில் மூன்று வரலாற்று நிகழ்ச்சிகள் கையாளப்படுகின்றன: (1) சாம்பாஜி பிடிபட்டு வன்கொலையுண்டு வீரமரணம் எய்துதல். (2) ரேய்க்காடு முற்றுகையாகிப் பிடிபடுதல். (3) ராஜாராம் செஞ்சிக்கு ஓடி அங்கிருந்தவாறே ராச்சியத்தைக் காப்பாற்ற முயற்சிகள் செய்தல். இந்த நிகழ்ச்சிகள் தனித்தனியே நல்ல முறையில் விவரிக்கப்படுகின்றன. ஆனால் அவற்றை ஒன்றுடன் ஒன்று பொருத்துதல் திறம்படச் செய்யப்படவில்லை. அவை ஒட்டாமல் தனித்தே நிற்பதால், நாவலில் ஒரு முழுமையான சுவை கிட்டாமல் போகிறது.

சாம்பாஜி, ராஜாராம் இருவரது குணசித்திரங்களும் நன்கு தீட்டப்பட்டுள்ளன. சாம்பாஜியின் மான உணர்வும், உற்சாகமும், அவன் மரணத்தைத் தழுவிய பான்மையும் நுணுக்கமாகக் கூறப்படுகின்றன. அதுபோலவே ராஜாராமின் மனக்குழப்பங்களும் விவரமாகப் படம்போலக் காட்டப்படுகின்றன. நாவலின் நல்ல அம்சங்களாக இவற்றை மாத்திரமே சொல்லமுடிகிறது.

மத்தியாரை (1906–1907) ஹரிபாவரது ஆறுவது நாவல். பதினெட்டாம் நூற்றாண்டின் கடைசி தசாப்தங்களின் வரலாற்றை அடிப்படையாகக்கொண்டது. இக்காலம் பேஷ்வாக்கள் வரலாற்றில் ஒரு நெருக்கடியான காலகட்டமாகும். 1773-ல் பேஷ்வா நாராயணராவ் கொலையுண்டதைத் தொடர்ந்து மராத்தியர்கள் அனைவரும் ஒருங்கிணைந்து செயலாற்றி 1795-ல் கார்தா போரில் நிசாமைத் தோற்கடித்தது வரை பல நிகழ்ச்சிகள் அப்போது நடந்தன. நாவல் முடிவுறாதவொன்று. இதன் தலைப்பும் விளங்கவில்லை. மத்தியான வேளையில் சூரியன் உச்சத்தை அடைவதைப்போல, மேற்குறிப்பிட்ட காலத்தில் பேஷ்வா ஆட்சியின் மகிமை உச்சத்திலிருந்தது என்பதாலா அல்லது 1795-ல் நிசாமைத்

தோற்கடித்தது உச்சவரம்பு என்பதாலா என்கிற கேள்விகள் எழக் கூடும். கார்தா வெற்றியுடன் நாவல் நின்றுவிடுகிறது. எனவே ஆசிரியர் என்ன நினைத்து அத்தலைப்பைச் சூட்டினார் எனச் சொல்ல முடியவில்லை. நாவலின் கடைசி அத்தியாயம் முடிவுற்றிருக்கிறதா இல்லையா என்பதுங்கூடத் தெளிவின்றி இருக்கின்றது.

நாவல் மூன்று பாகங்களாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஒரே நிகழ்ச்சியின் மூன்று பகுப்புக்கள் தாம் அவை. இக்காலத்தைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் ஏராளமாகக் கிடைத்தன. ஆனால் நாவல் சுவையாக இல்லை. சின்னச் சம்பவங்களுக்கும் சின்னப் பாத்திரங்களுக்கும் தேவைக்கு மேற்பட்ட முக்கியத்துவம் கொடுத்துவிடும் ஹரிபாவரது வழக்கமான குறைபாடு இந்த நாவலில் அதிகமாகக் காணப்படுகின்றது. அந்தச் சின்ன விஷயங் களையும் சுவைபடக் கையாண்டிருக்கின்றார் என்று வேண்டுமானால் சொல்லலாம்.

கார்தாப் போரின் பின்னணியைப் பற்றிச் சொல்வது இங்கு பொருத்தமே. 1761-ல் பானிப்பட்டில் மராத்தியர் தோல்வி யடைந்தனர். அது அவர்களுக்கு, குறிப்பாகப் பேஷ்வாவுக்கு பெருத்த இடியாகும். நானாசாகிப்புக்குப் பின்பு 1761-ல் முதலாம் மாதவராவ் பட்டமேற்றான். திடச்சித்தமுள்ள அவனது நடவடிக் கைகளால் நாட்டில் ஒழுங்கு ஏற்பட்டது. 1772-ல் அவன் சயரோகத்தில் இறந்தான். அவன் தம்பி நாராயணராவ் பட்டத் துக்கு வந்து அடுத்த ஆண்டிலேயே கொலையுண்டு போனான். அவன் மனைவி கங்காபாய் கர்ப்பமாக இருந்தாள். ஆண் குழந்தை பிறந் தால் பேஷ்வாக்காடியின் வாரிசு அவனே. நாராயணராவின் மாமன் ரகுநாதராவ் பேஷ்வாகாடியைப் பெற சூழ்ச்சிகள் செய்து வந் தான். மற்றப் பெருந்தலைகள் அவனை எதிர்த்தனர். பின் தங்க ளுக்குள் சண்டையிட்டனர். இதற்கிடையில் கங்காபாய்க்கு ஆண் குழந்தை பிறக்கவே அவனைப் பேஷ்வா எனப் பிரகடனம் செய் தனர். அவன்தான் மாதவராவ் II. ஆனால் அதிகாரம் முழுவதும் நானா பதனவிஸ் கையிலிருந்தது. கார்தா வெற்றி அவன் காலத் தில் தான் கிட்டியது. பதனவிஸின் ஆட்சிக் காலத்தின் உச்சகட்ட மென அவ்வெற்றியைச் சொல்லலாம்.

ஆக மொத்தம் மராத்திய வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு அவர் ஆறு நாவல்கள் எழுதினார். அவற்றில் இரண்டு நல்ல இலக்கிய வெற்றிகளாக அமைந்துவிட்டன. உஷாக்காலையும், காத் ஆலா பான் சிங்க கேலாவையும் இன்றும் இளைஞரும் முதியோரும் விரும்பிப் படித்தும் ரசித்தும் வருகின்றனர்.

இந்திய வரலாற்றினடிப்படையில் ஹரிபாவர் நான்கு நாவல் கள் எழுதினார். பல்வேறு காலங்களில் நடந்த வேறு வேறு நிகழ்ச்சி

களை மையமாகக் கொண்டவை அவை. எனவே அவற்றை அவர் எழுதிய காலவரிசையிலேயே பார்த்துவிடுவது நல்லது. அவை ரூபநகர்ச்சி ராஜகன்யா *(1900–1902)*, சந்திரகுப்தா *(1902–1904)*, காலகூப் *(1909–1911)* *(முடிவுருதது)* வஜ்ரகாட் *(1913–1915)* ஆகும்.

ரூபநகர்ச்சி ராஜகன்யாவானது ரூபநகரத்தின்மீது அவுரங்கசீப் படையெடுத்த நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. தோட் (Tod) எழுதிய ராஜஸ்தான் வரலாற்றிலிருந்து ஹரிபாவர் ஆதார விவரங்களை எடுத்திருக்கிறார். நாவலின் பெரும்பாகம் அவுரங்கசீப்பின் அந்தப்புரத்தில் நடக்கின்ற சூழ்ச்சிகளைப் பற்றியிருக்கிறது. அவை குறித்த ஆதார விவரங்களை ஆசிரியர் மனுச்சி எழுதிய வரலாற்று நூலினின்று எடுத்திருக்கிறார். மனுச்சி என்ற இத்தாலியப் பயணி மொகலாய ஆட்சியின்போது இந்தியா வந்திருந்தார். நாவலின் முக்கிய பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் உண்மையானவை. ஏனையவை கற்பனை.

ரூபநகரின் அரசர் விஜயசிங். அவரது மகளான இளவரசி ரூபமதி மிகவும் அழகானவள். திருமண வயதை எட்டியிருக்கிறாள். தாயில்லாத அவளை தந்தை எப்போதும் தன்னருகிலேயே வைத்துக்கொண்டிருக்கின்றார். தர்பாருக்கும் வேட்டைக்கும் கூட அழைத்துச்செல்லுகின்றார். ரூபநகரம் உதயபுரி சமஸ்தானத்துக்குக் கப்பம் கட்டி வருகின்றது. விஜயசிங்கின் மனைவி உதயபுரி அரச வம்சத்தைச் சேர்ந்தவள். ஆனால் அவன் ஜோட்பூரைச் சேர்ந்தவன். உதயபுரியின் அரசன் ராஜாசிங் இராஜபுத்திரன். இராஜ புத்திரர்க்குரித்தான வீரதீரங்கள் படைத்தவன்; அழகன்; இளைஞன். விஜயசிங்கையும் ரூபமதியையும் டெல்லிக்குக் கொணரும்படியாக, அவுரங்கசீப் தன் தளபதிகளில் ஒருவனை சதத்கானுக்கு உத்தரவிட்டு அனுப்புகிறான். அவர்கள் எதிர்த்தால் ரூபநகரக் கோட்டையை அழித்து விடும்படியாகவும் அவனுக்குப் பணிக்கப்படுகின்றது. இதற்குக் காரணம் அரசியல் அல்லது சமயம் அப்படியெல்லாம் எதுவுமில்லை. அது ஒரு சின்ன சமாச்சாரம் என்பதாகத்தான் நாவல் சொல்கிறது. ரூபமதி எழுதிய கடிதம் ஒன்றை அவுரங்கசீப்பின் ஆட்கள் மறித்து எடுத்தனர். அதில் கண்ட கூற்று ஒன்று அவுரங்க சீப்பின் விசேஷப் பிரிய மனைவியான உதயபுரி பேகத்தை அவமானப்படுத்துவதாக அவள் நினைத்து, கணவனிடம் சொல்ல, அவளைச் சமாதானப்படுத்தும் நோக்கத்துடன் அவுரங்கசீப் அப்படிக் கட்டளையிட்டான் என்று கதை போகிறது.

தலைப்பு ரூபநகரத்து இளவரசி என்றிருந்தாலும் அவள் நாவலில் மூன்று நான்கு தடவைகள்தான் வருகிறாள். பிரமாத

5

மாக அவன் எதையும் செய்யவுமில்லை. நாவலின் பெரும்பகுதி சக்கரவர்த்தியின் அந்தப்புரத்தில் நடக்கும் போட்டிகள் மற்றும் சூழ்ச்சிகளில் ஆழ்ந்து போகிறது. நல்லவரும் தீயவருமான பல்வேறு துணைப் பாத்திரங்களின் செயல்களும் ஆற்றல்களும், அவர்கள் சங்கடங்களில் மாட்டுவதும் விடுபடுவதும் விவரிக்கப்படு கின்றன.

விஜயசிங்கின் உதவிக்கு மற்ற இராஜபுத்திரர் விரைவார்கள் என்பது சதத்கானுக்குத் தெரிகிறது. ரூபநகரம் பலமான கோட்டை. எனவே அவன் மேற்கொண்டு படைகள் கேட்டு டெல்லிக்குக் கடிதம் அனுப்புகிறான். அவுரங்கசீப் தானே ஒரு கணிசமான படையுடன் தெற்கே கிளம்புகிறான். அது ஆபு மலையை அடைந்தவுடன் ஒரு ஒடுங்கிய கணவாய்க்குள் இட்டுச் செல்லப் பட்டுத் தோற்கடிக்கப்படுகிறது.

இதற்கிடையில் சதத்கான் ரூபநகர்க் கோட்டையை முற்றுகை யிட்டிருந்தான். ரூபமதி உதவி கேட்டு ராஜசிங்குக்குக் கடிதம் எழுதுகிறாள். தன்னை விடுவித்துக் கோட்டையையும் அவன் காப் பாற்றும் பட்சத்தில் தான் அவனுக்கே மாலையிடுவதாக அதில் அறிவிக்கிறாள். ராஜசிங் ரூபநகருக்கு விரைகிறான். சதக்கானைத் தோற்கடித்து விஜயசிங்கையும் ரூபமதியையும் விடுவிக்கிறான். அவுரங்கசீப்புக்கு இரட்டிப்புத் தோல்வி. ராஜசிங் விதித்த நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு உடன்படிக்கை செய்துகொள்ள வேண்டி வருகிறது.

இத்துடன் பிணைக்கப்பட்ட வேறொரு கதையும் நாவலில் உண்டு. ஜோட்பூர் அரசன் ஜஸ்வந்தசிங்கை காபூல் படை யெடுப்பை நடத்துமாறு அவுரங்கசீப் அங்கு அனுப்பிவைக்கிறான். ஜஸ்வந்தசிங்கின் மகன் சக்கரவர்த்தியின் அவையில் விடப்பட்டிருக் கிறான். நஞ்சு ஆடைகளை அணிவித்து அவுரங்கசீப் அவனைக் கொல்கிறான். செய்தி தெரிந்ததும் ஜஸ்வந்தசிங் அதிர்ச்சியில் இறக்கிறான். கர்ப்பமாக இருந்த அவன் மனைவி சந்திராவதி, ஆண் மகவு பெற்று அதற்கு அஜித்சிங் என்று பேரிடுகிறாள். தாயையும் மகனையும் டெல்லிக்குக் கொணருமாறு அவுரங்கசீப் நயனபால் என்பவனுக்குக் கட்டளையிடுகிறான். நயனபால் ஜோட்பூர் அரச குடும்பத்தைச் சேர்ந்தவன்; மொகலாய அரசவையில் பணிபுரி பவன். அவன் வருவதற்குள் துர்காதாஸ், இந்திரா என்ற இருவரின் உதவியால் சந்திராவதி குழந்தையுடன் இரகசியமாக இராஜபுதனம் சென்றுவிடுகிறாள். கோபமுற்ற நயனபால் துர்காதாஸையும் இந்திராவையும் சிறையாக்கி டெல்லிக்குக் கொணர்கிறான். ஆனால் அவர்கள் இருவரின் வீரம், விசுவாசம், சாகஸங்கள் அவனைக் கவர்

கின்றன. இந்திராவின் அழகும் அவனைக் கவர்வதால் அவன் அவள்மீது காதல் கொள்ளுகிறுன்.

அவனுக்கு இடப்பட்ட பணியை நயனபால் செய்யவில்லையாத லால் அவுரங்கசீப் அவன்மீது கோபம் கொள்கிறுன். அவனை ஏசுகிறுன். துர்காதாஸை சிறைக்கும், இந்திராவை அந்தப்புரத்துக் கும் அனுப்புகிறுன். மூவரும் இராஜபுதனம் ஓடி இராஜபுத்திரரின் விமோசனத்திற்காக உழைப்பது எனத் திட்டமிடுகின்றனர்.

மூவரும் டெல்லியில் செய்த சாகஸங்கள் மற்றும் நடவடிக்கை கள், பின்னர் தப்பித்து இராஜபுதனத்துக்கு ஓடியது ஆகியவற்றை நாவல் மிகுதியாகச் சொல்லிக்கொண்டு போகிறது. ஆபு மலையில் அவுரங்கசீப்பின் படைகளை கணவாயிடுக்கில் இட்டுச் சென்று மடக் கியது நயனபால்தான். இப்படியான சாகஸச் செயல்களால்தான் நாவலில் சுவாரசியம் உண்டாகிறது.

நாவலின் நாயகி ரூபமதி என்ருலும் உதயபுரி பேகமும் இந்திராவும்தான் வாசகர்களின் மனங்களை அதிகமாகக் கவர்கிறுர் கள். அவர்களது குண விசேஷங்கள் பன்முகப் பட்டைகளுடன் தீட்டப் பெற்றிருக்கின்றன. நாவலில் செயல் செறிவு இருக் கின்றது, அடுத்து என்ன என்ற ஆவலைத் தூண்டும் முறையிலும் அமைக்கப்பட்டிருக்கிறது. எனவே மொத்தத்தில் சுவையான வாசிப்பை அளிக்கக்கூடியது.

அடுத்து சந்திரகுப்தா (1902-1904). தலைப்பின்படி நாவல் சந்திரகுப்தனைப் பற்றியது. ஆனுல் சாணக்கியன் என்ற தலைப்பு நாவலுக்கு மேலும் பொருத்தமாக இருந்திருக்கும். சாணக்கியன் நந்த அரசனையும் அவனது மகன்களையும் மக்கியவெல்லிய தந்திரங் களுடன் கொன்று சந்திரகுப்தனை மகத அரியணைமீது ஏற்றுவது பற்றியது நாவல். சந்திரகுப்தனின் தாய் முராவும் நாவலில் மிக முக்கியமான ஒரு பாத்திரமாக வருகின்றுள்.

நாவலுக்குத் தாம் பயன்படுத்திய ஆதாரங்களை முன்னுரை யில் ஹரிபாவர் குறிப்பிடுகிறுர்: (1) நந்த அரசர்களையும் சந்திர குப்தனையும் பற்றிய குறிப்புக்கள் கொண்ட புராணங்கள். (2) இந்தியா வந்த கிரேக்கர்கள் பாடலிபுத்திராவிலும் (பாட்னு) மகதராச்சியத்திலும் கண்ட நிலைமையைக் குறித்து எழுதி வைத்த அறிக்கைகள். (3) முத்ரராக்ஷஸா என்ற சமஸ்கிருத நாடகம். சந்திரகுப்தன் கிரேக்கர்களை முறியடித்தது அவன் பாடலிபுத்திரத் தில் அரியணை ஏறியதற்கு முன்பா அல்லது பின்பா என்பதை அறுதி யிட்டுச் சொல்ல வரலாற்று ஆதாரம் எதுவும் இல்லை. ஹரிபாவர் அந்நிகழ்ச்சியை சந்திரகுப்தனின் முடிசூட்டலுக்குப் பின்பு வைத் திருக்கிறுர். ஏனெனில் அது அவரது நாவல் போக்குக்குச் சவுகரியமாயிருக்கிறது.

சாணக்கியனின் இயற்பெயர் விஷ்ணுகுப்தன். பஞ்சாபில் தக்ஷசீலத்தில் வசித்து வந்தான். பஞ்சாபில் அப்போது கிரேக்கர்கள் புகுந்து மக்களுக்கு உபத்திரவங்கள் விளைவித்து வந்தார்கள். மாடு கன்றுகளையும் பெண்களையும் கடத்திப் பல இடையூறுகள் செய்தனர். விஷ்ணுகுப்தன் நல்ல புலமை வாய்ந்த அந்தணன், அத்துடன் போர்க் கலையிலும் நிபுணன்; மெல்லுணர்வுகள் கொண்டவன்; அகம்பாவி; தந்திரசாலி. மகதராச்சியம் அப்போது ஒரு வல்லரசாக இருந்தது. எனவே கிரேக்கர்களைத் துரத்துவதற்கு மகத அரசனின் உதவியை நாடத் தீர்மானித்தான் விஷ்ணுகுப்தன். மகதராச்சியத்தின் தலைநகரமான பாடலிபுரம் சென்று, அரசன் தனானந்தனைச் சந்திக்கத் திட்டமிட்டான். தனனந்தன் நந்த வம்சத்தினன்.

அரசவைக்குச் சென்ற விஷ்ணுகுப்தனை தனனந்தன் நல்லபடியாக வரவேற்றான். ஆனால் அவையின் அந்தணர்கள் அவன்மேல் பொறாமையுற்று, அவனை கிரேக்க ஒற்றன், உளவறிய வந்தவன் என்று கூறிவைத்தனர். விஷ்ணுகுப்தன் கடுங்கோபங்கொண்டான். உடனே எழுந்து ஒரு சபதம் செய்தான்: நந்தர்களை ஒழித்துவிட்டு, அந்த இடத்தில் தானே தெரிந்தெடுத்த ஒருவனை அரியணையேற்றி அவனுதவியால் கிரேக்கர்களை விரட்டுகிறவரையில் தனக்கு ஓய்வு இல்லை என்று அறைகூவி அந்த க்ஷணமே அவையைவிட்டு வெளியேறினான்.

வெளியேறியவன் தக்ஷசீலம் திரும்பாமல் இமயமலையை நோக்கி வடக்கே நடந்தான். வழியில் விளையாடிக்கொண்டிருந்த பையன்கள் சிலரைக் கண்டான். அவர்களில் ஒருவன் பிற பையன்களினின்று முற்றிலும் மாறுபட்டிருந்ததைக் கவனித்தான். அவனது பார்வையும் தோற்றமும், அவன் அவர்களைச் சேர்ந்தவனாக இருக்க முடியாது என்பதை அவனுக்குக் காட்டின. விசாரித்ததில் அவன் ஊகம் சரியாகவே இருந்தது. அவர்களைச் சேர்ந்த ஒரு யாதவனுடன் அவன் வசித்து வருவதாகவும், பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு வெண்துகிலில் சுற்றப்பட்டு காட்டில் கிடந்து கண்டெடுக்கப்பட்டதாகவும் அறிந்தான். நிலவு பிரகாசமாக எரிந்த நாளொன்றில் அவன் கிடைத்ததால் அவனுக்குச் சந்திரகுப்தன் என்று பெயரிட்டதாகச் சொல்லி, அச்சமயத்தில் குழந்தையின் கையில் கிடந்த காப்பு ஒன்றையும் யாதவன் கொணர்ந்து காண்பித்தான். அதில் பொறிக்கப்பட்டிருந்த நந்தவம்சத்து அரச முத்திரையைக் கண்டதும் விஷ்ணுகுப்தனுக்கு மகிழ்ச்சி கரைபுரண்டது. ஒரு சிறப்பான வேலைக்குத்தான் பையனைப் பயிற்றுவிக்க விரும்புவதால் அவனைத் தன்னுடன் அழைத்துச் செல்ல அனுமதி வாங்கி பையனுடன் புறப்பட்டான்.

இமயமலைச் சாரலுக்கு அவனை அழைத்துச் சென்று, பிற மலைச் சாதி இளைஞர்களையும் சேர்த்துக்கொண்டு, போர்க்கலைகளைப் பயிற்றுவித்தான். விஷ்ணுகுப்தன் தன் பெயரைச் சாணக்கியன் என்று மாற்றினான். சந்திரகுப்தன் சில ஆண்டுகளிலே சகலவித ராணுவ வித்தைகளையும் கற்றுத் தேறி நிபுணனானான். அதைக் கண்ட சாணக்கியன், அவனைப் பாடலிபுரத்துக்குக் கூட்டிச் செல்லும் வேளை நெருங்கி வருவதை உணர்ந்தான். எனவே முதலில் தான் சென்று நிலவரங்களைக் கண்டறிந்துவரப் பாடலிபுரம் புறப்பட்டுப் போனான்.

அவன் போய்ச் சேர்ந்த வேளையில் பாடலிபுரம் ஆரவாரமாயிருந்தது. காரணம் தனனந்தனின் மூத்த மகன் சுமாலியன் அப்போதுதான் பட்டத்திளவரசனாகியிருந்தான். சடங்குகள் நிறைவேறி முடிந்திருந்தன. அத்துடன் அவனுக்குத் திருமணமும் நடத்தப்பட்டிருந்தது. அண்மையில் நடந்த ஒரு போரில் பரிசாகக் கிடைத்த ஒரு பெண்ணுடன் அது விமரிசையாக நடந்திருந்தது. விழாக் காரணமாக தனனந்தன் சிறைக் கைதிகள் பலரை விடுவித்தான். பதினாறு வருடங்களுக்குமுன் சிறையிலிடப்பட்ட முராவும் அவர்களில் ஒருத்தி.

முரா ஒரு கிராட அரசனின் மகள். தனனந்தனின் தளகர்த்தன் பாகுராயணன் அவளை ஒரு போரிலே சிறைபிடித்து அரசனுக்குப் பரிசாக அளித்தான். தனனந்தன் அவளை கந்தர்வ முறைப்படி மணந்தான். அவள் கருவுற்றாள். அரசனின் மற்ற மனைவியருக்குக் குழந்தைகள் இல்லை. முராவுக்கு ஆண் குழந்தை பிறந்தால் அவன் பட்டத்திளவரசனாகப் பிரகடனம் பண்ணப்படலாம். அப்படி நினைத்துப் பொறாமையுற்ற அவர்கள் புரளிகள் கிளப்பலாயினர். முரா அரசவம்சத்தில் வந்தவள் அல்ல; கிராட மன்னனுக்குச் சூத்திரப் பெண் மூலம் பிறந்தவள் என்றனர். மேலும் இப்போது வயிற்றிலிருக்கும் குழந்தை தனனந்தனது என்பது நிச்சயமல்ல என்றும் பரப்பினார்கள். திடச்சித்தமற்ற அரசன் முராவைச் சிறையில் போட்டதுடன், குழந்தை எப்பால் ஆயினும் கொல்லப்படல் வேண்டும் என்றும் உத்தரவு போட்டான். ஆண் குழந்தை பிறந்தது. கொலை உத்தரவை மேற்கொண்ட பணியாட்கள், குழந்தையைக் கொல்ல மனம் வராமல் காட்டில் விட்டுவிட்டுப் போயினர்.

பாடலிபுத்திரம் வந்து சேர்ந்த சாணக்கியன் அப்போது விடுதலையாகியிருந்த முராவின் கதையைக் கேள்விப்பட்டான். முராவின் மகனே சந்திரகுப்தன் என்பதில் அவனுக்குச் சந்தேகமேயில்லை. சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட முரா சிறிதேனும் மகிழ்ச்சியாயில்லை. மிகுந்த மனக் கசப்புடனிருந்தாள். அரசன்

தனக்கு அநீதியிழைத்தான்; அவனைப் பழிவாங்கவேண்டும் என்ற எண்ணம் அவள் மனதில் மேலிட்டிருந்தது. தனது விசுவாசமான பணிப் பெண்ணிடமும் அந்த நோக்கத்தை அவள் வெளியிட்டாள்.

முரா தந்திரசாலி. முதலில் அரசனுக்குக் கடிதம் எழுதி அவனைத் தன் அரண்மனைக்கு அழைத்தாள். அழைப்பை ஏற்று வந்த அரசனிடம் இனிமையாகப் பேசினாள். முப்பது வயதில் மிக அழகாக இருந்த அவள் அதை நன்கு பயன்படுத்தி அரசன் மனதைக் கவர்ந்துகொண்டாள்.

அவள் அழகிலும் பேச்சிலும் மயங்கிய அரசன், தான் முன்னாளில் அவளுக்குச் செய்த கொடுமைக்காக மனம் வருந்தினான். இனி அவளை விட்டு விலகுவதில்லையென்றும் அவளது அரண்மனையிலேயே தங்கப்போவதாகவும் பிரகடனம் பண்ணினான். ஏனைய அரசிகளுக்குக் கோபம் வந்தது. ஆனால் முரா அரசனைத் தன்னிடமே வைத்துக்கொள்ளுவதில் வெற்றிகண்டாள். பிற அரசிகளுக்கு விரோதமாகப் பேசி அரசனின் மனதை மாற்றினாள்.

சாணக்கியன் இந்த விவரங்கள் அனைத்தையும் கேள்விப் பட்டான். முரா அரசனைப் பழி வாங்கத் திட்டமிடுகிறாள் என் பதையும் அறிந்துகொண்டான். நாட்டு மக்களின் மனநிலையையும் கவனித்து வந்தான். மேலோட்டமாக அமைதி நிலவினாலும் அதிருப்தி புரையோடிக்கொண்டிருந்ததை அவன் உணர முடிந்தது. மந்திரிகளில் பெரும்பாலோருக்கு அரசனின் போக்கு பிடிக்க வில்லை; சேனைத் 'தளகர்த்தர்', முதல் மந்திரி ராக்ஷஸன் ஆகிய இருவர் மாத்திரமே அவனுக்கு இன்னும் விசுவாசமாக இருந்து வந்தனர்.

இதையெல்லாம் கவனித்த சாணக்கியனுக்குத் தன் திட்டம் வெற்றியுறும் என்கிற நம்பிக்கை உண்டாயிற்று. எனவே சந்திர குப்தனை அழைத்து வந்துவிடவேண்டுமெனத் தீர்மானித்துக் கொண்டான். முதலில் முராவைச் சந்தித்துப் பேச ஏற்பாடு செய்துகொண்டு அவளிடம் சென்றான். தான் அவளது தாய் மாயா தேவியிடமிருந்தும் உடன் பிறந்தான் பிரத்யும்னதேவியிட மிருந்தும் வாழ்த்துக்கள் கொண்டுவந்திருப்பதாகத் தெரிவித்தான். பிரத்யும்னதேவ் தனது பதினாறு வயது மகன் சந்திரகுப்தனை பாடலிபுரத்துக்கு அனுப்ப விரும்புவதாகவும் அவன் முராவுடன் தங்கினால் உலக அறிவு பெற்றுக்கொள்ள வாய்ப்பாக இருக்கும் என்று நினைப்பதாகவும் சொன்னான். அவள் சம்மதித்து, சந்திர குப்தனைத் தன்னிடம் கொணர்ந்து விடும்படியாக அவனிடம் கூறினாள்.

சாணக்கியன் தனது இமயமலை ஆசிரமத்துக்குச் சென்று, சந்திரகுப்தனை அழைத்துக்கொண்டு வந்து முராவிடம் விட்டான்.

பின்பு சாணக்கியன் தனது திட்டங்களைச் செயலாற்றத் தொடங்கினான். அவனது இந்த மக்கியவெல்லிய தந்திரங்களைத்தான் நாவல் அதிகமாக ஆக்கிரமிக்கிறது. பாகுராயணனை தன்மீது நம்பிக்கை கொள்ளச் செய்தான்; ராக்ஷஸனின் மெய்க்காப்பாளனை இரணியகுப்தனைத் தன் பக்கம் இழுத்தான். முராவின் பணிப் பெண் சுமதிகாவைத் தன்வசமாக்கினான். முராவை அடிக்கடி பார்த்துப் பேசினான். அரசனை ஒழிக்கும் அவளது திட்டத்தை ஊக்குவித்தான்.

அப்படி ஒரு தடவை பார்த்தபோது சந்திரகுப்தன் கையில் கிடந்தெடுத்திருந்த காப்பை அவளிடம் காட்டினான். அதன் அரச முத்திரையைக் கண்ட முராவுக்கு அவன் தன் மகனே என்பது தெரிந்தது. அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு வரம்பு கிடையாது.

தனனந்தன் இப்போது தனது அரச கடமைகளைச் செய்வதை அறவே நிறுத்தியிருந்தான். அரசவைக்குப் போகிறதே இல்லை. ராக்ஷசனுக்கும் அவன்மீது வெறுப்புத் தட்டிவிட்டது. முரா அவனை அரசவைக்கு அனுப்ப முயன்று ஓரளவு வெற்றி கண்டாள். ஒருசில மணி நேரம் அவைக்குப் போக அவன் சம்மதித்தான். அதற்கென ஒரு நாள் குறிக்கப்பட்டது. அந்நாளை ஒரு விழாவாகவே கொண்டாடிவிட ஏற்பாடாயிற்று.

அந்த நாளிலே அரசனை ஒழித்துவிடுவது என்று சாணக்கியன் தீர்மானித்தான். அரண்மனை வாயிலில் ஒரு பெரும் பள்ளம் தோண்ட ஏற்பாடு செய்தான். மேலே மாத்திரம் அதைப் பாதை போல் போடச் செய்தான். பார்ப்பதற்குக் கெட்டியான தளம் போலவே தோன்றச் செய்தான். அவனது திட்டப்படி அரசனின் யானை பாதையை மிதித்தவுடன் அது நொறுங்கும். உடனே அரசனும் அவனுடன் வருகின்ற அவன் குமாரரும் கீழே பள்ளத்தினுள் விழுவார்கள். அங்கு மறைந்து காத்திருக்கும் ஆட்கள் அவர்களைக் கொன்றுவிடவேண்டியது; இதுதான் திட்டம்.

முராவுக்கு இது தெரியும். ஆனால் குறிப்பிட்ட நாள் நெருங்க நெருங்க அவள் மனம் மாறத் தொடங்கியது. அந்த நாள் வந்தபோது மன அமைதியை முற்றிலும் இழந்தாள். அவன் பள்ளத்தில் விழுந்து மாண்டு போகப்போவதை நினைத்து மனம் பதறினாள். அரசவைக்குப் போகவேண்டாமென அரசனைத் தடுக்கத் தொடங்கினாள். கெஞ்சினாள். ஆனால் அரசனோ அன்று போயே விடுவது என்று தீர்மானமாக இருந்து, அப்படியே கிளம்பியும் விட்டான். முராவின் மனம் கணவனுக்கும் மகனுக்குமிடையே கிடந்து ஊசலாடியது. அவள் மனப் போராட்டம் தீவிரமாகியது.

முடிவில் அரசனைக் காப்பாற்றிவிட எண்ணிப் பல்லக்குக் கொணர உத்தரவிட்டாள். ஏறிக்கொண்டு அரசனைப் பின்தொடர்ந்தாள். ஆனால் காலம் கடந்துவிட்டது.

அரசனும் அவன் மகன்களும் குழிக்குள் விழுந்துவிட்டிருந்தனர். அங்கே சாணக்கியன் நிறுத்தி வைத்திருந்த பீலர்கள் அவர்களைக் கொன்றனர். குழியருகே ஓடி வந்த முராவை சாணக்கியன் தடுத்து நிறுத்தினான், ஆனால் அவள் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் குழிக்குள் பாய்ந்தாள். கொல்லப்பட்டாள்.

சாணக்கியன் சந்திரகுப்தனை அரசனாக அரியணையேற்றினான். முதன் மந்திரியாகத் தொடர்ந்து செயலாற்றும்படி ராக்ஷசனைக் கேட்டுக்கொண்டான். ஆனால் அந்த இராஜ விசுவாசி, நந்த வம்சத்தினருக்கன்றித் தான் பிறருக்குப் பணி புரிவதில்லை எனக் கூறிவிட்டான். சந்திரகுப்தனின் முத்திரைக் காப்பைக் கொணர்ந்து காட்டிய பின்னரே அவன் இணங்கினான். ஆக சாணக்கியன் தான் எண்ணிய கருமத்தை முடித்தான்.

கிடைத்த சொற்பமான சரித்திரச் சான்றுகளை வைத்துக் கொண்டு ஹரிபாவர் சுவையான நாவலொன்று படைத்து விட்டார். பொருளுக்கும் பாத்திரங்களுக்கும் ஏற்றதொரு நடையைக் கையாண்டிருக்கிறார். சாணக்கியனின் சூழ்ச்சிகள் நாவலின் மையமாக அமைகின்றன. ஆனால் அவன் நினைத்தமாத்திரத்தில் எல்லோரும் அவன் பக்கம் வந்து சேர்ந்துவிடுவதாகக் காட்டியிருப்பதை நம்ப சற்று சிரமமாக இருக்கின்றது. இந்த நாவலின் பெருஞ் சிறப்பு முராவின் குணச்சித்திரமாகும். அவளது குண விசேஷங்கள் சிக்கலாகத் தோன்றுபவை. அவள் கசப்பும், கர்வமும், அரசனைக் கவர அவள் செய்கின்ற சூதும் சாகஸமும் முடிவில் அவளது மனப் போராட்டமும் நேர்த்தியாகக் கொணரப்பட்டிருக்கின்றன. அது போலவே ராக்ஷசனின் ராஜவிசுவாசம் அருமையாகக் கையாளப் பட்ட ஒன்று. அவர்களது உறுதியான இயல்பைக் காட்டுவதால் சாணக்கியனுக்கும் ஒரு பாடம் கற்பிக்கப்படுகின்றது என்றும் கொள்ளலாம். ஏனெனில் ஒருவகையில் அவன் தான் நினைத்ததைச் சாதித்துக்கொண்டாலும், விசுவாசமும் உறுதியும் கொண்டவர்களிடத்தில் தனது சூழ்ச்சிகள் தான் எண்ணியபடியே பலிப்பதில்லை என்பதையும் கண்டுகொண்டான். நாவலின் தலைப்பு சந்திரகுப்தன் என்றாலும் அவனொரு பொம்மை நாயகனே. பிரமாதமான குண வியல்போ அல்லது செயலாற்றலோ உள்ளவனாக அவன் காண் பிக்கப்படவில்லை.

குறைகளிருப்பினும் செய்திறன் கொண்ட நாவல்களில் இதுவுமொன்று என்பதை மறுக்கவியலாது.

காலக்கூட் (1909—1911) ஒரு முடிவுபெருத நாவல். முதல் பாகம் முடிவுற்றிருக்கிறது. இரண்டாம் பாகத்தில் முதல் அத்தியாயம் மட்டிலுமே இருக்கிறது. பிருதிவிராஜ் சாகன், ஜெயச்சந்த ராதோட் ஆகியோருடைய இளம் பருவ வாழ்க்கையின் சில நிகழ்ச்சிகள் வர்ணிக்கப்படுகின்றன. மேற்கொண்டு எந்தெந்த சரித்திர நிகழ்ச்சிகளைத் தெரிந்துகொண்டு அவற்றை எப்படியெப்படிப் பயன்படுத்திக் கதையை வளர்த்தியிருப்பார் என்பதையெல்லாம், அந்த அரைகுறை நாவலை வைத்துக்கொண்டு, ஒன்றும் சொல்வதற்கில்லை.

அனங்கபால் என்பவன் ஹஸ்திஞபுரம்—(டெல்லி) அரசன். அவனுக்கு விமலா, கமலா என்று இரு பெண் மக்கள். விமலாவை கனோஜ் அதிபன் விஜயபாலுக்கும், கமலாவை ஆஜ்மிர் அதிபன் சோமேஸ்வருக்கும் மணம் செய்து கொடுத்திருக்கிறது. தம்பி தனஞ்சயன் இறந்துவிட்டதால் சகோதரிகள் டெல்லிக்கு வந்திருக்கின்றனர் என்ற நிகழ்ச்சியுடன் நாவல் தொடங்குகிறது. அவர்கள் இருவருக்கும் குண வேறுபாடு அதிகம். விமலா பொருமையும், குறுகிய புத்தியும் சண்டைக் குணமும் கொண்டவள். கமலா திறந்த மனமும், தாராள மனப்போங்கும், மனித பாசமும் கொண்டவள். விமலாவுக்கு ஜெயசந்த் என்ற மகனும் கமலாவுக்கு பிருதிவிராஜ் என்ெருரு மகனும் இருக்கின்றனர். தாத்தாவின் எந்த மடியில் யார் உட்காருவது என்பதுபற்றி இரு சிறுவர்களுக்கும் ஒரு நாள் சண்டை வருகிறது. அனங்கபாலுக்கு இரண்டு பேரர்மீதும் பாசம்தான். ஆனல் பிருதிவிராஜ்மீது சிறிது அதிக பாசம். விமலாவுக்குப் பொறுக்கவியலாமல் போகிறது. கமலாவுடன் சண்டைக்குப் புறப்படுகிருள். கமலாவும் பிறரும் அவளைச் சமாதானப்படுத்த முயல்கின்றனர். ஆனல் அவள் அடங்காமல் நோக்கங்கள் கற்பித்துப் பேசுவதும் கசப்பைக் கொட்டுவதுமாயிருக்கிருள். அனங்கபால் எரிச்சல் மிகுந்து, அவளைக் கனோஜுக்குப் புறப்படச் சொல்கிருன். அவளும் கிளம்புகிருள். கமலாவும் ஆஜ்மிர் புறப்படுகிருள். பிருதிவி ராஜை டெல்லியில் விட்டுச் செல்லுகிருள். அவனுக்கு க்ஷத்திரிய வீரனுக்குரிய பயிற்சிகள் அளிக்க அனங்கபால் விரும்பியதால் அந்த ஏற்பாடு.

விமலாவுக்கு சகோதரிமீது குரோதம் வளர்கிறது. ஜெயச்சந்தை அழைத்துக்கொண்டு இமயமலையில் வசிக்கின்ற கபாலிகனிடம் செல்கிருள். மகனுக்கு டெல்லி ராச்சியம் கிட்ட வேண்டும்; அதை அடையக்கூடிய சக்தி அவன் பெறவேண்டுமென கபாலிகனிடம் தாயத்து கேட்கிருள். அவள் பல நாள் அங்கு தங்கவேண்டி நேர்கிறது. மகனுக்கு சக்தியும் சித்தித்தபாடில்லை. அவள் பொறுமையிழக்கிருள். அசம்பாவிதங்களில் மாட்டித் தவிக்

கிருள். அனங்கபாலும் விஜயபாலும் அவளைத் தேடி வந்து சமயத்தில் காப்பாற்றுகின்றனர். பின் எல்லோரும் அவரவர் இடம் திரும்புகின்றனர். முதல் பாகம் இங்கே முடிகிறது.

அடுத்த பாகத்தில் முதல் அத்தியாயம் விமலாவின் பொருமுதலுடன் தொடங்குகிறது. தன்னை எல்லோரும் அவமதிக்கின்றனர் என அவள் எண்ணி எவரையும் பார்க்கவும் பேசவும் மறுக்கிருள். சில மாதங்கள் சென்றபின் பிருதிவிராஜுக்கு முடிசூட்டு விழா நடக்க டெல்லியில் ஏற்பாடாகிறது. அனங்கபால் விமலா குடும்பத்தினருக்கு அழைப்பு அனுப்புகிருர்' அவள் கணவன் விஜயபால் மகன் ஜெயசந்தையும் அவனது தம்பியையும் அழைத்துக்கொண்டு டெல்லி செல்ல விரும்புகிருர். விமலாவின் விருப்பம் என்ன என்பதை அவர் கேட்கக்கூட இல்லை. விமலாவுக்கு தான் போவதா வேண்டாமா என்று தீர்மானிக்க இயலவில்லை. பின்னர் போகவேண்டாமென முடிவு செய்து, ஜெயசந்த் போவதைத் தடுக்கப் பார்க்கிருள். அவனோ தான் எப்படியும் டெல்லி போக விருப்பதாகச் சொல்லுகிருன். அவனும் தன்னைப் புறக்கணித்து விட்டதாக நினைத்த விமலாவின் பொருமல் அதிகரிக்கிறது. எல்லோரும் தன்னைப் புறக்கணிக்கின்றனர் என்று நினைக்கின்ற அவள் மீண்டும் இமயமலைக்குப் புறப்படுகின்ருள்.

அடுத்து நடக்கவிருப்பதைப் பொறுத்திருந்து பாருங்கள் என்ற வேண்டுகோளுடன் ஆசிரியர் அந்த அத்தியாயத்தை முடிக்கிருர். ஆனல் அடுத்து வேறு அத்தியாயம் எழுதப்படவில்லை. 'காலக்கூட்' என்ருல் கொடிய நஞ்சு என்று பொருள். விமலாவின் மனம் ஒரு விஷக்குடம் என்பதை அது குறிக்கின்றது. தொடர்ந்து எழுதியிருந்தால் ஜெயச்சந்த் மகம்மதுகோரியுடன் இணைந்து செய்த சதியையும், பிருதிவிராஜின் தோல்வியையும்பற்றி ஆசிரியர் எழுதினலும் எழுதியிருக்கலாம். ஆனல் இது ஒரு ஊகமே.

நாவலில் விமலா, கமலாவின் குணபேதம் நன்கு கொணரப் பட்டிருக்கின்றது. கபாலிகனின் 'ஆசிரமும்', அவனது சீடர்களின் போட்டி பொருமைகளும், அமானுடப் பழக்கவழக்கங்களும் நன்ருக சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

வஜ்ரகாட் *(1913—1915)* ஹரிபாவரின் கடைசி சரித்திர நாவல். அவரது சிறந்த நாவல்களில் அது ஒன்று. அதன் துணைத் தலைப்பு 'விஜய நகரத்தின் முடிவு காலம்'. அவருடைய ஆதாரங்கள்; சிவெல் (Sewell) எழுதிய 'மறந்த சாம்ராச்சியம்' (A Forgotten Empire)ம் பெரிஷ்டா (Ferista) தரும் ஆதாரங்களும் ஆகும். பிரிக் (Brigg) பெரிஷ்டாவின் ஆதாரங்கள்பற்றி எழுதியிருக்கின்ருர், சீசர் பிரெடெரிக் (Caesar Frederick) என்ற இத்தாலிய பயணியும்

ஒரு சில குறிப்புக்கள் எழுதியதாகத் தெரிகிறது. பிரிக்கின் பெரிஷ்டா என்ற நூலில் பின்வரும் கூற்று காண்கிறது. ''இராம ராயரின் இரு மகம்மதியப் படைத் தலைவர்கள் செய்த துரோகத்தினால்தான் ஹிந்துக்கள் தலைக்கோட்டைப் போரில் தோற்றனர் என சீசர் பிரெடெரிக் கூறுகின்றார். ஆனால் பெரிஷ்டா இது குறித்து எதுவும் கூறாது விடுகின்றார். சீசர் பிரெடெரிக் 1567-ல், அதாவது தலைக்கோட்டைப் போர் முடிந்து இரண்டாண்டுகள் கழித்து விஜயநகரத்துக்கு விஜயம் செய்தவர்.

மேற்கண்ட குறிப்புக்களுடன் இன்னொரு புராணத்தினின்றும் ஆசிரியர் விஷயங்கள் எடுத்துக் கொண்டிருக்கின்றார். ஒரு தென்னிந்திய எழுத்தாளர் 'ஹிந்துஸ்தான் ரிவ்யூ' (Hindustan Review)வில் சில ஆண்டுகளுக்கு முன்னர் இது குறித்து ஒரு பழங் கதையை எழுதியிருந்தார். அது வருமாறு: இராமராயர் இளமையில் ஒரு முஸ்லிம் யுவதியைக் காதலித்தார். ஒரு மகன் பிறந்தான். அவள் குழந்தையுடன் எங்கோ போய்விட்டாள். சில ஆண்டுகள் கழிந்தன. பையன் இளைஞனாக வளர்ந்து இராமராயரின் சபைக்கு வந்து வேலை கேட்டான். இராயர் அவனைத் தன் மகனெனக் கண்டு கொண்டார். தமது மெய்க்காப்பாளனாக நியமித்தார். பின்னொரு நாள் அனைவரும் சபையில் இருக்கையில் ஏவலாளர் ஒரு முஸ்லிம் யுவதியை அங்கு கொணர்ந்தனர். அவளது படுதாவை அகற்றும் படி இராமராயர் உத்தரவிட்டார். அது அகற்றப்பட்டது. முஸ்லிம் பெண்ணின் படுதா சபையில் அகற்றப்படுவதை அந்தப் புதிய இளைஞன் கடுமையாக எதிர்த்தான். யுவதியைக் கண்ட இராமராயர் மகனுக்கு நல்ல மனைவியாக வாய்த்தது என்று மகிழ்ந்து, பெண்ணை அவனிடம் ஒப்படைத்தார். அவனும் அவளை விரும்பினான். அவளது சம்மதம் கேட்கப்பட்டபோது அவள் தன்னைச் சபையில் அவமானப்படுத்திய ஹிந்து மன்னனின் இராச்சியம் அழிந்தாலன்றித் தான் மணம் புரியப்போவதில்லை என்றும் அந்த அழிவைக் கொண்டு வருகிற மனிதனை மாத்திரமே தான் மணக்கவிருப்பதாகவும் சொல்லி விட்டாள். உடனே இளைஞன் தான் முன்னின்று அக்காரியத்தைச் செய்து முடிக்கப் போவதாகச் சபதம் செய்தான். அவ்வாறே செயலாற்றவுந் தொடங்கினான்.

மேற்சொன்ன புராணக்கதையினின்று தான் கதை பெரும் பாலும் வளர்த்தப்படுகிறது.

தலைக்கோட்டைப் போரில் விஜயநகரப் படை தோல்வியுற்றதும், விஜயநகர அரசனான இராமராயரின் தலை துண்டிக்கப் பட்டதும் வரலாற்றுண்மைகளாகும். இவையும் அந்தப் புராண விவரங்களும் கதையின் எலும்புக்கூடுபோல் பயன்படுகின்றன.

மேற்கொண்டு ஹரிபாவர் பாத்திரங்களையும் நிகழ்வுகளையும் படைத்து, இரத்தமும் சதையும் உயிருமூட்டியிருக்கின்றார்.

இராமராயர் காதலித்த பெண் மேகர்ஜன். அவர்களுக்குப் பிறந்த மகன் ராண்மாஸ்து. ஹிந்து ராச்சியத்தை அழிக்க விருப்பம் தெரிவித்தவள் நூர்ஜகான். பீதியளிக்கிற இன்னொரு பாத்திரம் தனமல்லா; கரிய பெரிய உருவத்துடன் மௌனமாக நடமாடு கின்றவன்; மேகர்ஜனை விட்டு ஒருபொழுதும் அகலாதிருப்பவன். இவர்களையெல்லாம் வைத்துக்கொண்டு நல்லதொரு காதல் கதையைத் தயாரித்திருக்கிறார், ஆசிரியர். கதை துன்பியலாக அமைந்தது; ஓரளவே அரசியல் கலப்புற்றது. ஹரிபாவர் இதற்கு முன்னால் எழுதிய வரலாற்று நாவல்களில் செயல் அதிகம். பாத்திரப் படைப்பு பொதுவாக எல்லாவற்றிலும் சிறப்பாக அமைந்தாலும் செயற்பாட்டம்சமே தூக்கலாகக் காணப்படும். மேலும் அந்நிய ஆதிக்கத்தை எதிர்க்கின்ற பான்மையும் முந்தைய நாவல்களில் தென்படுகின்றது. சந்திர குப்தனிலுங்கூட அது ஓரளவு வெளிப்பட்டு விடுகிறது. அந்நியப் படையுடன் ஒத்துழைக்க ராக்ஷசன் மறுக்கின்றவிடத்தில் இந்த எதிர்ப்பு வெளிப்பாடாகி விடுகிறது. ஆனால் வஜ்ரகாட்டில் எதிர்ப்பு அம்சமே கிடையாது. பாமினி சுல்தான்கள் அனைவரும் ஒருங்கிணைந்து விஜயநகரப்படை யுடன் போரிடுகின்றனர். ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே நடந்த மிகப் பெரிய போர் அது. இருந்தபோதிலும் முஸ்லிம் ஆதிக்கத்தின்மீது சீற்றங்கொண்ட ஹிந்து எதிர்ப்பாக அது காட்டப்படவில்லை. துன்பியல்க் கதையின் சோகத்தைத் தூக்கிக் காட்ட மாத்திரமே ஹிந்து முஸ்லிம் பிணக்கு காட்டப்படு கிறது. உச்சகட்டத்துக்குக் கதையை வளர்த்துக்கொண்டு போகவும் அது ஒரு சாதனமாகப் பயன்படுத்தப்படுகின்றது. மனிதர்களிடையே நிகழ்கின்ற உறவுகள், அந்த உறவுகளில் தோன்றுகின்ற விரிசல்கள், அப்போது உருவாகின்ற மனப் போராட்டங்கள் அதிகமாக விவரிக்கப்படுகின்றன. பாத்திரங் களின் உள் மனங்களில் நிகழ்கின்ற தத்தளிப்புக்கள் அதிகமாகக் கூறப்படுகின்றன. இராமராயனுக்கு முப்பத்தைந்து வயது. பயணி கள் கூட்டமொன்றிலிருந்து அவன் மேகர்ஜனைக் கொண்டு வருகிறான். ஒரு தோட்ட மாளிகையில் அவளை வைக்கிறான். விஜய நகரத்தினின்று சற்று வெளியே இருக்கிறது அந்த அழகான தோட்டம். மாரிஜானு என்ற பணிப்பெண்ணைத் தவிர வேறு யாரும் அங்கு கிடையாது. சுற்றிலும் காபந்தான அமைப்புக்களைக் கொண்டது, இராமராயனும் மேகர்ஜனும் ஒருவர்மீதொருவர் காதலில் மூழ்கிக் கிடக்கின்றனர். தோட்டத்தில் அழகானதொரு குளம். அதன் ஓரமெங்கும் பூப்பந்தர்கள். காதலரிருவரும் அசைந்து வரும் படகில் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கின்றனர். நிலவு

பொழிகிறது. இந்த வர்ணனையுடன் தான் நாவல் தொடங்குகிறது. மேகர்ஜன் சாஸ்திரீய சங்கீதம் பாடுகிறாள். இராமராயன் ஜெய தேவரின் கவிகளைப் பாடுகிறான். இருவரும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கு கின்றனர். மேகர்ஜன் கருவுற்றிருக்கிறாள். எனவே அவள் மிகவும் மகிழ்ந்திருக்கிறாள். ஆனாலும் சந்தோஷங்களின் கூடவே வேறே ஒரு உணர்வும் நெருடுகிறது. சந்தோஷங்கள் நீடிப்பதில்லை என்ற ஒரு பயம் தோன்றிவிடுகிறது. துடுப்பை அசைத்தவாறே மேகர்ஜன் தன் எண்ணத்தை வெளியிட்டாள். ஆனந்தத்தின் உச்சகட்டத்தில் இருக்கின்ற இந்த சமயத்திலேயே இருவரும் குளத்தில் மூழ்கி இறந்து விடுவது உத்தமம் என்று அவள் சொல்கிறாள். இராமராயன் அவளது அந்த சோக உணர்வை அகற்ற முயல்கிறான். விளையாட்டாகப் பேசி அவள் எண்ணங்களைத் திசை திருப்புகிறான். தன் காதலை உறுதிப்படுத்துகிறான். ஆனால் மறுநாள் காலையில் அவன் அவளைக் கைவிடுகிறான். ஒரு அரச குமாரியைத் திருமணம் புரிந்து கொள்வதற்காக அவன் அங்கிருந்து கிளம்பிப் போகிறான். அவனது அரசியல் உயர்வுக்குச் சவுகரியமான திருமணம் அது. நாட்டின் உண்மையான அதிகாரம் அதன் மூலம் தான் அவன் கைக்கு வருகிறது. அன்பைப் புறக்கணித்து அதிகாரத் தைத் தெரிந்து கொள்கிறான் அவன். மேகர்ஜனால் அதைத் தாங்கிக் கொள்ள இயலவில்லை. தோட்டமாளிகையை விட்டு அகல்கிறாள். வடக்கே எங்கேயோ போய்விடுகிறாள். அவளைப் பற்றிய பேச்சும் இல்லாமல் போகிறது. அவள் இராமராயனைப் பழிவாங்குவது என்று உறுதி பூண்டு விடுகிறாள். அவளுக்கு ஆண் குழந்தை பிறக் கிறது; அவனுக்கு ராண்மஸ்தகான் என்று பெயரிடுகிறாள்.

மகன் இளைஞனாக வளர்ந்ததும் அவனை அழைத்துக்கொண்டு பிஜப்பூர் வருகிறாள். சிபார்சுகள் பிடித்து, அவனை சுல்தானின் சமஸ்தானத்தில் சேர்க்கிறாள். மனதிலே இராமராயன்மீது இன்னும் பகையைப் பேணி வருகிறாள். தனது அன்பையும் தன் மானத்தையும் அவன் புறக்கணித்ததை அவள் மறக்கவேயில்லை. அவனைக் குறித்து அவளுக்கு ஒரு ஏளன உணர்வும் இருந்து வருகிறது. நாளடைவில் ராண்மஸ்தகான் பதவி உயர்வு பெறு கிறான். விளைவாக விஜயநகர அரசவையில் அமர்கின்ற தூதுவனாக அவன் பிஜப்பூர் சுல்தானால் விஜயநகரத்துக்கு அனுப்பி வைக்கப் படுகிறான். அப்போது அவனுக்கு முப்பத்தைந்து வயது. இராம ராயன் மேகர்ஜனை முதன்முதலில் சந்தித்த வயது.

மேகர்ஜன் மகனிடம், இராமராயன் ஒரு முஸ்லிம் பகைவ னென்றும், பெண்களைக் கெடுப்பவனென்றும் சொல்லி வைத்திருக் கிறாள். அவனுடைய தகப்பன் அவன் என்பதைச் சொல்லவில்லை.

நிற்க. மேகர்ஜன் தோட்டமாளிகையினின்று சொல்லாமல் மறைந்ததும் இராமராயன் மிகுந்த துக்கமடைந்தான். அது அவன்

மனத்தை உறுத்திக் கொண்டேயிருந்தது. அவளை அறவே புறக் கணித்து விடுவது அவன் நோக்கமல்ல. அவள்மீது அவன் கொண்ட அன்பு போலியானதல்ல. தாற்காலிகமாக அவளைப் பிரிந்து பின் உறவைத் தொடரலாமென அவன் நம்பியிருந் தான். தோட்ட மாளிகையில் அவளுடன் கூடி சுகித்த நினைவுகள் அவன் மனத்தில் பசுமையாக இருந்தன. அந்த நினைவில் அவன் அடிக்கடி அவ்விடத்துக்குப் போய் வந்து கொண்டிருந்தான்.

ராண்மஸ்தகான் விஜயநகரம் வந்து சேர்ந்தான். அவனுடன் மேகர்ஜனும் மாரிஜாணுவும் வந்தார்கள். அவர்கள் வசிப்பதற்கு அதே தோட்டமாளிகை—இராமராயன்—மேகர்ஜனின் காதலின் சாட்சியான—அதே இடம் அவர்களுக்குத் தரப்பட்டது.

ராண்மஸ்தகான் இராமராயன் சபைக்கு வந்தான். அவனை ஒருமுறை பார்த்த அளவிலேயே அது தன் மகன் என்பது இராமராயனுக்கு உள்ளுணர்வாய்த் தெரிந்தது. அதன் பின்னர் அவனுக்கு ராண்மஸ்தகான் ஒரு அரசியல் பிரதிநிதி என்பது மறந்துவிட்டது. மகன் என்ற உணர்வே மேலிட்டு நின்றது. விளை வாக அவனிடம் பாசத்தை வெளிக்காட்டினான். ராண்மஸ்தகா னுக்கு அது புதிராக இருந்தது; புரியவில்லை; பிடிக்கவுமில்லை. எதிரி அரசன் என்ற முறையிலுஞ்சரி, தனி மனிதன் என்ற பார்வை யிலுஞ் சரி ராண்மஸ்தகான் மனத்தில் இராமராயனைக் குறித்து பகையும் ஏளனமுமே நிறைந்திருந்தன. இப்படிப்பட்ட எதிரிடை யான உணர்ச்சிகளையும் அவைகளைத் தொக்கி எழுகின்ற நுட்பமான முரண்களையும் ஹரிபாவர் திறமையாக வெளியிட்டு விடுகிறார்.

ஒருநாள் அவர்கள் வரவேற்புமண்டபத்தில் அமர்ந்திருக்கை யில் ஏவலாளர்கள் படுதா தரித்த ஒரு முஸ்லிம் பெண்ணை சபையில் கொண்டு வந்து நிறுத்தினார்கள். சந்தேகச் சூழ்நிலையில் காணப் பட்டதால் அவளைப் பிடித்துக் கொணர்ந்திருந்தனர். அவளது படுதாவை அகற்றும்படி இராமராயன் உத்தரவிட்டான். ராண்மஸ்தகான் சீற்றத்துடன் அந்த உத்தரவை எதிர்த்தான். ஆயினும் படுதா நீக்கப்பட்டது. அழகான முஸ்லிம் இளம் பெண்ணொருத்தி நின்றாள். கோபத்தில் அவள் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. சபையில் வலிய படுதா அகற்றப்படுவதை விடவும் வேறொரு பெரிய அவமானம் ஒரு முஸ்லிம் பெண்ணுக்குக் கிடையாது. இரு இளைஞரும் காட்டிய கோபமும் வீரமும் இராமராயனுக்கு மிகவும் பிடித்தது. அவள் அவனுக்கேற்ற மனைவியாவாள் எனத் தோன்றியது. விரும்பினால் அவன் நூர்ஜகான் என்ற அவளை மணந்துகொள்ளலாம் என ராண்மஸ்த கானிடம் தெரிவித்தான். அவளையும் அவனுடன் தோட்ட மாளிகைக்கு அனுப்பினான்.

நூர்ஜகானின் அழகும் கர்வமும் ராண்மஸ்தகானையும் மயக்கின. இராமராயனின் ஆலோசனைகள்பால் அவனுக்குப் பொதுவாக வெறுப்பு என்றாலும், இப்போது அப்படியில்லை. அவனது ஆலோசனைப்படி அவளை மணந்துகொள்ள அவன் தயாராக இருந்தான். ஆனால் அவள் மனம் இரும்பைப்போல இறுகிவிட்டிருந்தது. தன்னை அவமானப்படுத்திய ஹிந்து ராச்சியம் அழிந்தாலன்றித் தனக்கு மணம் இல்லை என்றாள். அப்படியொரு அழிவைக் கொணர்கிற புருஷனையே தான் வரிக்க முடியும் என்றும் முடிவாகச் சொன்னாள்.

அவள்மேல் வைத்த ஆசைமிகுதியால் ராண்மஸ்தகான் அவள் விருப்பத்தை நிறைவேற்ற உடனே செயலாற்றத் தொடங்கினான். இது நாள்வரை அவன் தாயிடம் பாசமும் பரிவுமாக அவளையே சுற்றி வந்தான். நூர்ஜகான் வந்த பின்பு அந்த அன்பு ஓட்டம் திசைமாறி அவள்பால் சென்றது. அந்த மாற்றத்தை மேகர்ஜன் உணர்ந்தாள். இது அவளுக்கு வேதனையளித்தது. இதையெல்லாம் வெகு நுட்பமாக நயமாக ஆசிரியர் எழுதுகின்றார்.

ராண்மஸ்தகான் கருமமே கண்ணாக வேலையில் மூழ்கினான். பிஜப்பூர் சுல்தானுக்குப் பணிபுரிவதில் தனக்கு ஆர்வமில்லை என்று இராமராயனிடம் சொன்னான். அப்படியே நடித்தான். எந்நேரமும் விஜயநகரத்தில் இராமராயன் அருகில் இருப்பதே தனக்கு விருப்பம் என்றான். இராமராயன் மகிழ்ச்சியில் திளைத்துவிட்டான். மகனை இனிப் பிரிந்திருக்க வேண்டியதில்லை என எண்ணிப் பூரித்தான். அவனைத் தனது மெய்க்காப்பாளனாக ஆக்கினான்.

ராண்மஸ்தகான் எதிர்பார்த்திருந்த சந்தர்ப்பமும் வந்து சேர்ந்தது. தலைக்கோட்டைப் போர் நடக்கும் சூழ்நிலைகள் உருவாகத் தொடங்கின. பிளவுபட்டுக் கிடந்த நான்கு பாமினி சுல்தானியங்களும் ஒன்று கூடிக்கொண்டன. அவர்களது பிளவைப் பயன்படுத்தியே விஜயநகரம் இதுகாறும் பிரித்தாளும் சூழ்ச்சிகளைச் செய்துகொள்ளைகள் நடத்திவந்திருந்தது. இப்போது முஸ்லிம்படைகள் ஒருங்கிணைந்து விஜயநகரத்தை முறியடிக்கத் தயாராயின. தலைக்கோட்டையில் இரு படைகளும் சந்தித்தன. எதிரிப் படைகளின் நடவடிக்கைகள் குறித்து ராண்மஸ்தகான் இராமராயனுக்கு முற்றிலும் தவறான தகவல்கள் கொடுத்து ஏமாற்றினான். இராமராயனை சுற்றியிருந்த பிற காப்பாளர்கள் அகலும்படியாகச் செய்தான். எதிரி இராமராயனை தாக்கியபோது அவனருகேயிருந்த ஓரிரண்டு பேரும் எளிதில் விழுந்தனர். சிலர் ஓடினர். சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் ராண்மஸ்தகான் இராயனின் தலையை வெட்டி அதை எடுத்துக்கொண்டு தோட்டமாளிகைக்குச் சென்றான். இதுதான் கதையின் உச்சகட்டம். ராண்மஸ்தகான் எண்ணிய கருமத்தைச்

சாதித்துவிட்டான். வரலாற்றுப் பிரகாரம் இராயனின் தலையை வெட்டியது ஹுசேன் நிசாம் ஷா என்பவன். ஆமத் நகரத்தைச் சேர்ந்த அவன் இராமராயனின் தலையை வெட்டி ஒரு நீளமான வேல்முனையில் அதைக் குத்தி எல்லோரும் காணும்படியாக வேலைத் தூக்கி நிறுத்தினான் என்பது சரித்திரம். ஆனால் இலக்கிய சவுகரியத்துக்காக ஹரிபாவர் சரித்திரத்தை இங்கே மாற்றியிருக்கிறார்.

தலையைக் கொண்டுபோன ராண்மஸ்தகான் அதை ஒரு தாம்பாளத்தில் வைத்து, பெருமிதம் பொங்கத் தாயிடம் போய் நீட்டினான். பாராட்டுக்களை எதிர்பார்த்து நின்றான். இராமராயனின் தலையென்று கண்ட மேகர்ஜன் 'மகனே, நீ உன் தகப்பனைக் கொன்றுவிட்டாயடா' என்று கதறினாள். அவள் அடிமன ஆழத்தில் இராமராயன் மீதுள்ள காதல் அப்படியே இன்னும் கனன்று கொண்டிருந்தது. பழியெடுக்க விரும்பினாளேயன்றி அவனைக் கொல்வது அவளது நோக்கமாக இல்லை. உணர்ச்சி மேலிட்டுத் தலையைத் தன் கரங்களில் ஏந்திக்கொண்டு ஓடி குளத்தினுள் குதித்தாள். காதலர்கள் சேர்ந்தாற்போல் குளத்தில் மூழ்கிவிடவேண்டுமெனப் பல வருடங்களுக்கு முன்பு அவள் தெரிவித்த ஆசை அப்படி நிறைவேறியது. அவள் மறைந்தபோது மறைந்து, பின் அவளுடன் மீண்டும் தோன்றியிருந்த தனமல்லன் இப்பொழுதும் எங்கிருந்தோ வந்து அவள் பின்னாலே குளத்தில் குதித்தான். இவற்றையெல்லாம் கண்ட நூர்ஜகான் அதிர்ச்சியுற்றாள். தன் காதலன் ஒரு ஹிந்துவின் சோரப்பிள்ளை; இப்போது பிதாஹத்தி வேறு செய்துவிட்டு நிற்கிறான். அவனை மணப்பது எங்ஙனம்? அவளும் குளத்தை நோக்கி ஓடினாள். மற்ற அனைவரையும்விட அதிக அதிர்ச்சிகள் அடைந்தவன் ராண்மஸ்தகானே என்பதைச் சொல்லவேண்டியதில்லை. நூர்ஜகானைத் தொடர்ந்து அவன் ஓடிப் பின் இருவருமாகக் குளத்தில் விழுந்து மூழ்கிப் போகின்றனர். தோட்டமாளிகையின் குளத்தில் தொடங்கிய கதை அவ்விடத்திலேயே முடிவும் அடைகின்றது.

கதையின் காதலும் சோகமும் புரியவேண்டுமென்ற நோக்கத்துடன் அதைச் சற்று விரிவாகவே சொல்லவேண்டியதாயிற்று.

பாலுணர்வும் காதலும் இக்கதையின் அடிப்படைகள். ஆண் பெண், தந்தை—தனயன், தாய்—மகன் இவர்களுக்கிடையே நிகழ்கின்ற அன்பும் உறவும் பல கோணங்களில் பார்க்கப்படுகின்றன. அதன் சுழலில் அகப்பட்டுக்கொண்ட நால்வர் அதில் சிக்கி மாண்டுபோகின்றனர். மேகர்ஜனைக் காதலித்து அவளை விடாமல் பின்தொடர்ந்த தனமல்லனுக்கும் அதே கதிதான். கரிய பெரிய பயங்கரமான அந்த மௌனப் பிரகிருதி நீரின் கீழே செடி கொடிகளில் சிக்கி மாண்டான் என்று ஆசிரியர் கூறுகிறார்.

பாலுணர்வின் தீயவியல்புகளைச் சுட்டும் குறியீடாக அவனைக் கொள்ளலாம். அவன் ஊமையல்ல; ஆனால் பேசுவதில்லை; விடாப் பிடியாகப் பேய்த்தனமாகத் தொடர்பவன். குளமும்கூட பாலு ணர்வின் சின்னமாகவே சித்திரிக்கப்பட்டிருப்பதாகக் கொள்ள லாம். ஆண் பெண் பாலாரைத் தன்பால் ஈர்த்து, மூழ்கடித்துத் திணறவைத்து அழிக்கக் கூடியது; மறைந்து கிடந்து, அவர்களது உடலைப் பின்னிக் கொல்லக்கூடிய செடி கொடிகளைக் கொண்டது.

நான்கு மனித ஜீவன்களை அரித்து உருக்கிய உணர்வுகளால் நெய்யப்பட்ட கதை. ஐந்தாவது ஜீவனின் காதல் இழை யொன்றும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஹரிபாவர் இந்த நெசவு வேலையை மிகத் திறம்படச் செய்திருக்கின்றார். அவரது பிற நாவல்களில் தென்படுகின்ற ஒரு சில குறைகள் இதிலும் உண்டு. ஆனால் அவற்றை ஒதுக்கிவிட்டு நாவலை மொத்தப் பார்வையாக நோக்கவேண்டும். அவரது சிறந்த நாவல்களில் இது ஒன்று; அவரது சரித்திர நாவல்களில் இதுவே சிறந்தது. கடைசியாக எழுதப்பட்ட முடிவுற்ற நாவல் இது. எனவே அவரது முதிர்ந்த படைப்புத்திறன் இந்த நாவலில் முழுமையாக வெளிப்படுகிறது. பாத்திரங்களில் இராமராயன் ஒருவனே சரித்திர பாத்திரம். அது போல சம்பவங்களிலே தலைக்கோட்டைப் போர் மாத்திரமே வரலாற்று நிகழ்ச்சி, மற்றவை கற்பனை. புராணக் கதையில் கண்ட விவரங்களையும் சேர்த்துக்கொண்டிருக்கிறார். இவற்றை அடிப் படையாகக் கொண்டு மானுட உணர்ச்சிகள், பலங்கள், பல வீனங்கள் ஆகிய இழைகளைக் கொண்டு கதையைச் சிறப்பாகப் பின்னியிருக்கிறார். இந்த நாவல் கவித்துவம் நிறைந்தது.

ஹரிபாவரின் சரித்திர நாவல்களை மொத்தமாகப் பார்க்கின்ற போது ஒன்று தெரிகிறது. கற்பனைப் பாத்திரங்கள், சம்பவங்களைப் பற்றிக்கொண்டு எழுதினால் அவரது படைப்புத்திறன் பிரகாசிக் கிறது. அப்படிச் செய்கையில் எழுத்தாளனுக்குச் சுதந்திரம் அதிகம் கிடைக்கிறது. அவரது கற்பனைப் பாத்திரங்களும் சம்பவங் களும்தான் வாசகனின் மனத்தில் அதிகமாகப் பதிகின்றன. அங் கங்கே சரித்திரக் கண்ணோட்டம் சற்று சிதைக்கப்பட்டு விடுவது உண்மையே. ஆனால் வஜ்ரகாட்டிலும் சிவாஜி நாவல்களிலும் இந்தச் சிதைவு பெரும்பாலும் இல்லையென்றுதான் சொல்லவேண்டும். அவர் அங்கங்கே வரலாற்றை ஒரு சிறிது சுதந்திரமாக மாற்றி யிருப்பது கலைநோக்கில் நியாயப்படுத்தக் கூடியதே.

ஹரிபாவரை வால்டர் ஸ்காட்டுடன் (Walter Scott) ஒப்பிடுவது சரியல்ல என்று தோன்றுகிறது. மராத்தி மொழியில் முதன் முதலாக வரலாற்றுப் புனைகதை எழுதியவர்களில் ஹரிபாவரே முதன்மையானவர். பின்வந்த எழுத்தாளர்களைப்

பெரிதும் பாதித்தவர். எனவே இது குறித்த அவர் கருத்தையும் அறிந்துகொள்ளுவது நல்லது. வஜ்ரகாட்டின் முன்னுரையில் அவர் சொல்லுகிறார்: ''சமுதாய நாவலென்பது யதார்த்தத்தின் மாயத் தோற்றமாகும். வரலாற்று நாவலென்பது வரலாற்று யதார்த் தத்தோடு ஒரு மாயத் தோற்றத்தையும் கலப்பதாகும்; அல்லது வரலாற்றுடன் புராணத்தைக் கலப்பதாகும். இவ்வாறு வர லாறும் கற்பனையாகிய மாயமும் அளவோடு பொருத்தமாகக் கலக்கின்றபோது இரண்டுமே விகசிதம் பெறுகின்றன. படைப்பில் அழகியல் சிறக்கிறது. எந்த விகிதத்தில் அவற்றை எப்படி எப்படி கலப்பது என்பது புனைகதைப் படைப்பாளியின் திறமையை பொறுத்தது.'' ஹரிபாவர் தமது சிறந்த படைப்புக்களில் வரலாற்று விவரங்களோடு கற்பனையையும் புராணத்தையும் அழகு படக் கலந்தார் என்பதில் இரு கருத்துக்கிடமில்லை.

புனைகதையின் சாக்கில் வரலாறு எழுதுவது அவர் நோக்க மல்ல; மாறாக புனைகதை படைக்க வரலாற்றுச் சான்றுகளை அவர் பயன்படுத்தினார்; தமது புனைகதைகளின் மூலம் வரலாற்றுக் காலத்தை, அதன் பின்னணியை, பொதுவான சூழலை நமது கண் முன்னே மீண்டும் கொணர்ந்து நிறுத்தினார் என்பதே சரியாகும். அவரது கரிசனம் வரலாறு அல்ல, புனைகதையே ஆகும். அவரது வரலாற்று நாவல்கள் வரலாற்று அறிக்கைகள் அல்ல. அவை வரலாறு சார்ந்த கற்பனைகள். அதனாலேயே அவை அழகியல் படைப்புக்களாகத் திகழ்கின்றன.

அத்தியாயம் 5

# பிற படைப்புகளும் முடிவுரையும்

ஹரிபாவர் முப்பத்திநான்கு ஆண்டுகளாக எழுத்துத் தொழிலில் தொடர்ந்து ஈடுபட்டிருந்தார். அவர் எழுதிய நாவல்கள் மொத்தம் இருபத்தியேழு; குறுநாவல் ஒன்று. வேறு வகை எழுத்துக்களும் அவ்வப்போது எழுதி வந்தார். உரைகளும் நிகழ்த்தினுர். உரைகளில் ஒரு சில பிரசுரமானவை. இந்த வேறு வகை எழுத்துக்கள், பிரசுரமான பேச்சுக்கள் உட்பட மொத்தம் ஏறத்தாழ ஈராயிரம் பக்கங்கள் தேறுகின்றன.

அவரது விமரிசனத் திறமை குறித்து ஏற்கெனவே குறிப்பிடப் பட்டது. அகார்கரின் ஹாம்லெட் மொழியாக்கத்தை அவர் கடுமையாக விமரிசித்திருந்தார். அவரது வழிகாட்டியான கோவிந்தராவ் காந்திகரும் ஹாம்லெட்டை மொழிபெயர்த்திருந் தார். அதை ஹரிபாவர் பாராட்டியிருக்கிறுர். ஒரு சில குறை களையும் சுட்டிக்காட்டியிருக்கிறுர். ஆனுல் அகார்கரது மொழி பெயர்ப்பின் மூல ஒற்றுமை, மொழிப்பிரயோகம் இரண்டையும் ஹரிபாவர் கடுமையாகத் தாக்கியிருக்கிறுர். இந்த இரண்டு விமரிசனங்களையும் ஹரிபாவர் சேர்த்திருக்கிறுர். அத்துடன் மொழிபெயர்ப்பாளர்களுக்குப் பொதுவாகப் பயன்படக்கூடிய சில குறிப்புக்களையும் எழுதியிருக்கிறுர். அவை திறமானவை. ரோமியோ ஜூலியட்டின் மொழிபெயர்ப்பொன்றுக்கும் ஒரு விமரி சனம் காணப்படுகின்றது. இது ஹாம்லெட் மொழிபெயர்ப்பின் விமரி சனத்துக்கு முன்பாகவே எழுதப்பட்டது. ஷேக்ஸ்பியர் நாடகங் களை அவர் கவனமாகப் படித்திருந்தார் என்பதற்கு இவை சாட்சி களாக அமைகின்றன. மேலும் ஹரிபாவர் தமது விமரிசனங்களில் சாமுவேல் ஜான்சன், ஆலிவர் கோல்டுஸ்மித் ஆகிய பெரும் எழுத் தாளர்களுடைய கருத்துக்களையும் தயக்கமின்றி மறுத்துக் கூறுகிறுர் என்பதும் கவனிக்கத்தக்கது. இந்தக் கட்டுரைகள் எழுதியபோது அவருக்கு வயது பத்தொன்பதுதான். அவரது துணிவும் தன்னம்பிக்கையும் போற்றத்தக்கவை.

1912-ல் அவர் ஷேக்ஸ்பியர் குறித்துக் கட்டுரைகள் எழுதத் தொடங்கினுர். அவை மூன்று பாகங்களாக அமைந்தன: (1) ஷேக்ஸ்பியரும் அவரது எழுத்துக்களும். (2) ஷேக்ஸ்பியரின்

கவிதைகள். (3) ஷேக்ஸ்பியரின் கவிதைகளில் சுயசரிதையம்சம். ஒவ்வொரு தலைப்பிலும் இரண்டு கட்டுரைகள் எழுதினார். துரதிர்ஷ்டவசமாக அவை முடிவுறவில்லை. எனவே நல்ல ஆழ அகலம்கொண்ட விமரிசனத் தொகுப்பு மராத்தி மொழிக்குக் கிடைக்காமல் போயிற்று. ஹரிபாவர் ஷேக்ஸ்பியரைத் தம் கால மெல்லாம் படித்தவர். அவரது ஷேக்ஸ்பியர் ஆய்வுத் தொகுப்புக் கட்டுரைகள் முடிவுற்றிருந்தால் மராத்திய இலக்கியத்தில் ஒரு புதிய பாதையையே வகுத்துக் கொடுத்திருக்கும். இப்பொழுதுங் கூட மராத்திமொழியில் எந்தவொரு ஆங்கில எழுத்தாளரைப் பற்றியும் அகலமும் வீச்சும்கொண்ட முழுமையான விமரிசனம் கிடையாது. ஹரிபாவர் ஒரே வேளையில் பல காரியங்களைச்செய்து வந்தவர். எனவே அவரது சில நாவல்கள் முடிவுறாததுபோலவே இந்தக் கட்டுரைகளும் முடிவுறாமல் நின்றுவிட்டன.

தமது எழுத்துத் தொழிலின் முதல் தசாப்தத்தில் ஹரிபாவர் ஆறு நாடகங்களை மொழிபெயர்த்தார். அப்போது அவர் பிரெஞ்சு படித்துவந்தார். எனவே மோலியர் (Moliere) எழுதிய லா மாரியேஜ் போர்ஸ் *(1887)*, லே டார்டுப் *(1888–89)*,லே மெட்ல்சின் மால்கிரே லூயி *(1890)* என்ற மூன்றையும் பிரெஞ்சு மூலத்திலிருந்து நேரடியாக மொழிபெயர்த்தார். மொழிபெயர்ப்பு அருமையாக அமைந்திருக்கின்றது. மூன்றாவதாகக் குறிப்பிடப்பட்ட நாடகம் பிரபலமும் பெற்றுவிட்டது. ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தவை கான்கிரீவ் (Congreve) எழுதிய தி மோர்னிங் பிரைட் (The Mourning Bride), ஷேக்ஸ்பியரின் மெஷர் பார் மெஷர் (Measure for Measure), விக்டர் ஹ்யூகோவின் (Victor Hugo) ஹெர்னனி (Hernani) ஆகும். ஹரிபாவரது பிரெஞ்சு மொழிபெயர்ப்புக்களைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். ஏனெனில் அவருக்கு முன்னால் வேறு யாரும் பிரெஞ்சிலிருந்து எதையுமே மராத்திக்கு மொழி பெயர்த்ததில்லை. மேலும் மராத்தியில் அப்போது தரமான இன்பியல் நாடகம் எதுவும் இல்லை. எனவே மோலியரின் நாடகங் கள் மராத்தியில் வெளிவந்து நல்ல முன்மாதிரிகளாக அமைந்தன எனக் கொள்ளலாம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவர் அதற்குமேல் பிரெஞ்சிலிருந்து எதையும் மொழிபெயர்க்கவில்லை. பின்னால் குறிப்பிட்ட மூன்று மொழிபெயர்ப்புக்களும் சிறப்பாக அமைந் திருப்பதாகச் சொல்ல முடியாது. மூலத்தின் போக்கு, மொழி மரபு இரண்டுமே அவ்வளவு விசேஷமில்லை. மேலும் ஷேக்ஸ்பிய ரைக் கருத்துடன் படித்த அவர், அவரது சிறந்த நாடகங்களைவிட்டு விட்டு மெஷர் பார் மெஷரை ஏன் தேர்ந்தெடுத்தார் என்பதும் தெரியவில்லை. ரோமியோ அண்டு ஜூலியட், ஹாம்லெட் மொழிபெயர்ப் புக்களைப்பற்றி அவர் எந்தெந்தக் குறைகளைச் சுட்டிக்காட்டினாரோ

அவையனைத்தும் அவரது இந்த மொழிபெயர்ப்பிலும் காணக்கிடைப் பதும் இன்னொரு வேடிக்கையாகும்.

இந்த மொழிபெயர்ப்புக்களைத் தவிர அவர் சொந்தமாக எழுதிய நாடகங்கள் சாந்த சக்குபாயும், சதி பிங்களாவும் ஆகும். இந்தக் கதைகள் வாசகர்களுக்கு ஏற்கெனவே பழக்கமானவை. சாந்த சக்குபாய் மேடையிலும் வெற்றி பெற்றது. இருப்பினும் மொத்தமாகப் பார்த்தால், நாடகம் ஹரிபாவரது துறை யல்ல; அவரது மேதாவிலாசம் அதில் துலக்கம் பெறக்கூடியதல்ல என்றே சொல்லவேண்டும்.

அவரது பிற பல்வகை எழுத்துக்கள் ஸ்புட கோஷ்டி என்ற தலைப்புடன் நான்கு நூல் தொகுதிகளில் வெளிவந்திருக்கிறது. தலைப்பைக் கண்டால் அவையனைத்தும் கதைகளோ என்று எண்ணத்தோன்றும். ஆனால் நூலில் இருபது சிறுகதைகள் தாம் உள. கட்டுரைகள் எட்டும் (பல்வேறு பொருள்பற்றி எழுதப் பட்டவை). வாழ்க்கைச் சரிதங்கள் பன்னிரெண்டும் காணப்படு கின்றன; அவற்றில் சில மொழிபெயர்ப்புக்கள். கடிதங்களும் இருபத்தியொரு தொகுதியில் காணப்படுகின்றன.

ஹரிபாவர் முப்பதுக்கு மேற்பட்ட சிறுகதைகள் எழுதினார்; அவற்றில் நான்கு நீண்ட சிறுகதைகள். அந்த நான்கில் ஒன்று மகாராஷ்டிரத்தின் பஞ்சத்தை விவரித்தது. அது ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பாகி 'ராம்ஜி' என்ற தலைப்புடன் பிஷர் அண்டு அன்வின்னால்(Fisher and Unwin)`இங்கிலாந்தில் பிரசுரிக்கப்பட்டது. அது இங்கிலாந்தில் பரவலாக வாசிக்கப்பட்டதால் சர்க்கார் அதற்குத் தடைவிதித்தது. இந்தியாவில் நடந்த பிரித்தானிய நிர்வாகம் குறித்து ஆங்கிலப் பொதுமக்களுக்கு மோசமான எண்ணம் உருவாவதைத் தடுப்பதற்காக சர்க்கார் அப்படிச் செய்தது.

சிறுகதை என்ற தெளிவான இலக்கிய உருவம் மகாராஷ்டிரத் தில் இக்காலத்துக்குப் பின்னால்தான் உருக்கொண்டது. ஆனால் ஸ்புட கோஷ்டியில் காணப்படும் ஒரு ஆறுகதைகள் சிறுகதை இலக் கணத்துக்கு நன்கு பொருந்துகின்றன. அப்படிப் பார்த்தால் ஹரி பாவர் மராத்தி நாவலின் நிறுவனர் மட்டுமல்ல மராத்தி சிறுகதை யின் நிறுவனருங்கூட என்றாகிறது. அவருக்கு முன்னால் அந்த உருவத்தில் எந்தப் புனையெழுத்தும் வந்ததில்லை. சில குறிப்பிட்ட கருப்பொருட்களை வெளியிட இப்படிப்பட்ட சின்ன உருவம் உகந் தது என்பதை நன்கு அறிந்துதான் அவர் கையாண்டிருக்கிறார். ஆயினும் தாம் ஒரு புதிய இலக்கிய உருவத்தை மராத்தியில் சிருட்டிக்கும் உணர்வுடன் அதைச் செய்ததாகத் தெரியவில்லை. ஆனால் அவர் அப்படிச் சிருட்டித்தது உண்மை.

அவரது இலக்கிய வாழ்க்கையின் இரண்டாவது தசாப்தத்தில்—பண் லக்ஷியாந்த கோண் கேதோ?வும் மீயும் வெளியிடப்பட்ட காலத்தில்—அவர் இரண்டு தொகுதிக் கடிதங்களையும் வெளியிட்டார். தாய் மகளுக்கு எழுதுவதாக உள்ளவை முதல் தொகுதி. சகுணு பாய்ச்சின் மூலீஸ் புத்ரன் என்பது தலைப்பு. அடுத்தது தந்தை தன் மகனுக்கு எழுதுவதாக உள்ளவை. கோவிந்தராவன்சின் முலாஸ் பத்ரன் என்பது தலைப்பு. அக்காலத்திலே குடும்பங்களில் இளம் மனைவியர் கணவன்மாரிடம் கல்வி கற்றுக்கொள்ளத் தொடங்கினல் வீட்டின் மூத்த பெண்டிர் அதை எதிர்த்தனர். இப்பிரச்னை அவரது கணபதிராவ், பண் லக்ஷியாந்த கோண் கேதோ? ஆகிய நாவல்களிலும் அலசப்பட்டதே. தாய் மகளுக்கு எழுதும் கடிதத்தில், இளம் பெண்கள் பெரிய பெண்டிரிடம்—குறிப்பாக மாமியாரிடம்—எரிச்சல் கொள்ளக்கூடாது. பொறுமையைக் கைக்கொள்ளவேண்டும். எல்லா மாமியார்களும் பொல்லாதவர்கள் அல்ல என்று சகுணுபாய் எழுதுகிருள். எனவே மாமியாரையும் மற்றப் பெண்களையும் பகைத்துக்கொள்ளாமலே படிக்க வேணும் என இதோபதேசம் செய்கிருள். அதுபோலவே கோவிந்தராவ் தமது கடிதங்களிலே மூத்த தலைமுறையினரின் அனுபவங்களை இளைய தலைமுறை பயன்படுத்திக்கொள்ளவேண்டும்; அவர்கள் பேரிலே பொறுமை இழக்கக்கூடாது என்று மகனுக்கு புத்தி சொல்லுகிருர்.

சமூக சீர்திருத்தங்களிலே ஹரிபாவர் ஆர்வங்கொண்டிருந்தாராயினும் அவர் இயல்பிலே மிதம் அனுசரிப்பவர் என்பதை இந்தக் கடிதங்கள் சொல்லுகின்றன. அவர் சமூக சீர்திருத்தங்களில் மட்டுமே ஆர்வங்காட்டினவர் அல்ல. அவருடைய நாவல்களை நன்கு படித்தால், அவர் அரசியல், பொருளாதாரம், தொழில் முதலியவற்றைக் குறித்தும் பிரக்ஞையுள்ளவராக இருந்தார் என்பது தெரியவருகிறது. ஆக மொத்தத்தில் அவரை ஒரு போதனையாளர், சமூக சீர்திருத்தவாதி என்று பொதுவாகச் சொல்லலாம்.

ஹரிபாவர் ஏறத்தாழ ஒருடஜன் வாழ்க்கைச் சரிதங்கள் எழுதியுள்ளார். அவை புகழ்பெற்ற ஆண்கள் பெண்களைப்பற்றியவை, சுருக்கமானவை. அவற்றில் சில ஆங்கிலமூலத்தின் மொழிபெயர்ப்புக்கள். பலவகைப்பட்ட தலைப்புக்களிலே அவர் கட்டுரைகளும் எழுதியுள்ளார். அவை நல்ல விஷயஞானமும் அறிவும் அளிக்கக்கூடியவையாகக் காணப்படுகின்றன.

நாவலாசிரியரான ஹரிபாவர் சமுதாயத் தொண்டர் என்று பெயர்பெற்ற பின்னர் அவரைப் பல முக்கிய நிகழ்ச்சிகளுக்கு அழைத்து உரை நிகழ்த்துமாறு கேட்டுக்கொண்டனர். பெரும்

பாலான உரைகள் இலக்கியம் குறித்தவையே. அத்துறையில் தான் அவர் மனம் மிகுதியும் லயித்திருந்தது என்பதில் சந்தேகமில்லை. பூனா முற்போக்கு நண்பர்கள் சங்கத்தில் (Frinds Liberal Association) அவர் ஆங்கிலத்தில் இரண்டு உரைகள் ஆற்றினார். 'புனைகதைத்தத்துவம்', 'புனைகதையில் யதார்த்தம்' என்ற அந்த இரண்டு உரைகளும் கிடைக்கவில்லை. 'நாவல்கள்' என்ற தலைப்பில் மராத்தியில் பம்பாயில் ஒரு உரை ஆற்றினார். 'இலையுதிர்கால சொற்பொழிவுகள்' நிரலில் அது ஆற்றப்பட்டது. அதுவும் இப்போது கிடைக்கவில்லை. இந்த உரையில் அவர் நாவலை நான்கு வகைகளாகப் பிரித்தார். இலட்சியம், கற்பனைமிகை, உணர்ச்சி மிகை, யதார்த்தம் என்று நாலுவகை. இந்த வகைகளைப்பற்றி அவர் பிற இடங்களிலும் குறிப்பிட்டுள்ளார்.

மராத்தியில் அவர் ஆற்றிய மூன்று உரைகள் கிடைத்திருக்கின்றன. அவை நுட்பமான கவனிப்புக்கு உரியவை. தானா, மராத்தி கிரந்தசங்கிரகாலயாவின் (1903) வருடாந்திர விழாவில் அவர் ஆற்றிய உரையின் தலைப்பு 'மராத்திய இலக்கிய ஆய்வு' என்பதாகும். அதில் 'வாக்கு' என்ற சொல்லின் பொருளைக் குறித்துப் பேசுகிறார். பின்னர் இலக்கியம் என்பதன் பொருளை வரையறுக்கிறார். லார்டு மார்லி (Lord Morley), சேன்ட் பேவே (Sainte Beuve) என்போர் அதுகுறித்துச் சொன்ன விளக்கங்களை ஆய்கிறார். பின்னர் மராத்தி இலக்கிய வரலாறு முழுமையும் மேலோட்டமாக எடுத்துச் சொல்லுகிறார். முடிவில் நூலகங்களின் முக்கியத்துவத்தைப்பற்றியும் பேசுகிறார். சமுதாயத்தின் பண்பாட்டு வாழ்க்கை வளர்ச்சிக்கு நூலகங்கள் இன்றியமையாதவை என்று கூறி உரையை முடிக்கிறார்.

மம்பை மராத்தி கிரந்த சங்கிரகாலயாவில் 1911-ல் நடந்த வருடாந்திர விழாவில் அவர் நிகழ்த்திய உரை மிகப் பிரசித்தி வாய்ந்தது. இன்றும் பலருடைய கவனிப்பைப் பெறுவது, இதன் தலைப்பு 'விதக்தா வாங்மயா' என்பதாகும். வீதக்தா (அல்லது அழகியல் நோக்கு) வுக்கும் இலக்கியத்துக்குமுள்ள உறவை ஆராய்கிறார். இங்கே இவர் இலக்கியத்தை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கிறார். இதில் அவர் டி குவின்ஸி (De Quincey)யைப் பின்பற்றுவதாகத் தோன்றுகிறது. ஆயினும் அவரது பெயர் குறிப்பிடப்படவில்லை. ஒரு பிரிவு 'விஞ்ஞான இலக்கியம்' அல்லது 'அறிவு இலக்கியம்' எனப்படுகிறது. இதில் விஷயம் முக்கியம், உண்மையை எடுத்துச் சொல்லுவது. சொல்லுகிற முறை முக்கியம் பெறுவதில்லை. அழகுடனும் சொல்லப்படலாம்; அழகின்றியும் சொல்லப் படலாம். ஆனால் அடுத்த பிரிவில் சொல்லுகின்ற முறை மிகவும் முக்கியத்துவம் பெறுகிறது. இங்கேயும் சொல்லப்படுகின்ற

பொருள் உண்மைதான். ஆனல் அதைச் சொல்லுகின்ற முறை கண்டிப்பாய் அழகுடன் அமையவேண்டும், வாசகனுக்குக் கவர்ச்சி அளிக்கவேண்டும். எழுத்து நளினமாக நாகரிகமாக அமைய வேண்டும். இந்த வகையை டி குவின்ஸி 'சக்தி இலக்கியம்' என அழைத்தார்.

ஹரிபாவர் அதையும் இரண்டு வகையாகப் பிரித்துவிடுகிருர். ஒன்று நாகரிக எழுத்து. அடுத்தது அழகு எழுத்து அல்லது கலை எழுத்து. கடைசியாகச் சொல்லப்பட்டதுதான் விதக்தா வாங்மயா. இதுவே உன்னதமான இலக்கியம். வாசகனை இது உண்மைக்கு இட்டுச் செல்லுகின்றது. அப்படி இட்டுச் செல்கையில் அவனைக் கவர்வதற்கும் அவனுக்கு இன்பம் அளிப்பதற்கும் பல அழகியல் வழிகள் கையாளப்படுகின்றன. நாவலில் கதைக் கட்டுமானத்தின் இயல்பு அப்படியொரு வழியே, இந்த இலக்கியத்தின் வெளிப்படையான நோக்கம் வாசகனைக் கவர்வது. உடனடி நோக்கம் அதுவாயினும், அது அவனை மகிழ்வித்து அவனுக்கொரு பொழுதுபோக்கு சாதனத்தை அளிப்பதுபோல அது தோன்றினலும், முடிவான நோக்கம் அதனுள் மறைந்துள்ளது, அது உன்னதமானது. அவனை அறிவொளிக்குள் இட்டு உண்மையையும் நன்மையையும் அளிப்பது அதனது முடிவான நோக்கம். மத்லி ஸ்திதிக்கு அவர் எழுதிய முன்னுரையில்,

स्वादुकाव्यरसोनिमश्रं वाक्यार्थमुपभुञ्जते ।
प्रथमालीढमघवः पिबन्ति कटुमेषनम् ॥

பின்னர் கவிதையைப்பற்றிப் பேசுகிருர் (கவிதை என்ற சொல்லுக்குப் பொதுவாக இலக்கியம் என்ற பொருளும் உண்டு) வண்ண, வரைபட ஓவியக் கலைகளோடு அதை ஒப்பிடுகிருர். சமஸ்கிருத காவிய சாஸ்திரங்களில் கவிதைக்குக் கூறப்பட்டிருக்கும் விளக்கங்களையும் அத்துடன் ஐரோப்பிய தத்துவ ஞானிகள் தரும் விளக்கங்களையும்பற்றிச் சொல்லுகிருர். அவருடைய கருத்துப்படி கவிதை (அழகியல் இலக்கியம்) என்பது கற்பனையின் விளைவு. அது வாசகனின் மனத்தை உருக்குகிறது; மகிழ்விக்கிறது. அந்த நிலையிலே அவன் இயற்கை, மானுடம் இவற்றில் கிடக்கும் நித்திய சத்தியங்களைத் தரிசிக்கத் துணைபுரிகிறது. அதன் எல்லைக்குட்படாத கருப்பொருள் இல்லை. இது அற்பம், இது ஆகாது, இது அசாத்தியம் என்ற எந்தப் பொருளும் ஒதுக்கப்படவேண்டியதில்லை.

அடுத்து அவர் இலக்கியத்தைப்பற்றிப் பேசியது 1912ல் நடந்த மராத்தி இலக்கிய மாநாட்டின் அகோல அமர்வில் ஆகும். அது தலைமையுரை. பொதுவாக இலக்கியம் குறித்து விவாதிக்

கிறார். முடிவாக நான்கு ஆலோசனைகள் தருகிறார். அவை இன்றைய நிலைமைக்கும் பொருத்தமாகவே உள.

1. இந்திய மொழிகள் பல்கலைக்கழக அளவில் கட்டாய பாடமாக வேண்டும்.

2. மெட்ரிகுலேஷன் வரையில் மராத்தி மொழி பாட போதனு மொழியாதல் வேண்டும்.

3. மராத்தி அகராதியின் புதுப் பதிப்பு தயாரிக்கப்படல் வேண்டும்.

4. இந்திய மொழிகள் அனைத்துக்கும் விஞ்ஞானச் சொற்கள் பொதுவாக இருத்தல் வேண்டும்.

இலக்கியத்தின்மீது அவர் கொண்ட பற்றும் மதிப்பும் இந்த உரைகளினின்று நன்கு தெரிய வருகிறது. இந்திய மொழிகளின் வளர்ச்சிபற்றி அவர் உண்மையான கரிசனங்கொண்டிருந்தார்.

குறிப்பான கவனத்துக்குரிய அவரது இன்னொரு உரை பகவத் கீதைபற்றியதாகும். 1901ல் ஆங்கிலத்தில் கீதையின் போதனைபற்றி சொற்பொழிவாற்றினார். மனித ஜீவன்கள் கேட்கின்ற கேள்விகள் மூன்று: நான் யார்? நான் செய்யவேண்டுவது யாது? நான் எதிர் நோக்க வேண்டுவது எது? முதலாவது ஆரம்பக் கேள்வி; மூன்றாவது துணைக் கேள்வி. இரண்டாவதுதான் முக்கிய கேள்வி. இதற்கு விடையாவது: 'அந்தந்த வேளைகளில் எழுகின்ற கடமைகளை உன்னால் இயன்றவரை செய்?' என்பதாகும். 'கர்ம யோகத்தின் சாரம் இந்தப் பதிலில் அடங்கியிருக்கின்றது. தன்னையறிவதே முடிவான இலட்சியம் என்று பல நெறிகள் கூறுகின்றன. அந்த நெறிகளை ஒருங்கிணைக்கும் முயற்சி கீதையில் தெரிகின்றது என்றும் அவர் அந்த உரையில் குறிப்பிடுகின்றார்.

'இளைஞர்களுக்கு இதோபதேசம்' என்ற தலைப்பின்கீழ் பத்து உரைகள் இருக்கின்றன. தூதன் மராத்தி வித்யாலயாவில் கோடை விடுப்பின் முன்பு மாணவருக்கு ஆற்றியவை. அப்பள்ளி விஷ்ணு சாஸ்திரி சிப்லங்கர் நினைவாக நிறுவப்பட்டது. நிறுவனர்களில் ஹரிபாவரும் ஒருவர்.

ஹரிபாவர் காசிபாய் காந்திகருக்குக் கடிதங்கள் எழுதியது முன்னரே குறிப்பிடப்பட்டது. அவற்றைப்பற்றி இப்போதும் சில வார்த்தைகள் சொல்வது பொருத்தம். இந்தத் தொகுப்பில் முப்பத்திமூன்று கடிதங்கள் இருக்கின்றன. தேதியிடப்பட்டவை. முதல் கடிதம் 6 மே 1885 என்றும், கடைசி 7 மார்ச்சு 1889 என்றும் இருக்கிறது. தேதியிடப்படாத கடிதங்கள் இரண்டு இருக்

கின்றன. இவையிரண்டும் முடிவுறுதவை. பெரும்பாலான கடிதங்கள் காசிபாய்க்கும், ஒருசில அவரது கணவர் கோவிந்த ராவுக்கும் எழுதப்பட்டவை. வெளியிடப்படும் கருத்துடன் இவை எழுதப்படவில்லை. எனவே திறந்த மனத்துடன் கருத்துக்கள் வெளியாகின்றன. அவரது குடும்ப வாழ்க்கை, மன வருத்தங்கள், வாசித்த, ஆராய்ந்த நூல்கள், பத்திரிகை தொடங்கவிருந்த திட்டங்கள், பொது வாழ்க்கையில் சந்திக்க நேர்ந்த மனிதர்களைப்பற்றிய அபிப்பிராயங்கள் இவையெல்லாம் அக்கடிதங்களில் காணப்படுகின்றன. நீண்ட கடிதமொன்றைப்பற்றிக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். இந்தியாவில் கிறிஸ்தவ மிஷனெரிகள் செய்து வந்த நற்பணிகளைப் பற்றி அவர் அக்கடிதத்தில் போற்றியிருக்கிறார். அம்மாதிரியான கருத்துக்களை அந்தரங்கமாக வெளியிடுவதற்கும்கூட அக்காலத்தில் மிகுந்த நெஞ்சுரம் தேவைப்பட்டது. கடிதத் தொகுதிக்கு காசிபாய் காந்திகர் முன்னுரை எழுதியிருக்கின்றார். அவரும் அவர் கணவரும் ஹரிபாவருக்கு நிறைய கடிதங்கள் எழுதினர்; அவற்றைப் பாதுகாத்து வைக்கப்போவதாக ஹரிபாவர் அவர்களிடம் வாக்களித்தார். இருப்பினும் அந்தக் கடிதங்கள் கிடைக்கவில்லை. அவர் இறந்தபின் எடுத்த மற்றத் தாள்களுடன் அவை இல்லை. ஹரிபாவர் ஒரு சுயசரிதம் எழுதத் தொடங்கியிருந்தார். அதுவும் இடைக்கவில்லை. அவருடைய வேலையாட்களில் ஒருவன் இந்தத் தாள்களை எரித்திருக்கவேண்டும் என காசிபாய் ஊகம் செய்கிறார். இது வருந்தத்தக்கது. ஹரிபாவருக்குக் காசிபாய், கோவிந்தராவ் எழுதிய கடிதங்களும், சுயசரிதையும் கிடைத்துப் பிரசுரமாகியிருந்தால், அவரைப்பற்றி நாம் மேலும் அதிகமாக அறிந்துகொண்டிருக்க முடியும்.

இந்தப் பல்வகை எழுத்து, உரைத் தொகுதிகள் மூலம் ஹரிபாவர் பல்வேறு துறைகளில் ஆர்வங்கொண்டிருந்தவர் என்பது நன்கு புலனுகிறது. அத்துறைகளில் அவருக்கு ஏராளமான அறிவு இருந்திருக்கிறது. அவரது முக்கிய நோக்கம் சமுதாயத்திலே மக்களது அகவிருளை அகற்றி அறிவொளியை வீசச் செய்வது என்பதாக இருந்தது. தமது எழுத்துக்கள், உரைகள் மூலம் ஆண்கள், பெண்கள், முதியோர், இளையோர் எல்லோருடனும் அறிவைப் பகிர்ந்துகொள்ள விழைந்தார். அவரது சமுதாயக் கடமையுணர்வு மிகவும் வலுவானது என்பதும் தெரியவருகிறது.

இருப்பினும் மராத்தி வாசகர்களை அவரது நாவல்களே மிகுதியும் பாதித்தன. அது நிலையான பாதிப்புங்கூட. நாவல் எழுது கலையிலும் அவர் மிகுந்த தாக்கம் ஏற்படுத்தினர். அவரது நாவல்கள் வெளியான பின்னர், நாவல் இலக்கிய வகை மக்களால் மிகுதியும் விரும்பப்படலாயிற்று. விளைவாக அவர் காலத்திலேயே ஏராள

மான நாவல்கள் வெளிவரலாயின. இருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் நாவல் வெளியிடும் பதிப்பகங்களும் பெருகத் தொடங்கின. அதுபோலவே சிறுகதையும் அவர் காலத்தில் ஜனரஞ்சகம் பெறத் தொடங்கி நாளடைவில் சிறுகதையுருவம் ஒரு உருப்படியான இலக்கிய வகையாக நிலைபெற்றது.

மராத்தி இலக்கிய விமரிசன வரலாற்றிலும் ஹரிபாவரது பங்கு நிலையானது. அவர் காலத்தில் நிகழ்ந்த பல இலக்கிய சர்ச்சைகளைக் குறித்து அவர் தெளிவான கருத்துக்கள் வெளியிட்டார். மம்பை மராத்தி கிரந்த சங்கிரகாலயா உரை, (1911) அகோலா சொற்பொழிவு (1912), ஷேக்ஸ்பியர் மொழி பெயர்ப்பு குறித்த விமரிசனம் இவையெல்லாம் மைல் கல்களாகக் கருதப்படுகின்றன. அவரது முதல் நாவல் வெளியாகி இப்போது ஏறத்தாழ ஒரு நூற்றுண்டு ஆகிவிட்டது. கடைசி நாவல் பிரசுரமாகி அறுபது ஆண்டுகள் ஆகின்றன. ஆயினும், இன்றும் அவர் வாசகர்களின் பெரு விருப்புக்குரிய நாவலாசிரியராகவே இருக்கின்றுர். அதுபோலவே எழுத்தாளர்களும் விமரிசகர்களும் அவரை மரியாதையுடன் நினைவுகூர்ந்து வருகின்றனர்.

## ஹரிநாராயண ஆப்தேயின் முக்கிய நூல்கள்

### சமூக நாவல்கள்

| | |
|---|---|
| मधली स्थिति | மத்லி ஸ்திதி |
| गणपत राव | கணபத் ராவ் |
| पण लक्ष्यांत कौन केतो ? | பண் லக்ஷ்யாந்த் கோன் கேதோ? |
| यशवंतराव खरे | யஷ்வந்தராவ் கரே |
| मी | மீ |
| जग हें असे आहे | ஜக் ஹை ஆசே ஆஹே |
| भयंकर दिव्य | பயங்கர் திவ்ய |
| आजाच | ஆஜாச் |
| मायेचा बाजार | மாயேச்ச பஜார் |
| कर्मयोग | கர்மயோகா |
| चाणक्ष पणचा कलास | சாணக்ஷ் பணுச்ச கலாஸ் |

### வரலாற்று நாவல்கள்

| | |
|---|---|
| म्हैसूरचा वाघ | மஹ்சூர்ச்ச வாக் |
| उष:काल | உஷாக்கால் |
| केवल स्वराज्यासाठी | கேவல் ஸ்வராஜ்யசதி |
| रूपनगरची राजकन्या | ரூப்நகர்ச்சி ராஜ்கன்யா |
| चंद्रगुप्त | சந்திரகுப்தா |
| सूर्योदय | சூரியோதயா |
| मध्याह्न | மத்யான |
| सूर्य ग्रहण | சூரிய கிரஹண் |
| कालकूट | காலகூட் |
| वज्रघाट | வஜ்ரகாட் |

गड आला पण सिंह गेला — *கத் ஆலா பண் சின்ஹ கேலா*

**நாடகங்கள்**

जबरीचा विवाह — *ஜபரிச்சா விவாக*

धूर्त-विलासित — *தூர்த்த-விலாசித்*

मारून मुटकून वैद्यबुवा — *மாருன் முட்கூன் வைத்ய புவ*

**மாலியரின் பிரெஞ்சு நாடகங்களின் மொழிபெயர்ப்புகள்**

श्रुतकीर्ति चरित — *சுருத கீர்த்திச் சரிதா*

जयध्वाज अथवा असूयाग्निशमन — *ஜயத்வாஜா அல்லது அசூயாக்னி சாமான*

सुमती विजय — *சுமதி விஜய*

संत सखूबाई — *சாந்த சக்குபாய்*

सती पिंगला — *சதி பிங்கலா*

**பிற வகைகள்**

स्फुट गोष्टी भाग १ ते ४ *ஸ்புட் கோஷ்டி 1 முதல் 4 பாகங்கள்*

*2. 1903 தாணேயில் ஆற்றிய தலைமையுரை*

*3. 1911 பம்பாயில் ஆற்றிய தலைமையுரை*

*4. 1912 அகோலாவில் ஆற்றிய தலைமையுரை*

*(2, 3, 4 முதலியன இலக்கியம், இலக்கிய விமரிசனம், இலக்கியப் பிரச்சினைகள் ஆகியவை குறித்து ஆற்றிய சொற்பொழிவுகள் ஆகும்.)*

## ஆதார நூல் பட்டியல்


हरि भाऊ

डॉ. ल. म. भिंगारे

*ஹரிபாவ்*

*டாக்டர் எல். எம். பிங்காரே*

हरि नारायण आप्ते (चरित्र व वाङ्मय-विवेचन)

कु. वेणुबाई पानसे

*ஹரிநாராயண ஆப்தே (வாழ்க்கையும் இலக்கியமும்)*

*செல்வி வேணுபாய் பான்ஸே*

प. वा. हरि नारायण आप्ते यांच्या आठवणी व कादंबऱ्या

वाग्भट नारायण देशपांडे

*காலமான ஹரிநாராயண ஆப்தேயின் வாழ்க்கைக் குறிப்புக்களும் நாவல்களும்*

*வாக்பட் நாராயண் தேஷ்பாண்டே*

हरीभाऊंची सामाजिक कादंबरी

वा. लू. कुलकर्णी

*ஹரிபாவரின் சமூக நாவல்கள்*

*டபிள்யூ. எல். குல்கர்ணி*

हरीभाऊंच्या कादंबरींतील व्यक्ती

उषा हस्तक

*ஹரிபாவர் நாவல்களின் கதாபாத்திரங்கள்*

*உஷா ஹஸ்தக்*

हरीभाऊ आप्ते ह्यांच्या कादंबऱ्या

अचला जोशी

*ஹரிபாவ் ஆப்தேயின் நாவல்கள்*

*அசலா ஜோஷி*

ह. ना. आप्ते याचें कादंबरी-तंत्र

डॉ. कृ. रा. सावंत

ஹரிபாவர் நாவல்களில் செய்திறன்
டாக்டர் கே. ஆர். சாவன்த்

मराठी कादंबरीचें पहिलें शतक
सौ. कुसुमादेवी देशपांडे

மராத்தி நாவலின் முதல் நூற்றண்டுகள்
திருமதி குஸுமாதேவி தேஷ்பாண்டே

कोल्हटकरांचा लेखसंग्रह
संपातित

கோல்ஹாட்காரின் எழுத்துக்கள்
பதிப்பிக்கப்பட்டது

हरिभाऊंचीं पत्रें
सं. वाग्भट नारायण देशपांडे

ஹரிபாவரின் கடிதங்கள்
பதிப்பு: வாக்பட் நாராயண் தேஷ்பாண்டே

मासिक मनोरंजन : एप्रिल १९१९
हरिभाऊ विशेषक

மாசிகை மனோரஞ்ஜன்: ஏப்ரல் 1919
விசேஷ வெளியீடு

शेकसपिअरच्या भाषांतराचीं दोन परीक्षणे, ह. ना. आप्ते
सं. डॉ. एस. जी. मालशे

ஷேக்ஸ்பியர் நாடகங்கள் மொழிபெயர்ப்புகள் பற்றிய இரண்டு விமரிசனங்கள்—ஹ. நா. ஆப்தே
பதிப்பு: டாக்டர் எஸ். ஜி. மால்ஷே

## இந்திய இலக்கியச் சிற்பிகள்

### இந்த வரிசையில் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள நூல்கள்

லட்சுமி நாத பெஸ்பருவா (ஹேம் பருவா) *க. த. திருநாவுக்கரசு* | கபீர் (பிரபாகர் மாச்வே) *தி. வேங்கட கிருஷ்ணய்யங்கார்* | கேசவஸுதர் (பிரபாகர் மாச்வே) *இராம. கோபிநாதன்* | ஈசுவர் சந்திர வித்யாசாகர் (ஹிரண்மய் பானர்ஜி) *இராம. கோபிநாதன்* | ராஜாராம் மோகன் ராய் (*சௌமியேந்திரநாத தாகூர்*) *க. த. திருநாவுக்கரசு* | பிரேம் சந்த் (பிரகாஷ் சந்திர குப்தா) *சரஸ்வதி ராம்நாத்* | குமாரன் ஆசான் (கே. எம். ஜார்ஜ்) *கே. சி. சங்கரநாராயணன்* | தாருதத் (பத்மினி ஸென் குப்தா) *ஆ. சீனிவாசராகவன்* | வீரேசலிங்கம் (வி. ஆர். நார்லா) *நா. பார்த்தசாரதி* | ஸ்ரீ அரவிந்தர் (மனோஜ் தாஸ்) *பி. கோதண்டராமன்* | மீராபாய் (உஷா நில்சன்) *எஸ். கந்தசாமி 'துறைவன்'* | B. M. ஸ்ரீகண்டய்யா (A. N. மூர்த்திராவ்) *இரா. மதிவாணன்* | சந்துமேனன் (டி. சி. சங்கரமேனன்) *கு. இராஜவேலு* | காஸி நஸ்ருல் இஸ்லாம் (கோபால் ஹால்டார்) *கே. பி. எஸ். ஹமீத்* | வள்ளத்தோள் (ஹிருதயகுமாரி) *மா. இளையபெருமாள்* | பசவேஸ்வரர் (H. திப்பேருத்ர சுவாமி) *T. K. நாகாம்பாள்* | பாணபட்டர் (கே. கிருஷ்ணமூர்த்தி) *பெ. திருஞான சம்பந்தன்* | பக்கிம் சந்திர சாட்டர்ஜி (சு. ச. ஸென் குப்தா) *அசோகமித்திரன்* | மகரிஷி தேவேந்திரநாத தாகூர் (நா. சௌதுரி) *கா. மீனாட்சிசுந்தரம்* | தாராசங்கர் பந்தோபாத்யாயர் (மஹாஸ்வேதாதேவி) *கு. இராஜவேலு* | நானாலால் (U. M. மணியார்) *நா. பார்த்தசாரதி* | ஜீவனானந்த தாஸ் (சி. தாஸ் குப்தா) *க. த. திருநாவுக்கரசு* | பாரதியார் *மூலமும் தமிழாக்கமும்* (பிரேமா நந்தகுமார்) | வேதம் வேங்கடராய சாஸ்திரிகள் (வேதம் வேங்கடராய சாஸ்திரி) *சி. செல்லப்பன்* | புத்ததேவ போஸ் (அலோகரஞ்சன் தாஸ் குப்தா) *த. வே. வீராசாமி* | மாணிக்கவாசகர் *மூலமும் தமிழாக்கமும்* (G. வன்மீக நாதன்) | ஜெயதேவர் (சுநீதிகுமார் சாட்டர்ஜி) *டி. எஸ். பார்த்தசாரதி* | மாணிக் பந்தோபாத்யாயர் (சரோஜ் மோகன் மித்ரா) *எஸ். கந்தசாமி 'துறைவன்'* | தமிழ்த் தாத்தா (கி. வா. ஜகந்நாதன்) | கல்ஹணர் (சோம்நாத் தர்) *எஸ். கிருஷ்ணமூர்த்தி* | சரளாதாசர் (கிருஷ்ண சந்திர பாணிகிராகி) *தே. ஆண்டியப்பன்* | தத்தகவி (அனுராத போட்தார்) *இராம. கோபிநாதன்* | நர்மதாசங்கர் (குலாப்தாஸ் ப்ரோக்கர்) *ஆதவன் சுந்தரம்* | பக்கிர்மோகன் சேனாபதி (மாயாதர் மான்சின்ஹா) *க. சி. கமலையா* | நாமதேவர் (மாதவகோபால தேஷ்முக்) *சரஸ்வதி ராம்நாத்* | ஜயசங்கர் பிரசாத் (ஆர். சி. ஷா) எம். எஸ். கேசவன்.

*(அடைப்புக்குள் உள்ளது மூல ஆசிரியரின் பெயர்)*

பொழுதுபோக்கு நிலையில் கிடந்த நவீன மராத்தி நாவலின் தரத்தை உயர்த்தி அதற்குக் கலை அந்தஸ்து அளித்தவர் ஹரிநாராயண ஆப்தே ஆவார் (1864—1919). பல சமூக, வரலாற்று நாவல்களையும், சிறுகதைகளையும் எழுதிய இவர் அவ்விலக்கிய உருவங்களின் தந்தை என இப்போது ஒருமுகமாகப் போற்றப்படுகின்றார். ஆப்தே சமஸ்கிருத நூல்களை ஆய்ந்து கற்றவர். ஆங்கில ஐரோப்பிய இலக்கியங்களை நன்கு அறிந்தவர்.

எழுத்தும், படிப்புமே அவரது தொழிலாயினும் அவர் ஒரு புத்தகப் புழுவல்ல. தந்தக் கோபுரவாசியுமல்ல. பொது வாழ்வில் சிறப்பாகவே பங்கு பற்றியவர். 1890-ல் 'காரமானுக்' என்ற பத்திரிகையை சொந்தத்தில் நிறுவி, அதில் தமது நாவல்களையும் சிறுகதைகளையும் வெளியிட்டு வந்தார். அகார்கர் காலமானபின்பு 'சுதரார்க்' சஞ்சிகையைப் பதிப்பிப்பதில் உதவி வந்தார் 'தியனெப் பிரகாஷ்' என்ற பரந்த கொள்கைத் தினசரி ஒன்றைச் சிலகாலம் பதிப்பித்து வந்தார். பொது வாசகர்களும், மராத்தி இலக்கியத்தை ஊன்றிப் படிக்கும் சிறப்பு வாசகர்களும் இன்றும் அவரது நூல்களை விரும்பிப் படிக்கின்றனர்.

இந்தச் சிறு நூலை எழுதிய ஆர். பி. ஜோஷி ஒரு சிறந்த எழுத்தாளர். ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றி 1968-ல் ஓய்வுபெற்ற இவரது சிறுகதைகள், கட்டுரைகள், விமரிசனங்கள், பயண எழுத்துக்கள், சமுதாயக் கட்டுரைகள் முதலியன மராத்தி மொழியின் சிறந்த சஞ்சிகைகளிலும், பத்திரிகைகளிலும் வெளிவந்துள்ளன.

அட்டை அமைப்பு: சத்யஜித் ராய்

உருவ ஓவியம் : சி. எம். ருத்ரா

விலை: ரூ. 4·00